


## ஏனெனில் புதிய மேம்பட்ட ஃபாரெக்ஸ்® முதன்முதலாக திட உணவிற்கு மாறும் குழந்தைக்கென இன்றியமையாத உட்பொருள்கள் சரியான அளவுகளில் சேர்க்கப்பட்டதாகும்.

குழந்தையின் வளர்ச்சிக்கும் மென்மையான செரிக்கும் சக்திக்கெனவும் சரியான அளவில் புரதங்களும் கொழுப்புச் சத்துக்களும் அடங்கியதாகும் ஃபாரெக்ஸ்.

குழந்தையின் இரத்தத்தை ஆரோக்கியமாக வைக்க இதில் போதுமான அளவு இரும்புச் சத்தும் உள்ளது.

குழந்தையின் எலும்புகளும் பற்களும் திடமாக வளருவதற்கு உகந்த விகிதத்தில் கால்ஷியம்-ஃபாஸ்ஃபரஸ் அடங்கியதாகும் ஃபாரெக்ஸ்.

இவை தவிர, புதிய ஃபாரெக்ஸ் கலப்பதற்கு எளிதானது...சுவைமிக்கது.




பால் சேர்க்கத் தேவையில்லை!
நீருடன் கலந்து கொடுத்தால் போதும்.

புதிய மேம்பட்ட ஃபாரெக்ஸ்®

CLARION/B/GX/13/203 TMA

# பம்பாய் மசாலா

### அக்கரைக்கு இக்கரை

சென்னைக் கடைகளில், 'இது பம்பாயில் தயார் செய்தது' என்று பொருள்களை விற்பதுபோல், பம்பாய் நகரக்கடைவீதிகளில்முறுக்குப் பிழியும் பிளாஸ்டிக் சாமான்கள், வளையல்கள் போன்றவற்றை 'மதராஸ் மேக்' என்று கூவி விற்பனை செய்கின்றனர். அக்கரைக்கு இக்கரை பச்சை!

### 'அங்காடியா' அஞ்சல்

பம்பாயிலிருந்து பரோடா, அகமதாபாத், சூரத் போன்ற நகரங்களுக்குத் தபால் மூலம் கடிதம், பார்சல்களை வியாபாரிகள் அனுப்புவதில்லை.



தனியார் நடத்தும் 'அங்காடியா' சர்வீஸில் கொடுத்து விட்டால் போதும். கட்டணமாக ஒரு தொகை வசூலித்து ரசீது தரப்படுகிறது. மறுநாள் காலையில் பத்திரமாகப் பட்டுவாடா ஆகி விடுகிறது. இந்த 'அங்காடியா' சர்வீஸில் தங்கம், வைரம் போன்ற விலையுயர்ந்த சரக்குகளைக்கூட பார்சல் அனுப்புகின்றனர். சிலர் பணத்தை இங்கே செலுத்தினால் மறுநாள் — சில சமயம் அதே நாள் கூட — வேற்றூரில் பட்டுவாடா செய்யப்படுகிறது! நாணயம்தான் இதிலே மூலதனம்!

### தமிழ் 'சேட்டு'க்கள்!

பம்பாயில் புது மாதிரியான தமிழ் புழக்கத்தில் இருக்கிறது. "'பந்த்' ஆயிடுச்சு" என்றால் மூடிவிட்டார்கள். கராப் (ரிப்பேர்), களாஸ் (தீர்ந்துவிட்டது). உப்பர் (மேலே) போன்ற சொற்களும் தமிழாகி விட்டன.

முதலாளிகளை 'சேட்டு' என்கின்றனர். நம் தமிழர்



கள் பலர் 'மணி சேட்டு' 'ராஜன் சேட்டு' 'பயில்வான் சேட்டு' என்று அழைக்கப்படுகின்றனர்.

### தமிழர்களிடம் தமிழ் மயக்கம்

"பாருடி, அந்தத் தடியன் எப்படிப் பார்க்கிறான்!"



என்று வேற்று மொழிக்காரர்களாக நினைத்து நம் ஊர்ப் பெண்கள் பேச,

"நாங்க தடியன் இல்லேம்மா, தமிழுங்கதான்" என்று பதில் வர, அசடு வழியும் புன்னகையுடன் ஒரு 'சாரி!'; பெருந்தன்மையான ஒரு "பர்வா நை" — இப்படிப்பட்ட பேச்சுக்கள் பம்பாயில் சர்வ சாதாரணம்.

### Sharing Taxi

பம்பாயில் டாக்ஸி ஓட்டிகள் பயணிகளை சிரமப்படுத்துவதில்லை. மிகக் குறைந்த தூரமாக இருந்தாலும் வந்து விடுகின்றனர். 'மேலே போட்டுக் கொடுக்கிறதும்,' 'ப்ளாட் ரேட்டுகளும் கிடையாது.

எல்லாவற்றையும் விடச் சிறப்பான அம்சம் Sharing a Taxi. டாக்ஸி டிரைவரே வி. டி., சர்ச் கேட் போன்ற முக்கிய இடங்களில் நாலு பயணிகளிடம் பங்கு போட்டுவசூலித்துக்கொள்



கிறார். குறிப்பிட்ட தூரத்துக்கு ஒரு பயணிக்கு இவ்வளவு பைசா!' தகராறு இல்லை.

### புறாக்கள்

பம்பாயில் காக்கைகளை விடப் புறாக்களே அதிகம்.



புறாக்களை பக்தியுடன் வளர்க்கின்றனர். புறாவைக் கறி சமைப்பதோ, 'ரோஸ்ட்' போடுவதோ நடவாத காரியம். ஒவ்வொரு வீட்டு மாடியிலும் ஜன்னல்களில் புறாக்கள் குடியிருக்கின்றன. கதவைத் திறந்து விட்டால் போதும், உள்ளே நுழைந்து விடும். புறாக்கள் வீடுகளில் முட்டையிட்டு அடை காத்துக் குஞ்சு பொறித்தால் வீட்டுக்காரர்கள் துன்புறுத்துவதில்லை. புறாக்களுக்குக் காலையில் பொரி கடலை போடுவதைப் புனிதமாகக் கருதுகின்றனர்.



* தாராவி
— பருந்துப் பார்வை

* உயர்ந்த கட்டடங்கள்: தாழ்ந்த குடிசைகள்.



# தாராவி தமிழர்கள்!

**ப**ம்பாய் என்றாலே பல மாடிக் கட்டடங்களும், சாலைகளும் கடற்கரைகளும்தான் நினைவுக்கு வருகின்றன. ஆனால் ஒவ்வொரு பல மாடிக் கட்டடத்துக்குப் பக்கத்திலேயே நடைபாதைக் குடிசைகள் பிரசித்தம்.

சின்னச் சந்து பொந்து, பொட்டல் வெளி கிடைத்தால்கூடப் போதும்; மறுநாள் அங்கே திடீர் திடீர்க் குடிசைப் பகுதிகள் தோன்றுவது சகஜமாகிவிட்டது.

பம்பாயில் உள்ள ஜனத் தொகையில் அறுபது சதத்துக்கும் மேற்பட்டவர்கள் குடிசைகளில்தான் வாழ்கிறார்கள். பல குடிசைகள் சேர்ந்ததும் ஒரு 'நகர்' ஆகிவிடுகிறது. இப்படிப்பட்ட நகர்கள் பல்லாயிரக் கணக்கில் பம்பாயில் இருக்கின்றன. இத்தகைய நகர்களில் மிகப் பெரியதும் பழைமையானதும் தாராவி.

பம்பாய் குடிசைப் பகுதிகளைப் பற்றிப் பேச்சு வந்தாலே முதலில் பிரஸ்தாபிக்கப் படுவது தாராவிதான். இதில் சிறப்பம்சம் என்னவென்றால், தாராவியில் வசிப்பவர்களில் நூற்றுக்கு எண்பத்தைந்து சதவிகிதம் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள்.

சுமார் ஒன்றே கால் லட்சம் ஜனத்தொகையில், லட்சத்துக்கு மேற்பட்டவர்கள் தமிழர்கள். அதிலும் குறிப்பாக நெல்லை மாவட்டத்துத் தமிழர்கள்தான் எண்பது சதவிகிதத்தினர் இருக்கின்றனர்.

சுமார் முந்நூறு வருஷங்களுக்கு முன்னால் மாகிம், பாந்திரா பகுதிகளையொட்டி தோல் பதனிடும் தொழிற்சாலைகள் துவங்கப்பட்டன. அவற்றை நிர்வகிக்க வாணியம்பாடி போன்ற சில பகுதி

* தாராவி — கடைத்தெரு



களிலிருந்து பலர் பம்பாய் வந்தனர். அவர்கள் வரும்போது தோல் தொழில் தொடர்பான வேலைகளுக்காகத் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்களை அழைத்து வந்தனர்.

அப்போது மீனவர்களின் பகுதியாக இருந்த ஒரு திட்டையில் வேலைக்கு வந்த தமிழர்கள் குடியேறினர். பின்னர் ஒருவர் பின் ஒருவராக, தெரிந்தவர், வேண்டியவர், பிழைக்க வந்தவர்கள் என்று குடும்பம் குடும்பமாகக் குடியேறியபோது 'தாராவி' உதயமாயிற்று.

பம்பாயில், வந்தவர்களுக்கு வேலை என்பது உறுதி. அதிலும் தமிழர்கள் கடுமையான உழைப்பாளிகள்; விவரம் அறிந்தவர்கள் என்பதால் வேலை வாய்ப்பு அதிகமாகவே இருந்தது.

இன்று பம்பாயில் உள்ள பஞ்சாலைகளில், தொழிற்சாலைகளில் வேலை செய்பவர்கள் பலரும் தமிழர்களே! அவர்களுக்கு வேலைக்குப் போக வசதியாக உள்ள இடமாக, பம்பாயின் மையப் பகுதியாகத் தாராவி இருப்பதால், வசதி கிடைத்தால்கூட இந்த இடத்தை விட்டுச் செல்ல அவர்கள் தயாராக இல்லை.


* தாராவி பொங்கல் வீட்டில் பெட்டி படுக்கைகள், சட்டைகள்.....


* வீடியோ தியேட்டர்கள்

பம்பாய்க்கு வேலை தேடி வருபவர் யாராக இருந்தாலும் அவர் நேரே இறங்கிப் போகும் இடம் தாராவியாகத்தானிருக்க முடியும். எத்தனை பேர் வந்தாலும் அவர்களுக்கு அங்கே எப்படியோ தங்க இடம் கிடைத்துவிடுவது உலக மகா விந்தைகளில் ஒன்று.

தமிழர்கள் பெருகி, கூடி வாழ்வதாலும் தமிழ் மொழியே எங்கும் ஒலிப்பதாலும் தாராவி என்ற பெயரே, தமிழ்ப் பெயரோ என்று வட இந்தியர் பலர் சந்தேகிக்கின்றனர். 'தாரா' என்றால் கடற்கரை. கடற்கரையையொட்டிய பகுதி என்பதாலே இது தாராவி ஆகிவிட்டது.

தாராவியில் மகாராஷ்டிர அரசியல் அவ்வளவாக இல்லை. எங்கு பார்த்தாலும் தமிழ்நாட்டு அரசியல்தான்! தமிழ்நாட்டில் உள்ள அரசியல்கட்சிகள் எல்லாவற்றிற்கும் தாராவியில் கிளைகள் உண்டு. தமிழ்நாட்டில் பறக்கின்ற கொடிகள் பல இங்கே பறக்கின்றன. ரசிகர் மன்ற விவகாரங்களும் இங்கே இருக்கின்றன. புதியதாக இளையராஜாவுக்கும் ரசிகர் மன்றம் வைத்திருக்கிறார்கள்.

தமிழ்நாட்டிலுள்ள அரசியல் கட்சிகளின் சின்னச் சின்ன வெற்றி தோல்விகள்கூட இங்கே வாண வேடிக்கையோடு கொண்டாடப்படுகின்றன. பஞ்சாயத்துத் தேர்தல் முடிவுகளின் போது தாராவியில் பதற்ற நிலை இருந்ததாம்.

ஒரு தி.மு.க. தலைவர் தாராவியில் பேச வந்துவிட்டால் உடனே அ.தி.மு.க.விலிருந்தும் ஒரு தலைவரை அழைத்து வந்து, எதிர்த்தரப்பினர் கூட்டம் போடுகின்றனர். தி.மு.க.வும், அ.தி.மு.க.வும் தாராவியில் அரசியல் ரீதியாக ஒன்றும் செய்யப் போவதில்லை என்றாலும் அங்குள்ளவர்கள் தமிழ்நாட்டில் இருப்பதைப் போன்றே அரசியல் நடத்திக் கொண்டிருப்பது விந்தையான விஷயம்.

தாராவிக்கு விஜயம் செய்யாத தமிழ்நாட்டுத் தலைவர் இல்லையென்றே சொல்லலாம். ராஜாஜி, பெரியார், காமராஜ், கருணாநிதி, எம்.ஜி. ஆர்., பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர், ம.பொ.சி., ஜீவானந்தம், சி. சுப்பிரமணியம், வீரமணி, கண்ணதாசன் போன்ற பெரிய பட்டியலே இருக்கிறது.

ஒருமுறை நாடாளுமன்றத் தேர்தலுக்கு வி.கே. கிருஷ்ண மேனன் இந்தப் பகுதியிலிருந்துதான் போட்டியிட்டு வெற்றி பெற்றார். அவரே தனது தொகுதியைச் சுற்றிப் பார்த்துவிட்டு, 'உலகிலேயே மிகப் பெரிய சேரி தாராவிதான்' என்று குறிப்பிட்டு இந்தப் பகுதியினரின் நலவாழ்விற்காகச் சில திட்டங்களையும் அறிமுகப்படுத்தி வைத்தார்.

தாராவியின் முதுகெலும்புபோல் நீண்டு செல்லும் சாலை தொண்ணூறு அடி அகலமுள்ளது. இந்தச் சாலையின் கிளைகள் பத்து அடி, ஆறடி, மூன்றடி என்று தெருக்களாக—சந்துகளாகப் பிரிகின்றன.

எங்கு பார்த்தாலும் தகரக் குடிசைகள். அதனை 'சோப்டா' என்றழைக்கின்றனர். ஒரு சோப்டா, மிஞ்சி மிஞ்சிப் போனால் எட்டடிக்குப் பத்தடிதான் இருக்கும். அதிலேயே 'மச்சி' 'மாலா' எனப்படும் மாடி. அதாவது தூங்கவும் பெட்டி படுக்கைகளை வைத்துக் கொள்ள

வும் நிமிர்ந்து நிற்கக் கூட முடியாத உயரத்தில் மாடி. இதற்குச் செல்ல படிகள் வேறு!

சில சோப்டாக்கள் இரண்டாகப் பிரிக்கப்படுகின்றன. மாடியில் ஒரு பெட்டி படுக்கை வைத்துக் கொள்ள மட்டுமே 'பங்க்'. அதிலே ஒரு குடும்பம்! தாராவி குடிசைகளை 'ஏரியல்' பார்வையில் பார்த்தால் ஏதோ ஒரு தேனடை போலவே இருக்கும். இந்த நிலையிலும் பல 'சோப்டா'க்களில் டி.வி. ஆண்டெனாக்கள் நீட்டிக் கொண்டிருக்கின்றன.

நான் சென்ற சமயம் நல்ல மழைக் காலம். அந்தப் பகுதியே துர்நாற்றத்தில் மிதந்தபடி இருந்தது. எங்கே பார்த்தாலும் சாக்கடைகள். கழிவு நீர் ஓடைகள் குண்டுங் குழியுமாக விளங்கி வெளியேற வசதியின்றி அங்கேயே தேங்கி எல்லா வகைக் கிருமிகளையும் கொசு, ஈ முதலியவற்றையும் உற்பத்தி செய்து கொண்டிருந்தன.

'சோப்டா'க்களுக்கு வாடகை தலைக்கு ஐம்பது, அறுபது ரூபாய் என்று உள்ளது. இந்தச் சோப்டாக்களின் கிரயம் எவ்வளவு இருக்கும்? குறைந்தபட்சம் ஐம்பதாயிரம் ரூபாயாவது இருக்கும். ஆனால் யார் விற்கிறார்கள்? வாடகைக்கு விட்டால் ஒரு வருஷ வாடகைத் தொகை அட்வான்ஸாகக் கிடைக்கிறதே!

இப்போது அரபு நாடுகளுக்கு வேலை தேடி வருவோர் பலர். தங்கள் ஏஜெண்டுகளைப் பார்த்து 'விசா' கிடைக்கிறவரை தங்குவதற்கென்று தாராவி வந்துவிடுகிறார்களாம்.

இங்கே நடமாடும் இளைஞர்கள் ஒருவரை ஒருவர் பார்த்து, 'நீ எந்தப் பொங்கல்லே இருக்கே! சவுகரியமா இருக்கா?' என்று கேட்டுக் கொள்வது வேடிக்கை விநோதமாக இருக்கும்.

'பொங்கல்' என்று அவர்கள் குறிப்பிடுவது பலர் ஒன்றுகூடி சமைத்து உணவு பரிமாறப்படும் வீடு. இத்தகைய பொங்கல் வீடுகள் தாராவியில் ஏராளமாய் இருக்கின்றன.

பொங்கல் வீடுகளில் இரண்டு வேளைச் சாப்பாடு போடப்படுகிறது. தங்களுடைய பெட்டி படுக்கைகளை அங்கே வைத்துக் கொள்ளலாம். குறைந்தது முப்பது நாற்பது பேர் ஒரு பொங்கல் வீட்டில் இருப்பதால் தூங்குவதற்குக் 'க்யூ' சிஸ்டம்தான். இதற்காகச் சில வீடுகளில் ரயில்வே 'டையர்' அடுக்கு போல பலகை கட்டி வைத்திருக்கிறார்கள். அவற்றில் ஏறிப் படுத்துக் கொள்ள வேண்டும்.

குளிப்பது, இயற்கை அழைப்பை ஏற்பது எல்லாம் பொது இடங்களில், அல்லது அதற்காகக் கார்ப்பரேஷன் கட்டித் தந்துள்ள இடங்களில்தான்! அங்கேயும் க்யூ.

இத்தகைய பொங்கல் வீடுகள் குறிப்பிட்ட ஊர்க்காரர்களுக்கு அல்லது ஜாதிக்காரர்களுக்கென்று நடத்தப்படுகிறது. இதற்கான செலவுகளையும் நிர்வாகத்தையும் கவனித்துக் கொள்பவர் 'செலவாசிக்காரர்' எனப்படுகிறார். சமையற்காரரை 'பண்டாரி' என்று அழைக்கிறார்கள். மாதத்துக்குச் சுமார் ரூ 250/- கொடுத்தால் போதுமானது. தங்கும் இடப் பிரச்னையும், சாப்பாட்டுப் பிரச்னையும் தீர்ந்தது.

இங்கே குடிசைத் தொழில்களும் பெருமளவில் நடைபெறுகின்றன. வறுகடலை, கடலை மிட்டாய், பிஸ்கட், இதர மிட்டாய் வகைகள் தயாரிக்கப்படுகின்றன. இவற்றிலெல்லாம் சிவகாசி போல் சிறுவர்களே ஈடுபடுத்தப் பட்டுள்ளனர். பொழுது விடியுமுன்பே

* உழைப்புக்கு அஞ்சோம்! சேலத்தைச் சேர்ந்த வெங்கடேசனும், ரத்னாவும்



* சாலையோரங்களில் தமிழர்கள் கட்டிக்கொண்டுள்ள வீடுகள்!-





* தாராவியிலும் ஓர் அண்ணா அறிவாலயம்




* ஜாதிப் பெயரால் சங்கம்

இட்லி தயாரித்து நகரின் பல பாகங்களுக்கும் விற்பனைக்கு அனுப்பி வைப்பது ஒரு பெரிய வியாபாரம். காலை வேளைகளில் அணி அணியாகச் சிறுவர்கள் இட்லிக் கூடைகளைச் சுமந்து செல்வது தினமும் பார்க்கக் கூடிய காட்சி.

இங்கே உள்ளவர்களில் பலருக்குத் தாராவியிலும் வோட்டு இருக்கிறது, தங்களது சொந்தக் கிராமத்திலும் இருக்கிறது. இங்கே தங்குவதை, வாழ்வதை ஒரு சிலரே நிரந்தரமாக வைத்துள்ளனர். பலருக்கும் பம்பாயில் சம்பாதித்துக் கொண்டு ஊருக்குத் திரும்பிப் போய்விட வேண்டும் என்பதே குறிக்கோள். அதனால்தான் அவர்கள், தங்குகிற இடத்தைப் பற்றி அவ்வளவாக அக்கறை எடுத்துக் கொள்ளவில்லை.

தாராவியில் கிடைக்காத வஸ்துக்களே இல்லை. மேல்நாட்டு செண்டிலிருந்து, கள்ளச் சாராயம்வரை எல்லாம் தாராளமாகக் கிடைக்கிறது.

அண்மைக்காலமாக, வீடியோ பார்கள் பல சந்துக்குச் சந்து எழுந்துள்ளன. இவற்றில் ஒரு நாளைக்குத் தொடர்ந்தாற்போல ஆறு வேறு வேறு சினிமாக்களைக் காட்டுகின்றனர். தமிழ்நாட்டில் வெளிவிடப்படாத சினிமாக்கள்கூட அங்கே காட்சிக்கு வந்து விடுகின்றன. சில இடங்களில் இடை இடையே ஸ்பெஷல் 'நீல' சினிமாக்கள் வேறு.

வெளியே மேஜை போட்டு டிக்கெட்டுகளை விற்கின்றனர். போஸ்டர் விளம்பரத்துடன் ஒலிபெருக்கி விளம்பரம் வேறு!

டிக்கெட் ஒரு ரூபாய், 50 காசுதான். ஒரே காட்சியில் நூறு நூற்றைம்பது பேர் அடைக்கப்படுகின்றனர்.

**ப**த்துப்பேர் சேர்ந்து வாழ்ந்தால் தமிழர்கள் தங்களுக்கென்று ஒரு சங்கம் உருவாக்கி தலைவர், செயலாளர் என்று பொறுப்பு வகிப்பார்கள் என்பதற்கு தாராவி நல்ல உதாரணம்.

இங்கே தெருவுக்குத் தெரு ஒரு சங்கம். சாலுக்கு சால் ஒரு மன்றம். ஜாதிக்கு ஒரு சங்கம். அதன் உட்ஜாதிக்கும் ஒரு சங்கம்! இது தவிர இந்த ஊர், அந்த ஊர் என்று ஊர்ப் பெயரைத் தாங்கிய சங்கங்கள் நிறையவே இருக்கின்றன!

பல ஆயிரம் குடும்பங்கள் சேர்ந்து வாழும் தாராவியில் முதன் முதலாகத் தொடங்கப்பட்ட அமைப்பு பம்பாய் தென்னிந்திய ஆதி திராவிட மகாஜன சங்கம் என்பதாகும். காலப்போக்கில் பிற ஜாதியினரும் குடியேறியபோது முக்குலத்தோர் சங்கம், தேவேந்திர வேளாளர் சங்கம், யாதவர் சங்கம், செங்குந்த முதலியார் சங்கம் என பல சங்கங்கள் தோன்றி, அவற்றின் கிளைகளும் பம்பாய்வாழ் தமிழர்களிடையே பரவியுள்ளன. சில சமயங்களில் ஜாதியின் பெயரால் மோதல்களும் இங்கே நிகழ்ந்துள்ளன.

இதைப் பற்றிப் பேசும்போது தாராவி மக்களில் சிலர், 'இதக் கொஞ்சம் பெரிசா எழுதுங்க. பொழைக்கப் போன இடத்தில கூட ஜாதிப்பேர்ல சண்டை போடறாங்க'ன்னு எழுதுங்க' என்றனர்.

தமிழ்நாட்டைப் போல ஜாதிப் பெயர்களைப் போட்டுக் கொள்ள மகாராஷ்டிராவில் யாரும் வெட்கப்படுவதில்லை. இதனால் தமிழர்கள் பலர் இங்கே தங்கள் ஜாதிப் பெயர்களாலேயே அழைக்கப்படுகின்றனர்.

பலர் பம்பாய் வாழ்க்கைக்குப் பழகிப் போய்விட்டனர். அவர்கள் கொடுக்கல் வாங்கலுக்கு மட்டும் தமிழ்நாட்டுக்கு வந்து விட்டுத் திரும்பி விடுகின்றனர். இந்த வாழ்க்கையிலும், பலர் சந்தோஷமாக இருப்பதைப் பார்க்கலாம்.

*தாராவியில் அரசாங்கம் கட்டிவிட்ட லேபர் கேம்ப், டிரான்ஸிட் கேம்ப் என்ற பகுதிகளும் இருக்கின்றன. அங்கேயும்கூட, சுகாதார வசதியில்லை. அதனால் சாலை ஓரங்களும், ரயில் பாதை ஓரங்களும் அசிங்கப்பட்டுப் போகின்றன. இது ஒருபுறமிருந்தாலும், இத்தனை நெரிசலிலும் அரசாங்கமும் நகராட்சியும் இவர்களுக்குத் தேவையான மின்சாரத்தையும் குடி தண்ணீரையும் தங்கு*

# "மெட்றாஸிலிருந்து வர்றீங்களா?"




பம்பாயில் உள்ள ஷோ ரூம்களில் ரெப்ரிஜிரேட்டர், டி.வி. வாங்கிய பிறகு ஸ்டெபிலைசர் வேண்டும் என்று கேட்டால், கடைக்காரர் நம்மிடம் திருப்பிக் கேட்கும் கேள்வி: 'மெட்ராஸிலிருந்து வர்றீங்களா?' என்பதுதான்.

'வோல்டேஜ் டிராப்' தொந்தரவு இல்லாத, நிலையான சீரமுத்தமின் வசதி பம்பாய்க்கு ஒரு ப்ளஸ் பாயிண்ட். எனவே இங்கு ஸ்டெபிலைசர் தேவையில்லை.

தடையின்றி விநியோகித்து விடுகிறார்கள்.

இங்கே வசிப்பவர்களின் சராசரி குடும்ப வருமானம் மாதம் ரூ 1200 என்று ஒரு சர்வே கூறுகிறது. இவர்கள் வறுமைக் கோட்டுக்கு கீழே வாழ்பவர்கள் அல்ல; வசதிக் கோட்டுக்குக் கீழே வாழ்பவர்கள்!

மகாராஷ்டிராவில் குடிசை ஒழிப்புப் பிரச்னை என்றால் முதலில் நினைவுக்கு வருவது தாராவிதான்!

பம்பாயின் மையப்பகுதியில் விமான நிலையம் போகிற வழியில் வருவோர் போவோர் கவனத்தை ஈர்க்கும் வகையில் தாராவி இருப்பதால் அது பம்பாய்க்கே ஒரு பிரச்னையாக இருக்கிறது.

ராஜீவ் காந்தி இ. காங்கிரஸ் பொதுச் செயலாளராக இருக்கும்போது தாராவிக்கு விஜயம் செய்து அசந்து போய்விட்டாராம். அதனால்தான் குடிசை மாற்றுத் திட்டம் என்றவுடன் நூறு கோடி ரூபாய் மத்திய அரசு உதவி என்று அறிவித்தாராம்!

தாராவி மக்களுக்கு நல்ல மாற்றுத் திட்டம் ஒன்று உருவாகி வருவதாகவும் அதன்படி தாராவியைப் பகுதி பகுதியாகப் பிரித்து, ஒவ்வொரு பகுதியாக அபிவிருத்திக்கு எடுத்துக்கொண்டு பலமாடிக்கட்டடங்கள் கட்ட வசதி செய்து தரப்படும் என்றும் வீட்டு வசதி அமைச்சர் வி. சுப்பிரமணியம் குறிப்பிட்டார்.

நடைபாதை, குடிசைவாசிகளுக்கு மாற்றுக் குடியிருப்புக்கள் தருவதற்காக பம்பாய் கார்ப்பரேஷன் கோரேகானிலிருந்து சற்றுத் தொலைவில் அமைந்துள்ள பகுதியில் சுமார் நாற்பது சதுர மைல் பரப்பில் ஒரு நகரை உருவாக்கி வருகிறது.

இந்த இடத்துக்குக் கார்ப்பரேஷன் அதிகாரிகளால் அழைத்துச் செல்லப்பட்டோம்.

பாகுபாடின்றி எல்லா மொழியினருக்கும் குடியிருப்புக்கள் ஒதுக்கப்பட்டுள்ளன. ராணுவ நடவடிக்கை போலக் குடி நீர் வசதி, கழிவு நீர் வசதி, மின் வசதி, சாலை வசதி ஆகியவற்றைத் துரிதமாகச் செய்து கொண்டிருக்கிறார்கள்! பள்ளிக்கூடமும் உண்டு.

இந்த வேலைகளைச் செய்பவர்கள் யார் தெரியுமா? மிகப் பெரும்பாலும் சேலத்தைச் சேர்ந்த நமது தமிழ்ச் சகோதர சகோதரிகள் தான்!

அவர்களைப் பார்த்து, 'எந்த ஊர்?' என்று கேட்டோம்.

எங்களை அதிகாரிகள் என்று நினைத்துக் கொண்டு நாங்கள் பேசும் மொழியைக் கூட கவனிக்காமல், 'ஹிந்தி நை' என்றார்கள்.

பிறகு, சற்றே திடுக்கிட்டவர்கள் போல் திரும்பிப் பார்த்தார்கள். மறுபடி தமிழில் பேசியதும் அவர்கள் முகத்தில் என்ன பூரிப்பு!

சேலத்திலிருந்து வந்து இருபது நாட்கள் ஆகின்றனவாம். பலர் குழந்தை குட்டிகள் குடும்பத்தோடு வந்துள்ளனர். ஆணுக்கு இருபது ரூபாய் தினக் கூலியாம்! பெண்களுக்குப் பதினைந்து ரூபாய்!

இவர்கள் தங்களுக்குத் தேவையான சட்டி, பானை அலுமினியச் சாமான்களுடன் வந்துள்ளனர்.

வேலையெடுத்துள்ள காண்ட்ராக்டர்கள் சேலத்திலிருந்து அழைத்து வந்துள்ளார்கள்.

பம்பாயில் நடக்கும் பல கட்டட வேலைகளில் சிற்றாட்களும், பெரியாட்களுமாக ஏராளமான தமிழர்களைக் காணலாம். இவர்கள் எங்கே வேலை நடக்கிறதோ, அதற்குப் பக்கத்தில் உள்ள வெட்டவெளி, அல்லது பிளாட்பாரத்திலேயே வசித்துவிடுகின்றனர். குழந்தைகளைத் தூளியில் கட்டி ஆட விட்டு விட்டு வேலையில் இறங்குகின்றனர். இவர்களுக்கு எல்லாமே பிளாட்பாரத்தில்தான்!

குழாய்ச் சாக்கடைக்குள் இறங்கி வேலை செய்வதிலும் துப்புரவுப் பணியிலும்கூடத் தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள் இருக்கிறார்கள்.

என்ன செய்வது? தமிழ்நாட்டில் வேலை இல்லை. கண் தெரியாத பூமியில் எந்த வேலையாவது செய்து பிழைத்துக் கொள்ளலாம் என்று தமிழ்நாட்டைச் சேர்ந்தவர்கள் பம்பாய் வந்தபடி இருக்கின்றனர்.

— விசிட்டர் அனந்த்

படங்கள்: 'சுபா' ரவிஷங்கர்

# வளரும் வயதில் குழந்தைகளுக்குத் தேவை காம்ப்ளான்

**காம்ப்ளான் ஒன்றில்தான் அவர்களுக்கு அன்றாடம் தேவைப்படும் 23 ஊட்டச் சத்துக்கள் அடங்கியுள்ளன.**

சாதாரணமாக 15 அல்லது 16 வயதிற்குள் குழந்தைகளின் வளர்ச்சி பெரும்பாலும் முழுமையடைந்து விடுகிறது.

அவர்களுடைய வளர்ச்சிக்கு நேரடியாக உதவுவது புரதம் என்ற சத்துதான். ஆகவே உங்கள் குழந்தைகளுக்கு தேவை காம்ப்ளான்—இப்போது, காம்ப்ளான் சிறந்த புரதம் கொண்டுள்ளது—பால் புரதம் (20%) அது 22 மூலதார சத்துணவுகளும் கொண்டதாகும்.

காம்ப்ளான் கிடைக்கிறது இனிய சுவைகளில்.




23

மூலதார சத்துணவுகள் திட்டமிட்ட விகிதங்களில்

பால் சேர்த்திடத் தேவையில்லை.



**காம்ப்ளான் – திட்டமிட்ட பரிபூர்ண உணவு**

884. GLC. 120 Tm

1. ஸன்பீம் பள்ளி

2. ஆக்ஸ்போர்டு பள்ளி

3. தேசியப் பள்ளி

4. தேசிய உயர்நிலைப் பள்ளி

5. என். ஈ. எஸ். கலை, விஞ்ஞான ஜூனியர் கல்லூரி

6. ரத்னம் கலை, விஞ்ஞான, வர்த்தகக் கல்லூரி

7. சரஸ்வதி வித்யாபவன் ஆசிரியப் பயிற்சி மையம்

8. என்.ஈ.எஸ். அங்கஹீன நல மையம்

ஸ்தாபகர்—பிரின்ஸிபால்



திரு ஆர். வரதராஜன்,
எம்.ஏ., பி.எட்.



பம்பாய், பாண்டுப்பில் ரத்னம் கல்லூரி
கட்டடங்களின் ஒரு தோற்றம்



# தலைமைச் செயலாளரின் தலையாய சிந்தனை!

சந்திப்பு:
தலைமைச் செயலாளர்

தமிழக அரசின் புதிய தலைமைச் செயலாளர் பத்மநாபனை அவருடைய சாஸ்திரி நகர் இல்லத்தில் சந்தித்துப் பேசிக் கொண்டிருக்கும்போது, சாண்டில்யனின் மகன் தகப்பனாரின் வாழ்த்துக் கடிதத்துடன் வருகிறார். படுத்த படுக்கையாக இருக்கும் சாண்டில்யன் உற்சாகப் பெருக்குடன் எழுதியுள்ள கடிதத்தை நம்மிடம் மகிழ்ச்சியோடு பகிர்ந்து கொள்கிறார் பத்மநாபன். இதற்குள் விக்கிரமன், கிருஷ்ணா ஸ்ரீநிவாஸ் என்று பல எழுத்தாளர்கள், கவிஞர்களிடமிருந்து ஃபோனில் வாழ்த்துக்கள் வந்து குவிகின்றன.

எழுத்தாளர்களிடம் பத்மநாபனின் நெருக்கம் எப்படி வளர்ந்தது என்றால் அவருடைய கல்லூரிக் காலத்துக்கே போக வேண்டும். பச்சையப்பன் கல்லூரியில் பொருளாதார மற்றும் கலாசார மன்றங்களின் தலைவராக இருந்த காரணத்தால் பலரைக் கல்லூரிக்கு அழைத்து வந்து பேசச் செய்திருக்கிறார். ஜே. பி., அசோக் மேத்தா, அண்ணா, பெரியார், கல்கி, ஜீவா போன்றவர்கள் அப்போதே அறிமுகமானார்கள். அன்று ஏற்பட்ட இலக்கியத் தொடர்புகள் இன்றும் நீடிப்பதுடன் இவரையே ஓர் எழுத்தாளராகவும் உருவாக்கியுள்ளன. அம்பேத்காருடன் மிகவும் நெருங்கிப் பழகும் சந்தர்ப்பங்களைப் பெற்றிருந்த பத்மநாபனிடம் அதைக் குறித்துக் கேட்ட போது, "நேருக்கு நேர் என்ற தலைப்பில் நான் ஒரு புத்தகம் எழுதி வருகிறேன். அதில் இந்தத் தலைவர்கள் பற்றியும் அவர்களுடன் எனக்கிருந்த தொடர்புகள் பற்றியும் விரிவாகக் காணலாம்'' என்றார்; தவிர கடந்த முப்பது ஆண்டுகளாகவே, ராமானுஜர், நந்தனார், பக்த ராமதாஸ் -போன்றோரைப் பற்றி ஆராய்ச்சிகள் செய்து வருகிறாராம். (''சீக்கிரமே அவையும் நூல்களாக வெளிவரும்.'') ஏற்கெனவே வெளியான நூல் ஆங்கிலத்தில் இவர் எழுதிய கவிதைத் தொகுப்பு.

ஆக ஒரு எழுத்தாளர், கவிஞர் தலைமைச் செயலாளராகிறார்! அதோடு, முதன்முதலாகத் தாழ்த்தப்பட்ட வகுப்பைச் சேர்ந்த (ஹரிஜன்) ஒருவர் அப்பதவியை அலங்கரிக்கிறார் என்று இரட்டைப் பெருமை பெறுகிறார் பத்மநாபன்.

ஒரு கடுமையான சோதனையை பின்னி

கம்பெனி 1975 — 76 கால கட்டத்தில் சந்திக்க நேர்ந்தது பலருக்கு நினைவிருக்கும். கிட்டத்தட்ட 20,000 தொழிலாளர்கள் வேலை இழக்கும் நிலை. இதுவே பத்மநாபனுக்கும் வாழ்க்கையில் பெரிய சோதனைக் கட்டமாக அமைந்தது. காரணம், பின்னி நிர்வாகத்தைச் சீராக்க அரசு பத்மநாபனைத் தான் நிர்வாக இயக்குனராக அனுப்பி வைத்தது. இந்தக் கடுமையான சோதனையில் தாமும் வென்று, பின்னி நிறுவனத்தையும் வெற்றிப் பாதையில் அடியெடுத்து வைக்கச் செய்தார் பத்மநாபன்.

மத்திய அரசிலும் பணியாற்றியுள்ள பத்மநாபன், கப்பல் போக்குவரத்துத் துறையில் இணைச் செயலாளராக இருந்தார். அப்போது கப்பல் தொழில் தில்லுமுல்லுகளை ஆராய ஒரு கமிட்டி அமைக்கப்பட்டது. இதனைப் 'பத்மநாபன் கமிட்டி' என்றே அழைப்பார்கள். திடீர் திடீரென்று கப்பலே காணாமல் போய் விடுவதாக நாளிதழ்களில் படிக்கிறோம் இல்லையா? இதன் மூலமும் வேறு பல தில்லுமுல்லுகள் மூலமாகவும் இன்ஷியூரன்ஸ் கம்பெனிகளுக்கு ஏராளமாக நஷ்டம் ஏற்பட்டு வந்தது. இதைப் பற்றித் தீர விசாரித்து பத்மநாபன் கமிட்டி சமர்ப்பித்த அறிக்கையில் காணப்படும் பரிந்துரைகள் படிப்படியாக அமுல்படுத்தப்பட்டு வருகின்றன.

காலையில் கடலோரமாக வாக்கிங். பிறகு குளித்துவிட்டு மனச்சாந்திக்காகப் பத்து நிமிஷம் பூஜை. பிறகு காரியாலய வேலைகள் தான் பத்மநாபனுக்கு. 'உங்களால் மறக்க முடியாத நிகழ்ச்சி?' என்று கேட்டபோது சொன்னார்:

"ஐ. ஏ. எஸ். பயிற்சிப் பள்ளியில் படித்துக் கொண்டிருந்த போது மாணவர் குழு ஒன்று நேருஜியைச் சந்தித்தது. 'நமது நாட்டின் பெரும்பான்மை மக்கள் கிராமங்களில்தான் வசிக்கிறார்கள். அவர்கள் கண்ணீரைத் துடைப்பதுதான் உண்மையான சேவை' என்றார் நேரு. கிட்டத்தட்ட 36 வருடங்கள் ஓடிவிட்டன. நான் அந்த அறிவுரையை மறக்கவே இல்லை. உதவி கலெக்டர், கலெக்டர், ஆணையாளர் என்றெல்லாம் பல விதப் பதவிகளை வகித்தபோதும் கிராமப் புறங்களில் வாழும் அடித்தள மக்களுக்கு எந்த அளவுக்கு உதவ முடியும் என்று யோசித்து யோசித்தே காரியங்களைச் செய்து வந்திருக்கிறேன். இப்போது தலைமைச் செயலாளர் என்ற முறையிலும் அதே சிந்தனையாக இருப்பேன்."

பேட்டி, கட்டுரை: கௌசல்யா

படம்: மணி

## அடுத்த இதழ்...

பம்பாய்த் தமிழர் சிறப்பிதழ் – II

* நேற்று ஹேமா,
இன்று ரேகா,
நாளை மீனாட்சி?

— COVER STORY

* மகாராஷ்டிர மந்திரி சபையில் தமிழ் அமைச்சர்!

* அணுவைப் பிளக்கும் அய்யங்கார்!

* திக்குக்கு ஒரு தமிழ்ச் சங்கம்;
வட்டத்துக்கு ஒரு தமிழ்ப் பத்திரிகை!

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி 1986



ஜூலை 20 அன்று நடுவர்கள் கூடிப் பின்வரும் கதைகளைப் பரிசுக்குரியன என்று தேர்ந்தெடுத்தனர்.

**முதல் பரிசு ரூ. 1000/—**

**சிபிகள்**

— மேலாண்மை பொன்னுச்சாமி
மேலாண்மறைநாடு — 626 127,
காமராஜர் மாவட்டம்.

**இரண்டாம் பரிசு ரூ. 500/—**

**குஞ்சானியின் டாட்டா**

— நா. முத்து பாஸ்கரன்,
810, கீழராச வீதி,
புதுக்கோட்டை — 622 001.

**மூன்றாம் பரிசு ரூ. 250/—**

**தலா ரூ. 250/— வீதம் இரு கதைகளுக்கு**

**அடுத்த அத்தியாயம்**

— ஜி. நாராயணன்,
Dunlop India Ltd.,
P. O. Box 1853,
Cochin — 17.

**சொல்லாமல் போன அப்பா**

— எஸ். அண்ணாத்துரை,
60 T./10E/1, SKC Road,
சூரம்பட்டி P.O.
ஈரோடு — 638 009.

மேற்படி நான்கு கதைகள் தவிர பின்வரும் இரு கதைகள் நான்காம் பரிசுக்குப் பரிந்துரை செய்யப்பட்டன. இவற்றுக்குத் தலா ரூ 150/— பரிசளிப்பது என்று தீர்மானமாயிற்று.

**எப்படி இது சாத்தியம்?**

— ஆர். விஜி,
3/3, 32பி, வாசவன் இல்லம்,
கீழ அம்பிகாபுரம்,
திருச்சி — 620 004.

**பட்டணப் பிரவேசம்**

— லக்ஷ்மி ஸ்ரீனிவாசன்,
சுவாமிமலை மெயின் ரோடு,
மேலக்காவேரி P.O.,
கும்பகோணம் — 612 002.

**நடுவர்கள் :**

1. திரு. பரணீதரன்
2. திரு. அவ்வை நடராசன்
3. திரு. அசோகமித்திரன்
4. திருமதி உஷா சுப்பிரமணியன்
5. ஆசிரியர் கல்கி.

**பரிசு பெற்ற எழுத்தாளர்களுக்கு வாழ்த்துக்கள்.**



• பரணீதரன்



• அவ்வை நடராசன்



• உஷா சுப்பிரமணியன்



• அசோகமித்திரன்

புகைப்படங்கள் : உத்ரா










எம்.ஜி.ஆர். அனுமதித்தால் கத்தி வழங்கும் விழாவில் நான் பங்கு கொள்வேன்!

—காளிமுத்து





# கல்கி

1986 ஆகஸ்டு 3
மலர் 45 இதழ் 1
அக்ஷய ஆடி 18



## எம்.ஜி. ஆர். ஆட்சி: பிரதமருக்குத் தர்ம சங்கடம்!

தமிழக முதல்வரைப் பதவி நீக்கம் செய்கிற எண்ணம் தமக்கு இல்லை என்று பிரதமர் உறுதி மொழி அளித்திருக்கிறார். மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டு ஆட்சிக்கு வந்துள்ள ஓர் அமைச்சரவையைக் கவிழ்ப்பது ஜனநாயகப் பண்பாகாது என்ற முறையில் பிரதமர் கூறியதை ஏற்க வேண்டிய கட்டாயம் நமக்கு இருக்கலாம். ஆனால் இப்படி ஓர் உறுதி மொழியைப் பிரதமர் அளிக்க வேண்டிய அவசியம் ஏற்பட்டு விட்டதே. இந்த அமைச்சரவை சரியாக இயங்கவில்லை என்பதற்கு வலுவான அத்தாட்சி.

'எம்.ஜி. ஆர். ஆட்சியில் பல குறைபாடுகள் உள்ளன; எனவே இதை மாற்றியே ஆக வேண்டும்' என்ற பேச்சு உயர் மட்டங்களில் எழுந்து, அக்கருத்து பிரதமர் வரை சென்று எட்டியிருக்கிறது. இல்லையென்றால் குழந்தைவேலு எதற்காகப் பதறித் துடித்துப் பிரதமரிடம் முதல்வருக்காகப் 'பதவி நீடிப்பு வாக்குறுதி' கேட்டுப் பெற வேண்டும்?

தமிழகத்தில் இன்று அரசாட்சி சரியில்லை என்பதற்கு எத்தனையோ நிரூபணங்களைக் கூற முடியும் என்றாலும் நம்மையெல்லாம் திடுக்கிட வைத்த சில சமீபத்திய நிகழ்ச்சிகளை மட்டுமே பார்ப்போம்:

"என் பெயரில் சிலர் ஃபோர்ஜரி கையெழுத்திட்டுக் கடிதங்களை அனுப்பிக் கொண்டிருக்கிறார்கள். அதை நம்ப வேண்டாம்" என்று பல்வேறு அரசு இலாக்காக்களுக்கு முதல்வர் சுற்றறிக்கை அனுப்பியது முதல் அதிர்ச்சி. முதல்வரின் கையெழுத்தை ஃபோர்ஜரி செய்கிற அளவுக்குப் பலருக்குத் துணிவு வந்துவிட்டது என்றால் முதல்வர் மனத்தாலும் உடலாலும் எவ்வளவு தூரம் பலவீனப்பட்டுப் போயிருக்கிறார் என்பதைத் தெளிவாகப் புரிந்து கொள்ளலாம். இவ்வாறு ஃபோர்ஜரி செய்தவர்கள் கண்டுபிடிக்கப்பட்டார்களா, தண்டிக்கப்பட்டார்களா என்பது மக்களுக்கு இன்றுவரை தெரிவிக்கப்படவில்லை.

அடுத்த அதிர்ச்சி முதல்வர் நாளிதழ்களில் கொடுத்த விளம்பரம். "என் மனைவியே யானாலும்" என்று தொடங்கி சிரிப்பாய்ச் சிரித்த விளம்பரம். 'என் உறவினர்கள் அரசாங்க விஷயங்களில் தலையிடுவதை நான் விரும்பவில்லை; தலைமைச் செயலாளர் உள்பட அதிகாரிகள் அனைவரும் என் விருப்பத்தை அறிந்து செயல்படுங்கள்' என்று விளம்பரம் தர வேண்டிய அவசியம் முதல்வருக்கு ஏற்பட்டதென்பது தமிழகத்துக்குச் சரித்திரம் காணாத தலைகுனிவு. இதிலிருந்து இவரது பலவீனத்தைப் பயன்படுத்திக் கொண்டு உறவினர்கள், அதிகாரிகளை மிரட்டி அட்டகாசம் பண்ணுகிறார்கள் என்று முடிவு கட்டுவது தவறாகாது. முதல்வரைச் சந்திக்கவே முடியாதபோது, ஏன், அமைச்சரவைக் கூட்டங்களே சரிவர நடக்காதபோது அதிகாரிகள் இவர் விருப்பத்தை அறிந்து நடப்பது எப்படி சாத்தியம் என்ற கேள்வியும் இந்த விளம்பரம் தொடர்பாக எழுகிறது. எல்லாரும் இவர் விருப்பத்தை அறிந்து நடக்க வேண்டும் என்றால் பொறுப்புகளைப் பிரித்து ஒப்படைத்தல் (delegation of responsibility) அமைச்சரவையின் கூட்டுப் பொறுப்பு (joint responsibility) ஆகியன இல்லை என்றாகிறது. கருத்துப் பரிமாற்றம் நடக்கவில்லை; communication gap இருக்கிறது என்பதெல்லாம் புரிகிறது. சுருங்கச் சொன்னால் ஆட்சி ஸ்தம்பித்துப் போயிருக்கிறது.

அப்புறம் கத்தி அரசியல். பொறுப்புள்ள ஒரு முதல்வர் பேசுகிற பேச்சா இது? முதல்வரின் மனநிலை குறித்தே சந்தேகத்தை எழுப்பியுள்ள இந்த ஒரு பேச்சுக்காகவே பிரதமர் நடவடிக்கை எடுக்க முற்பட்டால் அதனைத் தவறாகக் கருத முடியாது.

தலைமைச் செயலாளர் அந்தோணியைப் பதவி மாற்றம் செய்தது சமீபத்திய அதிர்ச்சி. 'ஆட்சியில் என்ன நடக்கிறது என்பதே எனக்குத் தெரிவிக்கப்படுவதில்லை; அமைச்சரவைக் கூட்ட முடிவுகள் போன்ற முக்கிய விஷயங்களைக்கூடப் பத்திரிகைகளில் படித்துத்தான் தெரிந்து கொள்ள வேண்டியிருக்கிறது' என்று ஆளுனர் முதல்வருக்குக் கடிதம் எழுதப் போக, தமது செயல்திறனின்மையை ஒளித்து, அந்தோணி தலையில் பழி சுமத்தி அவரைப் பலிகடாவாக்கிவிட்டார் முதல்வர்.

ஜனநாயக மரபுகளுக்குக் கட்டுப்பட்டுப் பிரதமர் தமிழக முதல்வரைப் பதவியிலிருந்து இறக்காமலிருக்கலாம்; ஆனால் பதவியிலிருந்து நீக்குவதற்குப் போதிய அளவு என்ன, அதற்கு மேலேயே வலுவான காரணங்கள் உள்ளன.

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா — பாரதியார்



பத்திரிகைத்துறையில் பம்பாய்த் தமிழர்கள் :

# காலையில் எழுந்ததும் இவரது கார்ட்டூனில் தான் விழிக்க வேண்டும்!



இந்தியாவில் உள்ள எந்தப் பத்திரிகையைப் பார்த்தாலும் அங்கே ஒரு தமிழர் ஒரு முக்கிய பொறுப்பில் இருப்பதைக் காணலாம். பம்பாய்ப் பத்திரிகைகளும் விதிவிலக்கல்ல.

பம்பாய் வாசிகள் காலையில் எழுந்தவுடன் முதலில் பார்ப்பதும் படிப்பதும் ஆர்.கே. லக்ஷ்மணின் கார்ட்டூன்களைத்தான்!

ராசிபுரத்தைப் பூர்விகமாகக் கொண்ட ஆர்.கே. லக்ஷ்மண், ஆனந்த விகடனில் கார்ட்டூனிஸ்ட் வேலை கேட்டு வாசன் அவர்களைச் சந்தித்தாராம். அவர்தான் 'வடக்கே போய்விட்டு வா!' என்று சொன்னாராம். பம்பாய் வந்த அவருக்கு முதலில் ஃப்ரி பிரஸ் ஜர்னலில் கார்ட்டூனிஸ்ட் வேலை கிடைத்தது. அங்கிருந்து டைம்ஸ் ஆப் இந்தியா.

''நான் ஒருவன்தான் பம்பாய்க்கு வந்ததிலிருந்து ஒரே வேலை பார்த்துக் கொண்டிருக்கிறேன்; ஒரு மாற்றமும் இல்லை'' என்கிறார்.

பம்பாய் இவருக்குப் 'பிடித்துவிட்டது. 'மிகச் சிறந்த பிரஜை' என்ற விருதை பம்பாய் மேயர் கொடுத்து இவரைக் கௌரவித்துள்ளார். பல்கலைக் கழகங்கள் டாக்டர் பட்டங்களை வழங்கியுள்ளன. மக்ஸைஸாய் விருது கிடைத்துள்ளது.

''பம்பாயில் உள்ள தமிழர்கள் கோவில்கள் கட்டுவதைப் போல அதே ஈடுபாட்டுடன் அறக்கட்டளைகள் ஏற்படுத்தி மருத்துவச் சாலைகள் அமைப்பது போன்ற பொது நலப் பணிகளிலும் ஈடுபட வேண்டும்'' என்று விரும்புகிறார்.

'வி.வி.' என்று அன்புடன் அழைக்கப்படும் வி. வெங்கடேஸ்வரன் ஹிந்து பத்திரிகையின் பம்பாய்ச் சிறப்பு நிருபர். மதுரையில் பிறந்து அமெரிக்கன் காலேஜில் பி.ஏ. படித்தவரான இவர், 1948ல் வேலை கிடைத்து பம்பாய் வந்து சேர்ந்தார். ஹிந்துவிற்காக பலமுறை உலகச் சுற்றுப் பயணம் மேற்கொண்டுள்ள இவர், அரசியல், பொருளாதாரம், விளையாட்டு முதலிய பல துறைகளைப் பற்றி ஆழ்ந்த ஞானத்துடன் எழுத வல்லவர். இவர் சந்திக்காத பெரிய தலைவர்களை இந்தியாவில் இல்லை.



• எஸ்.வி. வாசுதேவ்

மாநில அரசியல் தலைவர்கள் தாங்கள் செய்யப் போகும் அடுத்த காரியங்களைப் பற்றி சீனியர் கரஸ்பாண்டெண்ட் என்ற முறையில் இவரிடம் கலந்தாலோசிப்பதுகூட உண்டாம்.

''தமிழர்கள் பம்பாயில் வெற்றிகரமாக இருப்பதற்குக் காரணம், மற்ற மாநில, மொழி மக்களிடம் சுமுகமாகப் பழகும் தன்மை; சுற்றுப்புறச் சூழ்நிலைக்குத் தக்கவாறு நடந்து கொள்ளும் பக்குவம் ஆகியவைதான்'

என்கிறார். ''தொழிலதிபர்கள் தமிழர்களை வேலைக்கு வைத்துக் கொள்ள விரும்புவதற்குக் காரணம் அவர்களுடைய விசுவாசம், திறமை, ஆங்கிலத் தேர்ச்சி ஆகிய மூன்று அம்சங்கள்'' என்கிறார் வி.வி.

திருச்செங்கோட்டைச் சேர்ந்த கே.ஏ. நாகேஸ்வரன் 1962ல் பம்பாய்க்கு வந்தவர். எட்டு பத்திரிகை நிறுவனங்களில் பணியாற்றிய இவர் இப்போது 'டெய்லி' ஆங்கிலநாளிதழின் துணை ஆசிரியராக இருக்கிறார். ''இங்கே தொழிலில் சுதந்திரமும், எதையும் சாதிக்கிற வாய்ப்பும் இருக்கிறது'' என்கிறார். டைம்ஸ் ஆப்இந்தியாவில் பணியாற்றும் போது எம். ஜி. ஆரைச் சந்தித்துப் பேட்டி எடுத்தார். பம்பாய்க்கு வந்திருந்த எம்.ஜி. ஆர். ஹோட்டல் ஒபராயில் தங்கியிருந்தாராம். காலை ஏழு மணிக்கு நேரம் கொடுத்திருந்தார். இட்லி, மசால் தோசை என்று உபசரித்து பேட்டி சுவாரஸ்யமாக இருக்கவே விமான நிலையத்துக்குப் போக வேண்டிய நேரம் கடந்துவிட்டிருக்கிறது. அடுத்த விமானத்தில் பயணம் செய்து கொள்ளலாம் என்று நீண்ட பேட்டி கொடுத்ததைக் குறிப்பிட்டார். அப்பேர்ப்பட்ட எம்.ஜி. ஆர். பத்திரிகையாளர்களை இப்போது சரியாக கவனிப்பதில்லையே என்று வருத்தப்படவும் செய்தார்.



* கே.ஏ. நாகேஸ்வரன்

சென்னையிலிருந்து பூனாவுக்கு வேலை தேடிச் சென்றவர் எஸ்.வி. வாசுதேவ். அங்கே 'மார்க்' என்ற கலைப் பத்திரிகையில் முல்க்ராஜ் ஆனந்துடன் பணியாற்றி விட்டுப் பின்னர் இல்லஸ்டிரேடட் வீக்லியில் இலக்கியப் பகுதியின் ஆசிரியராகப் பணியாற்றினார். பிரும்மச்சாரியான இவர், தற்சமயம் தலைசிறந்த தினசரிகளில் விமர்சனங்கள் எழுதி வருகிறார். ''பம்பாயில் கலை வளர்ச்சி நல்ல முறையில் இருக்கிறது'' என்றார்.

* வி.வி.



டைம்ஸ் ஆப் இந்தியாவின் விளையாட்டுப் பிரிவு ஆசிரியராக இருப்பவர் கே.ஆர். சுந்தர்ராஜன். சென்னை திருவல்லிக்கேணி ஹிந்து உயர்நிலைப் பள்ளியிலும் கடலூர் செயின்ட் ஜோசப் கல்லூரியிலும் படித்த இவர், 'மெயில்' பத்திரிகையில் பத்திரிகையாளராகச் சேர்ந்தார். 1958ல் பம்பாய்க்கு வேலை கிடைத்து வந்த இவர், தாம் பார்க்கும் வேலையில் சந்தோஷமாக இருப்பதாகக் கூறுகிறார். உலக கிரிக்கெட், பாகிஸ்தான், ஸ்ரீலங்கா டெஸ்ட் மாட்சுகளுக்கெல்லாம் சென்று செய்தி சேகரித்துள்ள இவர், பம்பாயில் நிறையத் தமிழர்கள் ஆசியப் போட்டிகளிலும் உலகப் போட்டிகளிலும் கலந்து கொள்வதைக் குறிப்பிட்டார். கடந்த இருபத்தைந்து வருஷங்களாக டேவிஸ் கப் டென்னிஸ் போட்டியை நேரில் கண்டு எழுதி வருகிற பெருமை இவருக்கு உண்டு.



* கே. ஆர். சுந்தர்ராஜன்

சிதம்பரம் சதானந்த், கோபால்சுவாமி ஐயங்கார் போன்ற பத்திரிகை ஜாம்பவான்கள் பம்பாயில் தமிழகத்துக்குப் பெருமை சேர்த்துள்ளனர்.

முன்னாள் ஷெரிப் டி.வி. ராமானுஜம் கூட பம்பாயில் பத்திரிகையாளராகத்தான் தம் வாழ்க்கையைத் துவக்கினார்.

சகுந்தலா நரசிம்மன் அகில இந்தியப் பெண் பத்திரிகையாளரில் இரண்டாவது இடம் பெற்றிருக்கிறார்.

ஆர். ஜி. கே., பி. எல். கிருஷ்ணமூர்த்தி, சுலோசனா ராஜேந்திரன், ராஜு பரதன், பாலகிருஷ்ணன் முதலியவர்கள் ஆங்கிலப் பத்திரிகையுலகில் கொடி கட்டிப் பறக்கிறார்கள்.

மேலட்டையில் பம்பாயின் ஒரு காட்சியையும், மாதுங்கா மார்க்கெட்டில் ஒரு தமிழ்ப் பெண்மணியையும், பம்பாய்க்குச் சிறப்புச் சேர்க்கும் தமிழர்களில் முதலிடம் வகிக்கும் ஆர்.கே. லக்ஷ்மண் அவர்களையும் காணலாம்.

வண்ணப்படங்கள்: சுபா ரவிசங்கர்

## மாதம் ஒரு மாவட்டம்

**கல்கி ஏற்கும் சமுதாயப் பணி**



# காமராஜர்

## மாவட்டத்திற்கு வருகிறோம்...

ஆத்தூர் கிச்சடிச் சம்பாவை விளைய வைத்து, மதுரை ஜில்லா ஆட்களை வைத்து அறுவடை செய்து, பொள்ளாச்சிச் சந்தைக்குக் கொண்டு போனாலும் அங்கே வந்திருக்கும் விருதுநகர் வியாபாரிக்குத்தான் விற்க வேண்டும் என்று அடித்துச் சொல்லியிருக்கிறார் பாட்டுக் கோட்டையைக் கட்டி ஆண்ட பட்டுக்கோட்டை கல்யாணசுந்தரம். அந்த அளவுக்கு வியாபாரத்திற்குப் பிரசித்தி பெற்றது விருதுநகர். அந்த அளவுக்கு நாணயம் மிக்கவர்களாகத் திகழ்ந்திருக்கிறார்கள் விருதுநகர் வியாபாரிகள்.

ஆனால் இப்போது அந்த வியாபாரிகள் எப்படி இருக்கிறார்கள்? அங்கங்கே கலப்படக்காரர்கள் சிலர் புகுந்து விட்டதால் அப்போ இருந்த வியாபார நாணயம் இப்போது முழுமையாக இருக்கிறதா என்பது சந்தேகமே! சென்னையிலிருந்து வெளிவரும் சில பத்திரிகைகளின் அட்டைப் படங்களை அச்சிட்டு அனுப்புவது சிவகாசிக் காரர்கள் தான் என்றாலும் — தீப்பெட்டிகளையும், பட்டாசுகளையும் உற்பத்தி செய்து அகில இந்தியாவுக்கும் சப்ளை செய்வது சிவகாசிக்காரர்கள்தான் என்றாலும் அங்கேதான் எங்குமில்லாத அளவுக்குக் குழந்தைத் தொழிலாளர்கள் கொடுமைக்குள்ளாகிறார்கள் என்பதையும் நாம் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்!

இவை மட்டும்தானா? இன்னும் எத்தனையெத்தனையோ பிரச்னைகள் வெளிவராமல் இருக்கக் கூடும். விருதுநகரைத் தலைமை இடமாகக் கொண்டு காமராஜர் மாவட்டம் என்ற பெயரில் புது மாவட்டமாகப் பிரிக்கப்பட்ட பிறகு, அத்தனை பிரச்னைகளும் தீர்ந்து போய் விட்டதாகச் சொல்ல முடியுமா? முடியவே முடியாது! ஒரு மாவட்டத் தலைநகரில் இருக்க வேண்டிய அத்தனை வசதிகளையும் விருதுநகர் பெற்றுவிட்டதா என்பது கூடச் சந்தேகமே!

எனவே, காமராஜர் மாவட்டத்திலுள்ள நீங்கள் அனைவரும் உங்கள் மாவட்டப் பிரச்னைகள் அல்லது உங்கள் ஊர்ப் பிரச்னைகள் இல்லையெனில் தனி மனிதர்களுக்கு இழைக்கப்பட்டிருக்கும் அநீதிகள் ஆகியவற்றோடு, அரசியல்வாதிகளுடைய — அமைச்சர்களுடைய — அதிகாரிகளுடைய மெத்தனப் போக்குகளையும் சமூக விரோதிகளுடைய அட்டகாசங்களையும் சுருக்கமாக எழுதி, உங்கள் முழு முகவரியோடு கல்கி அலுவலகத்திற்கு அனுப்புங்கள். இவற்றோடு உங்கள் மாவட்ட வளர்ச்சிக்கான ஆலோசனைகளையும் உங்கள் மாவட்டத்தில் நிகழ்ந்துள்ள சாதனைகளையும் சேர்த்தே எழுதலாம்.

கல்கி அலுவலகத்திற்கு வரும் உங்கள் ஒவ்வொருவருடைய கடிதத்தையும் கவனமாகப் பரிசீலனை செய்து, முக்கியமானவற்றைத் தேர்ந்தெடுத்து, செப்டம்பர் மாதம் இரண்டாவது வாரத்தில் நமது கல்கி பிரதிநிதிகள் காமராஜர் மாவட்டம் முழுவதும் சுற்றுப் பயணம் செய்வார்கள்; உங்களைச் சந்தித்துப் பேசுவார்கள். அவர்கள் வரும் தேதி பற்றிய முழு விவரங்களும் தனித்தனிக் கடிதங்கள் மூலம் பிறகு தெரிவிக்கப்படும்.

அதன் பிறகு, கல்கி பிரதிநிதிகள் காமராஜர் மாவட்ட கலெக்டரைச் சந்தித்துத் தாங்கள் சேகரித்த பிரச்னைக்குரிய விஷயங்கள் பற்றி விவாதித்துப் பதில்களைப் பெறுவார்கள். அவை எல்லாம் அக்டோபர் மாதக் கல்கி இதழ்களில் செய்திகளாகவும், பேட்டிக் கட்டுரைகளாகவும், புகைப்படங்களாகவும் பிரசுரமாகும். எல்லாவற்றையும் பிரசுரித்து விடவோ — எல்லாவற்றுக்கும் தீர்வு கண்டுவிடவோ முடியாது என்றாலும் கூட உண்மை நிலையை எடுத்துச் சொல்வதன் மூலம் அரசின் கவனத்தைத் திருப்புவதோடு மக்களிடையிலும் ஒரு விழிப்புணர்ச்சியை ஏற்படுத்த முடியுமல்லவா! உடனே எழுதுங்கள்.

**காமராஜர் மாவட்டம் பற்றிய பிரச்னைகளும், குறைகளும், அநீதிகளும் தவிர, சாதனைகளும் கல்கி அலுவலகத்திற்கு வந்து சேர வேண்டிய கடைசி தேதி: 20.8.86.**

**உறையின்மேல் 'மாதம் ஒரு மாவட்டம்—காமராஜர்' என்று எழுதினால் எங்கள் பரிசீலனைக்கு அது உதவியாய் இருக்கும்.**

**— ஆசிரியர்**

பி.கு.: அன்னாமாவட்டம் பற்றிய பரபரப்பான செய்திகளும் பேட்டிக் கட்டுரைகளும் 17.8.86, 24.8.86 கல்கி இதழ்களில் வெளிவர இருக்கின்றன.



பருவத்தின் எல்லையில் என் பாசத்துக்குரிய மகள். சங்கடமான இந்தக் காலகட்டத்தில் அந்த இளம் உள்ளம் படும் வேதனை, தாயாகிய எனக்குத் தான் புரியும்.

# "என் மகளுக்கு கேர்ஃப்ரீ வாங்கித் தர நான் முடிவு செய்தது ஏனென்றால்"...

ஒரு சிறுமியின் வாழ்க்கையில் அவள் வயதுக்கு வரும் காலகட்டம் தவிர்க்க முடியாத ஒன்றாகும். பயமும், வெட்கமும், தவிப்பும் நிறைந்து, உடலளவில் மட்டுமின்றி மனத்தளவிலும் அவள் பாதிக்கப்படும் நேரமும் அதுதான்.

நான் ஒரு தாய். இந்தக் காலகட்டத்தை அனுபவித்தவள். அதன் சிரமங்களை நன்கு உணர்ந்தவள். குறிப்பிட்ட அந்த ஐந்து நாட்களும் ஒவ்வொரு பெண்ணுக்கும் ஏற்படும் சங்கடமும் தொல்லையும் எனக்கு நன்றாகவே தெரியும்.

**இத்தனை வருடங்களாக, சானிடரி பாதுகாப்புக்குத் தேவையானதை நான் வீட்டிலேயேதான் தயாரித்துக் கொள்வேன். அது மிகவும் தர்மசங்கடமான வேலைதான்!**

மீண்டும் மீண்டும் பயன்படுத்துவதற்காக நன்றாகத் துவைத்து, காயப்போட்டு... போதும் போதும் என்றாகி விடும். அக்கம் பக்கத்தில் உள்ளவர்களுக்குக் கூட நமது 5 நாள் பிரச்னை விளம்பரப்படுத்தப்பட்டு விடும். இத்தனை அவஸ்தைப் பட்டாலும்,

நமக்குத் தேவையான சானிடரி பாதுகாப்பு கிடைக்குமா என்பதும் நிச்சயமில்லை. அது மட்டுமல்ல; எப்போது எந்த அசம்பாவிதம் நடந்து அவமானப்பட வேண்டி வருமோ என்று பயந்து நடுங்கிக் கொண்டே இருக்க வேண்டும்.

என்னைப் பொறுத்தவரையில் இதிலெல்லாம் ஓரளவு பழக்கப்பட்டுவிட்டேன் என்றே சொல்லலாம். தவிர, அந்தக் காலத்தில் சங்கடமான அந்த 5 நாட்களில் பெண்கள் வெளியே போவது என்கிற வழக்கமெல்லாம் அறவே கிடையாது.

---

**ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது... பெண்கள் மாதத்தின் அந்த 5 நாட்களில்கூட துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.**

---

ஆனால் இப்போது காலம் மாறிவிட்டது. இப்போது கேர்ஃப்ரீ போன்ற நவீன சானிடரி பாதுகாப்பு கிடைக்கும் இந்த நாளில், என் மகளும் நான் இளம் பெண்ணாக இருந்ததைப் போலவே ஏன் வீட்டிற்குள் அடைபட்டுக் கிடக்கவேண்டும். நான் வளர்ந்த காலம் வேறு. என் மகள் வளரும் சூழ்நிலை வேறு இன்றைய சிறுமிகள் மாதத்தின் அந்த 5 நாட்களில் கூட துடி துடிப்பாக செயல்பட வேண்டியுள்ளது.

என் மகளைப் பாருங்களேன். அவள், நான் இளம் பெண்ணாக இருந்த காலத்தில் செயல்பட்டதைவிட மிக...மிக சுறுசுறுப்புடன் செயல்பட வேண்டியிருககிறது...படிப்பு விஷயத்திலும் சரி. இதர வேலைகளிலும் சரி. நாங்கள் இருந்ததைப் போல என் மகளையும் வீட்டிற்குள் முடக்கிப்போட நான் விரும்பவில்லை.

அதனால்தான் நான் கேர்ஃப்ரீயைத் தேர்ந்தெடுத்தேன். என் மகளின் துடிப்புக்கும் துள்ளலுக்கும், ஆட்டத்துக்கும் ஓட்டத்துக்கும் ஈடு கொடுக்கும் இணைபிரியாத் தோழி கேர்ஃப்ரீ.

முக்கியமான அம்சம் என்னவென்றால் கேர்ஃப்ரீ ஒரு ரெடிமேட் நாப்கின். துணியையும் பஞ்சையும் வைத்து மடித்து, நேரத்தை வீணாக்கும் தொல்லை கிடையாது.

நான் அந்தக் காலத்தில் செய்தது போல என் மகள் துவைத்து, காயப் போட்டு, சங்கடப்பட வேண்டியதில்லை. தேவையான நேரத்திலே சட்டென்று புத்தம் புதுசாக, சுத்தமான ஒரு நாப்கினை எடுத்து அவள் உபயோகிக்கலாம்.

ஒரு விஷயத்தை நான் ஒப்புக்கொண்டாக வேண்டும். முதலில் எனக்கு இத்தகைய ரெடிமேட் நாப்கின்மீது கொஞ்சம் அவநம்பிக்கை இருக்கவே செய்தது. ஆனால், இப்போது என் மகள் மாசாமாசம் கேர்ஃப்ரீ பயன்படுத்தி மகிழ்ச்சியோடு இருப்பதைப் பார்த்ததும் எனக்குப் பூரண நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தேவையான சானிடரி பாதுகாப்புக்கும், அசம்பாவிதம் எதுவும் நடக்காமல் தடுக்கவும் சானிடரி நாப்கின் பெரிதாக, கனமாக இருக்க வேண்டும் என்று நான் எண்ணி வந்தது தவறு என்பது இப்போது விளங்குகிறது.

கேர்ஃப்ரீ உபயோகிப்பதால் சுகமாகவும் பாதுகாப்பாகவும் உணர்வதாக என் மகளே சொல்கிறாள். பயமின்றி, கவலையின்றி வெளியே சுற்றவும் முடிகிறது என்றும் கூறுகிறாள். அப்பாடா! எனக்கு ஒரு கவலை விட்டது.

---

**கேர்ஃப்ரீ பயன்படுத்துவதில் சிரமமோ சிக்கலோ எதுவுமே கிடையாது. இதனாலேயே என் மகளுக்கு எந்த விதமான பிரச்னையும் இல்லை. அதைக் குறித்து நான் சந்தோஷப்படுகிறேன்.**

---

எனக்குக் கிடைக்காத ஒரு சுதந்திரமும் பாதுகாப்பும் கேர்ஃப்ரீ மூலம் என் மகளுக்குக் கிடைத்திருப்பதைப் பார்த்துப் பூரிப்படைகிறேன். ஒரு பெண்தான்—அதுவும் ஒரு அன்னைதான்—என்னுடைய மன உணர்வுகளைச் சரியாகப் புரிந்துகொள்ள முடியும்.

காலத்தோடு நாமும் மாறியாக வேண்டும். அதுவும் நமக்கு அதிக சுதந்திரமும் பாதுகாப்பும் தருகிற கேர்ஃப்ரீ வடிவிலே அந்த மாற்றம் இருக்குமானால், அதை நாம் வேண்டாம் என்று ஒதுக்குவானேன்?




கிடைக்கிறது. 10 உள்ள பேக் மற்றும் சிக்கனமிக்க 20 மற்றும் 30 உள்ள பேக்குகளிலும்.

தனிரகம் கிடைக்கிறது. கேர்ஃப்ரீ எக்ஸ்ட்ரா லாங் 10 உள்ள பேக்கில்

*கேர்ஃப்ரீ சானிடரி நாப்கின்கள்—பூரண சுகம், பரிபூரண பாதுகாப்பு—மாறுகின்ற காலத்துக்கேற்ற மகத்தான வசதி.*

Johnson & Johnson

OBM/6746/R/TAM

# உயிராசை

①

—சுஜாதா

''கொஞ்ச நாட்கள் முன்பு பெங்களூரில் பல மாடிக் கட்டடம் விழுந்தது மறந்து போயிருந்தாலும் ஆச்சரியமில்லை. அந்த விபத்துக்கும் இன்றைய தினத்துக்கும் இடையில் நம் சமகால சரித்திரத்தில் எத்தனையோ விபத்துக்கள் ஏற்பட்டுவிட்டன. மெக்ஸிகோவில் பூகம்பங்கள், யாழ்ப்பாணத்துத் தெருக்களில் ஒன்றுமறியாத தமிழர்கள்...எதைத்தான் ஞாபகம் வைத்துக் கொள்வது? மேலும் பெங்களூர் நகரமே குறிப்பாக இந்த மாதிரி மெகா விபத்துக்களுக்குப் பெயர் போனது. கட்டடம்விழுந்தால் எட்டுஒன்பது மாடியும் ஹோவென்று சரியும். சர்க்கஸ் எரிந்தால் கூடாரமே தீப்பற்றிக் கொண்டு குழந்தைகளும் குரங்குகளும் நூற்றுக்கணக்கில் வெந்து மடிவார்கள். பட்டை சாராயத்தில் மெத்தில் அல்கஹாலோ என்ன கழிசடையோ கலந்து ஒரே நாளில் ஆயிரம் பேர் குருடாவார்கள். பெங்களூருக்கு எல்லா அல்லல்களுமே பெரிசு. தண்ணீர் கஷ்டம் என்றால் வாரம் ஒரு சொட்டு. மின்வெட்டு என்றால் நாளும் இருட்டு. அதேபோல் பெங்களூர் மறப்பதிலும் ஓர் அவசர நகரம். இத்தனை பேர் இத்தனை கோர விபத்துக்களில் செத்துப் போயிருக்கிறார்களே அதுபற்றி இம்மியளவும் கவலையில்லாமல் அங்கங்கே ஜனங்கள் டைமேல் கைபோட்டுக் கொண்டு அமிதாப் பச்சன் சினிமா, அம்பது பர்ஸெண்ட் தள்ளுபடி என்ன என்று அலைந்து கொண்டிருப்பார்கள். கப்பன் பார்க்கில் பூக்கள் வருத்தமில்லாமல் சிரித்துக் கொண்டிருக்கும். மூன்று மணி ரேஸில் ஜாக்பாட் அடித்தவர் நடு ரோட்டில் 100 ரூபாய் நோட்டுச் சிறகுகளை உதிர்த்துக் கொண்டு செல்வார். கன்னடக் கவிஞர்கள் நதியின் போக்குகளைப் பற்றிக் கவிதை எழுதுவார்கள்...''

இந்தக் கருத்துக்களையெல்லாம் சொன்னது நான் இல்லை. டாக்டர் ஸ்ரீனிவாச மூர்த்தி. அவரை அவருடைய பஸவங்குடி வீட்டில் சந்திக்கச் சென்றபோது சொன்னார். அப்போதுதான் மழை பெய்து முடிந்திருந்தது. கண் இரப்பைகளில் மழைத்துளியைச் சிலிர்த்துக் கொண்டே வாசலில் அழைப்பு மணியை அழுத்த உள்ளேயிருந்து ஒரு வள் கேட்டது. நான் ஓடத்தயாராயிருந்தும் கதவு திறந்ததும் தோன்றிய நாய் என்னுடைய திருட்டு, கொள்ளை எண்ணங்களையெல்லாம் ஒரு மோப்பத்தில் கணித்துச் சாதகமாகத் தீர்மானித்து வாலை வீச ஆரம்பித்தது. கூட இருந்த, டாக்டர் ஸ்ரீனிவாச மூர்த்தி, ''சீஸர், உள்ளே போ!'' என்றார். நான், 'நமஸ்காரா' செய்ததும் ஏற இறங்கப் பார்த்தார். நீண்ட முகம். மண்டையில் அங்கங்கே ஒப்புக்குத் தலைமயிர், காவி கலர் ஜிப்பா. கர்நாடக இண்டலெக்சுவல்களின் சீருடை. 'வா' என்று என்னை வரவேற்றார். ''யூ லுக் யங்''. நான் கூடத்துக்கு அவரைத் தொடர்ந்து சென்றேன். அலமாரி முழுவதும் பம்பாய் எலெக்ட்ரிக் ரயிலில் போல் கூட்டமாகக் கோப்பைகளும் ட்ராபிகளும் அடைந்திருந்தன. சுவரெங்கும் சான்றிதழ்கள், தங்க எழுத்துக்களிலும், மங்கல் எழுத்துக்களிலும். டாக்டர் ஸ்ரீனிவாச மூர்த்தியின் அனேக இலக்கிய சாதனைகளைப் பற்றி சந்தோஷப்பட்ட காகிதங்கள்.

ஸ்ரீனிவாச மூர்த்தி தரையில் போடப்பட்டிருந்த திண்டை உருட்டி உட்கார்ந்தார். நாய் அவரை அதிதீவிரமாக நக்கவேண்டிய உத்தேசத்தைத் தெரிவிக்க, ''சுஷ்மா!'' என்று கூப்பிட அவருடைய பேத்தியோ, யாரோ பதினாறு வயசுப் பெண் வந்து சீஸரை அழைத்துச் செல்ல, ''ஸோ?'' என்று என்னை ஆழமாகப் பார்த்தார். ''தில்லி பத்திரிகையிலிருந்து வந்திருக்கிறாயா?'' என்று கேட்டார்.

''ஆம்!''

''என்னைப் பற்றி எழுதப் போகிறாயா?''

''ஆம்!''

''எவ்வளவு கன்னடம் உனக்குத் தெரியும்?''

''எட்டாம் கிளாஸ் அளவுக்குத் தெரியும். மொழி பெயர்ப்பில் நிறையப் படித்திருக்கிறேன்.''

''போதாது. மொழி பெயர்ப்பு என்பது மொண்ணைக் கத்தி. கூர் இழந்து விடுகிறது. கன்னடம் தெரிந்த ஆளை அனுப்பு. நீ என்னைப் பேட்டி காண லாயக்கில்லாதவன். இப்போது கன்னடத்தில் எழுதும்''........'' மகன்களுக்கு எல்லாருக்குமே அவ்வளவு தான் படிப்பு''என்று கண்ணில் நீர் வரச் சிரித்தார். நானும் பக்கபலமாகச் சிரிக்க, ''நீயும் எழுத்தாளனா?'' என்றார். என்னை ஏதோ நாய் கொண்டு போட்ட வஸ்துவைப் போலப் பார்த்தார்.

''ஜர்னலிஸ்ட்.''

''பரிசுகள் வாங்கியிருக்கிறாயா?''

நான் ரொம்ப முக்கி யோசித்துப் பார்த்தாலும் எழுத்து சம்பந்தமான பரிசு எதுவும்

ஞாபகத்துக்கு வரவில்லை. கல்லூரியில் ஹாஸ்டல் தினத்தின்போது ஆர்மோனியம் வாசித்ததற்கு மூன்றாவது பரிசாக அலமாரியில் இருக்கும் கோப்பை பரிசில் சேர்த்தியில்லை. "நான் நாட்டில் உள்ள அத்தனை பரிசும் வாங்கியாயிற்று. அதோ பார்" என்று அலமாரியைக் காட்டினார். "எல்லா "....... மகன்களும் என்னை விசாரித்துக் கொடுத்து விட்டான். ஒருத்தனுக்காவது என் எழுத்து புரியாது" என்று என்னை நேராகப் பார்த்து "சிலவேளை எனக்கே புரியாது" என்றார். இவரைக் கணிக்க முடியவில்லை. சீரியஸாகச் சொல்கிறாரா? இல்லை விளையாட்டா?

"இதோ பார் உன் வயசு என்ன?"

சொன்னேன்.

"உன் வயசில் எனக்கு மகள் இருக்கிறாள். இதோ வந்தது என் பேத்தி. சுஷ்மா! ஒரு கப் தேனீர் கொண்டு வா."

"என்னைப் பற்றி என் எழுத்தைப் பற்றி ஏதும் எழுதாதே. இந்த வயசில் எழுத்தின் அவசியத்தைப் பற்றியே எனக்கு ஆதாரமான சந்தேகங்கள் வந்துவிட்டன!"

"உங்களுக்கு என்ன வயசு?"

"எழுபத்தெட்டு. எப்படி இருக்கிறேன்? நன்றாகத்தானே இருக்கிறேன்? ஆ! பற்கள் எல்லாமே பொய்யற்றவை. பி. பி. கிடையாது. டயபெடீஸ் கி டை ய ா து. சிகரெட் பழக்கம் இல்லை. இன்றைய தினத்துக்கும் அதிகாலையில் மூன்று மைல் வேகமாக நடக்கிறேன்..." அவருடைய ஜெரியாட்ரிக் சாதனைகளின் ஊடே என் மனதும் அலைந்தது. இவரை ஏதோ கேட்க வேண்டும் என்று வீட்டை விட்டுக் கிளம்பும் போது தீர்மானித்துக் கொண்டு வந்தேனே. என்ன அது...?

"போன வருஷமா, இல்லை முந்தின வருஷம் அதுவரை டென்னிஸ் ஆடிக் கொண்டிருந்தேன். சந்தர்ப்பம் தந்தால் இன்றைக்கும் என்றால் ஒரு பெண்ணைக் கர்ப்பவதியாக்க முடியும் என்று தோன்றுகிறது" என்று கண் சிமிட்டியவரை என்ன கேட்க நினைத்தேன்?

சுஷ்மா தேனீரைக் கொண்டு வைத்து விட்டு என்னை ஒரு 'கிளான்ஸ்' பார்த்து விட்டுச் சென்றாள்.

"ஏன் இலக்கியத்துக்கு அர்த்தமில்லை என்று சொல்கிறீர்கள்?"

"அர்த்தமில்லை என்று சொல்லவில்லை. அவசியமில்லை. இலக்கியம் படிக்காத ஜனங்கள் சந்தோஷமாக இல்லையா? பக்கத்து வீட்டு ராமராவ் பஜகோவிந்தம் தவிர எதுவுமே வாழ்க்கையில் படிக்க வேண்டாம் என்று சொல்கிறார். சுஷ்மா 'பார்பரா கார்ட்லண்ட் மாதிரி நீ ஏன் தாத்தா எழுதுவதில்லை?' என்கிறாள். இதோ பார், சீஸர் அது ஷேக்ஸ்பியரைப் படித்திருக்கிறதா? இல்லை. இது சந்தோஷமாக இல்லையா?"

எழுபத்தெட்டு வயசுக்கு கொஞ்சம் 'செனிலிட்டி' என்று எழுத வேண்டும்!

"வாழ்க்கையில் இதெல்லாம் முக்கியமில்லை.

"உங்கள் அபிப்பிராயத்தில் எது முக்கியம்?"

"உயிராசைதான்! எ டிஸையர் டு லிவ். அது இருந்தால் போதும். மற்றதெல்லாம் இரண்டாம் பட்சம். உயிர் வாழ வேண்டும் என்கிற தீர்மானம், எதிர்பார்ப்பு இருந்தால் போதும் உனக்கு வியாதி வராது. விபத்து வராது. வந்தாலும் சமாளிக்க முடியும்."

"உயிர் வாழ உன்னதமாக எதுவுமே இல்லையென்றால்?"

"உன்னதங்களை நீயே தயாரித்துக் கொள். 'எதிர்பார்! நாளைய சூரியோதயத்திற்கு' என்று மஹாகவி சொன்னது போல நீயே ஏற்படுத்திக் கொள்."

நான் ஆறியிருந்த தேனீரை எடுத்துக் கொள்ள, "உனக்கு அந்தப் புத்தகக் கடை

வளரும் குழந்தைகளுக்கு சுவையான
துணையாக விளங்கும் பால் பிஸ்கட்




சத்துமிகுந்த, சுவையான பிஸ்கட்.

பிரிட்டானியா

LINTAS BIN MB 12 2517 TM



''அடிக்கடி லீவு லெட்டர் தராதே என்றீர்களே! ஒரேயடியா தந்துடறேன். நான் வராத நாட்களில் தேதியை மட்டும் நீங்களே எழுதிக்குங்க சார்.''

விபத்து ஞாபகம் இருக்கிறதோ?''

தட்ஸ் இட்! சட்டென்று ஞாபகம் வந்து விட்டது. ஸ்ரீனிவாச மூர்த்தியை முக்கியமாகக் கேட்க வேண்டியது! "நீங்கள் அந்தப் புத்தகக் கடை விபத்தில் தப்பித்தவர் அல்லவா?''

''ஆம். பதினைந்து நாட்கள் உள்ளே அடைபட்டிருந்தேன். சோறு தண்ணீர், வெளிச்சம் எதுவும் இல்லாமல் இந்த வயசில் இத்தனை முதுமையில் எப்படித் தப்பித்தேன் தெரியுமா? உயிராசை தான்!''

சுஷ்மா பிரம்பு நாற்காலிகளைத் தாழ்வாரத்தில் கொண்டு போடும்போதும் என்னை ஒரு முறை பார்த்தாள். நான் 'இண்டரஸ்டிங்!' என்றேன். ஸ்ரீனிவாச மூர்த்தி தன் இலக்கிய சாதனைகள் அத்தனையையும் புறக்கணித்து விட்டு, பெங்களூர் புத்தகக் கடை விபத்தில் உயிர் தப்பித்ததைப் பற்றிப் பேசினார்.

அந்தப் புத்தகக் கடை மூன்று மாடியில் பரவியிருந்தது. கீழே ஒரு பேஸ்மெண்ட். பார்கெய்ன் பேஸ்மெண்ட் என்றார்கள். அப்புறம் மெயின் ஹால், மாடியில் டெக்னிகல் புத்தகங்கள். இந்தியாவிலேயே ஏன் கிழக்காசியாவிலேயே பெரிய புத்தகக் கடை. பேஸ்மெண்டில்தான் ஒரு மூலையில் சில அரிய புத்தகங்கள் இருந்தன. அவைகளில் ஒன்றைப் பொறுக்கிக் கொண்டு பணம் கொடுக்க வந்தபோது அந்த இளைஞன், 'இதே சப்ஜெக்டில் இன்னும் புத்தகங்கள் பேஸ்மெண்டில் மற்றொரு மூலையில் இருக்கின்றன. மலிவான புத்தகங்கள்' என்றார். நான் வீட்டுக்குக் கிளம்புவதாகத்தான் இருந்தேன். புத்தக ஆசை என்னை பேஸ்மெண்ட்டுக்கு மறுபடி துரத்தியது. அல்லது விதி என்று சொல். ஏதோ ஒரு அமானுஷ்ய சக்தி அதுதான் செலுத்தியிருக்க வேண்டும். உள்ளுக்குள் ஓர் எச்சரிக்கையும் இருந்து அப்புறம் பார்த்துக் கொள்ளலாம் என்று பட்சி சொல்லிற்று. இருந்தும், என்னைப் புலன்களுக்கும் கட்டுப்பாட்டுக்கும் அப்பாற்பட்ட சக்தி ஒன்று உந்தித் தள்ள கீழே பேஸ்மெண்டுக்குப் போனேன். போய்ப் பத்து பதினைந்து நிமிஷம்தான் ஆகியிருக்கும். திரும்பிப் பார்த்தேன். அந்தப் பகுதியில் நான் ஒருத்தன் தான் இருந்தேன். கீழே மொத்தமே எட்டுப் பத்துப் பேர்கள்தான் இருந்திருப்பார்கள். திடீர் என்று நான் வாழ்க்கையிலேயே அது வரை கேட்டிராத ஒரு வெடி போல ஒரு அசுரன் முணுமுணுப்பது போல் ஒரு கடவுளுக்கு மூச்சடைப்பது போல் விவரிக்க முடியாத ஒரு சப்தம் கேட்டது. உடனே எல்லாம் இருட்டாகிவிட்டது. ஏதாவது டிரான்ஸ்பார்மர் தான் வெடித்திருக்க வேண்டும் என்று முதலில் தோன்றியது. அதன் பின்தான் நான் விழுந்துப் பட்டதையும் என்னைச் சுற்றிலும் ஒரு மணலோ ஜல்லியோ பெரிய மேடு இருப்பதையும் உணர்ந்தேன். பயங்கர வேளை அது. அடிபட்டு இடுப்பருகில் வலிக்கிறதே. தடவிக் கொள்ளலாம் என்றால் கையை நகர்த்த முடியவில்லை. இருட்டு!

என்ன நடந்தது என்றே எனக்குப் புரியவில்லை. ஒருவேளை செத்துப் போய் விட்டேனோ? எல்லா ''......'' மகன்களும் சேர்ந்து என்னை நரகத்தில் தள்ளி விட்டார்களோ என்று தோன்றியது. இருந்தாலும் கை கால் விரல்களை மட்டும் அசைக்க முடிந்தது. மத்தியானம் சாப்பிட்டதைத் தப்பமரப்படம் வந்தது. சரி, இன்னும் செத்துப் போகவில்லை என்று தீர்மானித்தேன். எனக்கு ஊமை அடியே தவிர பலத்த காயம் எதுவும் இல்லை. ஆனால் கையைக் காலை அசைக்க முடியவில்லை. விரல்கள் மணலில் பதிந்திருந்தன.

ரொம்ப மௌனமாக இருந்தது. மற்றப் பேரெல்லாம் என்ன ஆனார்கள். தப்பித்து விட்டார்களா? ஓடிப் போய்விட்டார்களா! இல்லை எல்லோருமே செத்துப் போய்விட்டார்களா?

''மிஸ்டர்'' என்று ஒளர் இருக்கிறான் என்று எண்ணிக் கொண்டிருந்த திசையை நோக்கிக் கூப்பிட்டேன். பதில் இல்லை. 'என் கைஎங்கே?' என்று என்னைக் கேட்டுக்கொண்டேன். வலது கையை அசை என்று எனக்கே சொல்லிக் கொண்டு அசைத்துப் பார்த்தேன். வாய்க்குள் எல்லாம் மண் புகுந்திருந்தது. வலதுகையை அசைக்க முடிந்தது. கால் ஏதோ உத்தரமோ அதன் கீழோ மாட்டிக் கொண்டிருக்க, இழுக்க முடியவில்லை.

நான் சொல்லிக்கொண்டேன். 'ஸ்ரீனிவாச மூர்த்தி! பதற்றப்படாதே. அவர்கள் வந்து உன்னைக் காப்பாற்றுவார்கள். அதுவரை பதற்றமே இல்லாமல் காத்திரு! எத்தனையோ படை இருக்கிறது..........மகன்கள் வந்துவிடுவார்கள். இதற்காகத்தான் அவர்களுக்குச் சம்பளம் கொடுத்து வைத்திருக்கிறது. கவலைப்படாதே. கவலைப்படாதே' என்று தைரியம் சொல்லிக் கொண்டே வந்தவன், ''அய்யா! அய்யா! யாராவது வாருங்களேன். காப்பாற்றுங்களேன்'' என்று அழுது அலற ஆரம்பித்தேன். கொஞ்சம் கொஞ்சமாக என் குரலை உயர்த்திக் கொண்டே, மண்டை பிளிற உதவி உதவி என்று கத்தினேன். வெளியே நடப்பது எதுவுமே கேட்கவில்லை. யார் யாரோ நகர்கிறாற் போலவும் எதையோ அசைக்கிறது போலவும் கேட்டது. எந்த சப்தத்தையும் அடையாளம் காண முடியவில்லை. கொஞ்ச நேரம் அழுது வைத்தேன்!

(தொடரும்)

# கங்கையின் கோதுமையும் காவிரி வெற்றிலையும்!

புதுசு புதுசாக எதையாவது 'எக்ஸ்பெரிமண்ட்' செய்வதில் பம்பாய்க்காரர்களுக்கு நிகர் அவர்களே தான். பத்துக்குப் பத்தடி ரூமில் பத்துப் பேர் வசிப்பதிலிருந்து, தொத்திக் கொண்டும் தூங்கிக் கொண்டும், நின்று கொண்டே சீட்டு விளையாடிக் கொண்டும் ரயிலில் பயணிப்பதுவரை.... எல்லாமே ஒரு புது அனுபவம்தான். இவை எல்லாவற்றையும்விட மொழி, பழக்கவழக்கங்கள்... என்று முற்றிலும் மாறுபட்ட ஒருவரை வாழ்க்கைத் துணையாக ஏற்றுக் கொள்வது..... ஓ! அந்த வாழ்க்கையே ஓர் அனுபவமல்லவா! அப்படிப்பட்ட சில அனுபவசாலிகளின் உண்மைக் கதைகளை 'லைவ்'வாக எங்கள் பம்பாய் நெட்வொர்க்கிலிருந்து உங்களுக்கு 'டெலிகாஸ்ட்' பண்ணுகிறோம்!



• துளசி ஆண்டனி பெரேய்ரா



• அர்ச்சனா, சதீஷ்



• குழந்தை ஷீலாவுடன் சரளா, நாராயண்

திருமதி துளசி பெரெய்ரா (தமிழ்–ஹிந்து) ஆண்டனி பெரய்ரா கொங்கணி–கோஅன் கிறிஸ்துவர் (கேப்ரியலில் மார்க்கெடிங் மானேஜர்)

**துளசி சொல்கிறார்:**

நான் கல்யாண் ஸ்கூலில் டீச்சராக இருந்த சமயம், ஸ்கூல் முடிந்து திரும்பும் போது, தினமும் ரயில்வே ப்ளாட்ஃபாரத்தின் எதிர்த் திசையில் இவர் என்னையே முறைத்துக் கொண்டு நின்றிருப்பார். ஆள் நல்ல உயரம், அழகு, கம்பீரம் வாட்டசாட்டம். (நானும்தான்!) என் மனசு கொஞ்சம் கொஞ்சமாகப் பேதலிக்க ஆரம்பித்தது. என் சிநேகிதி (இவருக்குச் சொந்தம்)யும் இதற்குத் தூபம் போட்டாள். அவள் வீட்டிற்கு செல்லும் சாக்கில், இவரையும் இவரது ஃபோட்டோவையும் பார்த்து மயங்கி நிற்பேன். அவருக்கும் என்னிடம் ஈடுபாடு இருந்ததால் ஆசை காதலாகப் பரிணமித்தது. நிறையத் தனியாகச் சுற்றியிருக்கிறோம். ஆனால் தப்புத் தண்டாவுக்கெல்லாம் போனதில்லே. வெளியே தைரியசாலி போல் காட்சியளித்தாலும் மனசுக்குள்

நான் ஒரு பயந்தாங்கொள்ளி.

நாங்கள் திருமணம் செய்து கொள்ள முடிவெடுத்தபோது என் தரப்பிலிருந்து பலத்த எதிர்ப்புக் கிளம்பியது. என் மாமியாருக்கு என்னைப் பிடித்துவிட்டதால் அவர்கள் தரப்பில் தொந்தரவில்லை. என் அம்மா ரொம்ப ஆசாரம்; அப்பா கிடையாது. அண்ணன் அதிகாரம்தான். என்னை வீட்டிலடைத்து, சித்திரவதை செய்தார்கள். தற்கொலை செய்து கொள்வேன் என்று பயமுறுத்தி வெளியே வந்தேன்.

என் ஸ்கூல் பிரின்சிபால் அவருக்கு நண்பர். அதனால் மீண்டும் எங்கள் சந்திப்புத் தொடர்ந்தது. ஜூன் 16, 1978ல் அவருடன் 'ஓடி' விட்டேன். ரிஜிஸ்தர் கல்யாணம் தான். கொஞ்சம் பணத்தைத் தள்ளிவிட்டு உடனடியாகக் கல்யாண ஸர்டிஃபிகேட்டும் வாங்கிவிட்டோம். அவர் வீட்டுக்கு என் அண்ணன் போலீஸுடன் வந்து மிரட்டினான். நகையெல்லாம் பிடுங்கிக் கொண்டான். நான் மசியவில்லை. பிப்ரவரி 4ல் மறுபடியும் எங்கள் திருமணம் கிறிஸ்துவ முறைப்படி நடந்தது! கட்டிய புடைவையுடன் என் கணவர் என்னை ஏற்றுக் கொண்டார் என்பது குறிப்பிடத்தக்கது.

**நாராயணன் (தமிழ்—ஹிந்து—ப்ரொடக்ஷன் ஸூபர்வைஸர் ராலிஸ் இந்தியா) திருமதி சாயா மகிஜானி (ஸிந்தி—சீக்கியர்—பள்ளி ஆசிரியை)**

**நாராயணன் சொல்கிறார்:**

நான் முதல் மாடி. அவள் எதிர்த்த போர்ஷனில் கிரவுண்ட் ஃப்ளோர். பார்த்துக் கொள்ள நல்ல ஆங்கிள்! காலேஜிலும் எனக்கு இரண்டு வருட ஜூனியர். எனக்குக் காதல் கீதலெல்லாம் இல்லை. அவளுக்குத் தான் உள்ளூர அப்படியோர் ஆசை! என் அப்பா திடீரென்று காலமானார். குடும்பப் பொறுப்பை நான் ஏற்றுக்கொள்ள வேண்டிய சூழ்நிலை. தக்க சமயம் இதுதான் என்று அவள் தனது காதலை என்னிடம் வெளியிட்டாள். எனக்கு அப்போதும் காதல் பிறக்கவில்லை. கிடைத்த வரையில் லாபம் என்று அவளுடன் சுற்றிக் கொண்டிருந்தேன். அப்போதே இன்னும் பல 'நண்பி'களும் எனக்கு இருந்தார்கள். அவளுக்கும் அது தெரியும். இருந்தாலும் பொறுமையாக இருந்தாள். நிச்சயம் இவனை வென்றுவிடலாம் என்ற தன்னம்பிக்கையுடன் காத்திருந்தாள். காத்திருந்தது வீண் போகவில்லை. அவளை மணப்பதாக வாக்களித்தேன்.

என் அம்மா நாகரீகமானவள்தான். (இந்த 52 வயசிலும் விம்பிள்டனையும், மைக்கேல் ஜாக்சனையும் ரசிப்பாள்.) ஆனாலும் இந்தத் திருமணத்தை எதிர்த்தாள். எதிர்த்த வீட்டிலிருந்து கொண்டே தனக்குத் தெரியாமல் பிள்ளையை வளைத்துப் போட்டுவிட்டாளே என்ற ஆத்திரமாயிருக்கும். அவர்கள் வீட்டில் பலத்த எதிர்ப்பு; அவளுடைய அண்ணன் தம்பிகளுடன் சில சமயம் கைகலப்பே ஏற்பட்டதுண்டு. திடீரென்று அவளுடைய அப்பா மண்டையைப் போட, அதற்கு நான் காரணமாக்கப்பட்டேன். ஒருவழியாக இராக்கிலிருந்து அவளுடைய அத்தை வந்து

கோத்ரெஜ் படைத்துள்ள சுகபோகத்தின் சிகரம்: மார்வல் லக்ஷரி சோப்




செழுமையான
க்ரீம்போன்ற நுரை
மற்றும் மனம் மயக்கும் நறுமண

விலை (75 கிராம்) : ரூ. 4.50 (தலவரிகள் தனி

Mudra: B GS 4079 TAM

# புற்று நோய்க்கு ஆயுர்வேத சிகிச்சை



என் பெயர் குதிடேர நஞ்சம்மா. எனக்கு 44 வயது ஆகிறது. என் தாளாத வயிற்றுவலியைக் குணப்படுத்த 1979 இல் ஆபரேஷன் செய்து கொண்டேன். ஆனால் வலி குறையவே இல்லை. அதனால் டாக்டர்கள் என்னை ஒரு புற்றுநோய் நிபுணரைக் கலந்தாலோசிக்கும்படி கூறினார்கள். முதுகுத் தண்டின் அடிப்பகுதியில் எனக்குப் புற்று நோய் கண்டிருப்பதை அறிந்து பதினான்கு முறை ரேடியம் சிகிச்சை அளித்தார் அந்த நிபுணர். ஆனாலும் வலி குறையவில்லை. இந்த நிலையில் நான் ஹைதராபாத் சிக்கட் பள்ளியைச் சேர்ந்த டாக்டர் எம். பாபுராவிடம் போனேன். அவர் அளித்த ஆயுர் வேத சிகிச்சையால் குணமடைந்திருந்த ஒரு புற்று நோயாளி விடுத்திருந்த அறிக்கையைப் படித்திருந்தேன். பன்னிரண்டு வாரங்களுக்குத் தொடர்ந்து எனக்கு மருந்துகள் கொடுத்தார் புற்றுநோய் நிபுணர் டாக்டர் பாபுராவ். அதன் முடிவில் என்னைப் பரிசோதித்துப் புற்றுநோயின் அறிகுறிகள் கூட என் உடலில் இல்லை என்று உறுதி அளித்தார். என் நோய் குணமாகப் பெற்று இப்போது மகிழ்ச்சியாக வாழ்கிறேன். டாக்டர் எம். பாபுராவுக்கு என் நன்றி உரித்தானது.

குதிடேர நஞ்சம்மா,
மே/பா பி. வி. பூவையா, எஸ். பி. ஐ.,
ஸெயின்ட் மார்க்ஸ் சாலை, பெங்களூர் — 560 025.

| விலாசம் | போன் நெம்பர் | பார்க்கும் கிழமை |
|---|---|---|
| டாக்டர் எம். பாபு ராவ்<br>கான்சர் இன்பர்மரி (ஆபீஸ்),<br>1—1—271/3, சிக்கட்பள்ளி<br>ஹைதராபாத்—500 020 | 64735 | பிரதி வியாழன் & வெள்ளி |
| C/o. ஹோட்டல் சுதாரா,<br>உஸ்மான் ரோடு, தி. நகர்,<br>சென்னை—600 017. | 445164 | பிரதி சனி |
| C/o. ஹோட்டல் பிருந்தாவன்,<br>எம். ஜி. ரோடு,<br>பெங்களூர்—560001 | 573271 | பிரதி ஞாயிறு |
| C/o. ஹோட்டல் கே.கே. இண்டர் நேஷனல்<br>தெற்கு ரயில் நிலையம் எதிரில்<br>எர்ணாகுளம்;<br>கொச்சின்—682 016. | 366010<br>366040 | பிரதி திங்கள் |
| C/o. ஹோட்டல் நட்ராஜ்,<br>பகட்கன்ஜ்<br>இம்பீரியல் தியேட்டர் அருகில்<br>புது தில்லி—110 055 | 522699 | பிரதி செவ்வாய் |
| C/o. ஹோட்டல் மிட்—டௌன்,<br>அந்தேரி ரயில்வே எதிரில்,<br>ஸ்டேஷன் (மேற்கு)<br>பம்பாய். | 628882 | பிரதி புதன் |

அவர்களைச் சம்மதிக்க வைத்தான். பாந்த்ரா கோர்ட்டுக்குச் சென்றோம். 'ஆதர்ஷ்திருமண மண்டபம்' என்ற அமைப்பு ஒன்று. இந்த மாதிரி கலப்புத் திருமணங்களில் ஸ்பெஷலிஸ்டுகள்! அவர்கள் புண்ணியத்தில் அன்றே திருமண ஸர்டிஃபிகேட்டும் கிடைத்தது. ரிஜிஸ்தர் கல்யாணமென்றாலும், நான் ஹிந்து என்பதால், அக்னியை வலம் வரும் வைபவத்தை மட்டும் என் மாமியார் செய்யச் சொன்னார். என் தரப்பிலிருந்து யாரும் திருமணத்திற்கு வரவில்லை; என் மைத்துனன் தான் எனக்குச் சாட்சிக் கையெழுத்திட்டான்!

சம்பளப் பணமெல்லாம் வழக்கம்போல் என் அம்மாவிடமே கொடுத்துவிட்டதால், என்னிடம் இருந்தது ஏழே ரூபாய்தான். என் மனைவியிடம் 400 ரூபாயிருந்தது. அவள் புண்ணியத்தில் அன்றே 'பேயிங் கெஸ்டாக' ஒரு ஹிந்திக்காரர் வீட்டில் குடியேறிவிட்டோம். என் வீட்டுக்குச் சென்று, அம்மாவிடம் திருமணமாகிவிட்டதைத் தெரிவித்துவிட்டு, என் தங்கைக்கு காமர்ஸ் பரீட்சைக்குப் பன்னிரெண்டு மணி வரையில் கணக்குச் சொல்லிக் கொடுத்துவிட்டு, நான் என் புது வீடு செல்லும்போது நள்ளிரவு மணி 12.30; ஒரு பேயிங் கெஸ்டாக, முதலிரவைக் கழித்த தம்பதிகள் அநேகமாக நாங்களாகத்தானிருப்போம்!

## திருமதி அர்ச்சனா சதீஷ் பெட்னேகர் (தமிழ்—ஹிந்து—பாங்க் ஆபீஸர்), சதீஷ் வாசுதேவ் பெட்னேகர் (மராத்தி— ஹிந்து—பாங்க் ஆபீசர்)

### திருமதி அர்ச்சனா சொல்கிறார்:

யூனியன் பாங்க்கில், நானும் அவரும் சேர்ந்து ஒரே இலாகாவில் பணிபுரியும் போது அறிமுகமானோம். CAIIB பரீட்சைகளுக்கு, அவர் எனக்குப் பெரிதும் உதவியாயிருந்தார். ஆபீசர்களுக்கான பரீட்சை நடந்த போதும் நாங்கள் இருவரும் சேர்ந்தே எழுதினோம். அத்தனை பேரில் நாங்களிருவர் மட்டுமே பாஸ் செய்து ஆபீசர்களானோம். படிப்பு ஏற்படுத்திய நெருக்கம் காதலாக மலர்ந்தது.

இரு தரப்பிலிருந்தும் எங்கள் திருமணத்திற்கு எதிர்ப்புக் கிளம்பியது. நாங்கள் பொறுமையாகக் காத்திருந்தோம். இந்த இடைவெளியில் அவர் தாணாவில் ஒரு ஃப்ளாட் புக் பண்ணிவிட்டார். அது தயாரான நிலையில் எங்களிருவரின் குடும்பத்தாரும் அரைகுறை மனசோடு திருமணத்துக்குச் சம்மதித்தனர். பதிவுத் திருமணம்தான்! இரு தரப்பினரும் வந்திருந்தனர்.

இருவருமே ஹிந்துக்கள். அதனால் பண்டிகைகள் எல்லாம் கிட்டத்தட்ட ஒன்றாகத்தானிருக்கும். எனக்கு நம்ம ஊர்ச் சாப்பாடுதான் பிடிக்கும். இருந்தாலும் அடிக்கடி மராத்தியர்களின் உணவு வகைகளை (வெஜிடேரியன்) மட்டும் அவருக்காகச் சமைப்பதுண்டு. அவர் தேவையானபோது, நான்—வெஜ்ஜை வெளியே சாப்பிட்டுக் கொள்வார். பொது நிகழ்ச்சிகள், விசேஷங்களின் போதுமட்டும்தான் கொஞ்சம் அட்ஜஸ்ட் பண்ண வேண்டியிருக்கும்.

கலப்புத் திருமணங்கள் எல்லாமே வெற்றி பெற்றுவிடுவதில்லை என்பதும் உண்மை; ஒரு தமிழ்—ஹிந்தி (உ.பி.) திருமணத்தில் கணவன் தினமும் குடித்துவிட்டு வந்து தன்னை அடிக்கும் கொடுமை பற்றி அந்தப் பெண் எங்களிடம் விவரித்தாள். மற்றொரு தமிழ்—குஜராத்தி தம்பதியரில் இரண்டு குழந்தைகள் பிறந்த பின், கணவன், வேறொரு குஜராத்திப் பெண்ணின் காதலுக்காகப் பித்தாக அலைவதையும் சொல்லி அந்தப் பெண் எங்களிடம் வருத்தப்பட்டாள். இருவருமே தங்கள் பெயரை வெளியிட விரும்பவில்லை. ஆனால் இவை இனம் மாறித் திருமணம் செய்து கொண்டதால் ஏற்பட்ட கோளாறாகத் தெரியவில்லை. எல்லாம் தீய பழக்கங்களுக்கு அடிமையானதன் விளைவுதான்!

— அபர்ணா

அவை கலப்புத் திருமணங்கள்;
இது திருமணமில்லாத கலப்பு!



## அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி

## ரூ.1000/- முதல் பரிசு பெறும் சிறுகதை

விடிந்த அரவத்தில் முழிப்புத் தட்டிய மயிலப்பனுக்கு, தலை 'விண்ண்' ணென்றிருந்தது. பாறையாகக் கனத்தது. கெட்ட கெட்ட கனவுகள் நிறைய கண்ட களைப்பு. தீப்பிடித்த மாதிரி கண்கள் எரிந்தன. நாசிக்குள் வெப்ப அலைகள். காய்ச்சலாக இருக்குமோ...? அவன் மார்பில் கையை வைத்துப் பார்த்துக் கொண்டான். நெருப்பாகத் தகித்தது. எழுந்திருக்க முயன்றான்.

ம்ஹூம். முடியலே. அப்படியே கிடக்க வேண்டும் போல ஓர் அயற்சி. மூச்சுப் பிடித்துக் கொண்டு எழுந்தான்.

மூட்டுக்கு மூட்டு வலி. இடுப்பைச் சுற்றிக் கடுகடுப்பு. தொடைச் சதைகளில் முறுக்கிப் பிழிகிற வலி.

அப்படியே குந்துக் காலிட்டுச் சுவரில் சாய்ந்து கொண்டான். பெருமூச்சு விட்டபோது... நாசித்துளைகள் காந்தலெடுத்தது.

'..... இதென்ன கடவுளே, ஒறங்கி முழிக்கறதுக்குள்ளே காச்ச வந்து பேயா அமுக்கிக்கிடுச்சு. பன்னிகளைப் பத்தணுமே! எப்படி மேய்க்கப் போறது? ஏலாது போலிருக்கே...'

பங்குனி மாசம். வறுத்த கோடை, மழைத்



**மேலாண்மை பொன்னுச்சாமி**



தண்ணியில்லாமல் வறண்ட கோடை. இந்தக்காலத்தில் இப்படிகூதல் நடுக்குகிறதே. மார்கழி மாசம் மாதிரி...

விரித்திருந்த பழைய கிழிந்த சேலைத் துணியை எடுத்து மூடிக் கொண்டான். கொக்கு நோய் கண்ட கோழி மாதிரி, தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு, அப்படியே உட்கார்ந்திருந்தான்.

குடிசைக்கு வெளியே, கூட்டுக்குள் பன்றிகளின் இரைச்சல். நேரம் தப்பிவிட்டதால் ஒன்றையொன்று கடிக்கிறதோ...?

அவன் மனசுக்குள் பன்றிகளின் உறுமல்களும், அலறல்களும், குட்டிகளின் கீச்சிடல்களும்.

"பன்னிகளைத் தொறந்து விடணுமே... என்ன செய்யறது?"

மகளைக் கூப்பிட நினைத்தான். உதடுகள் காய்ந்து வெடித்துக் கிடந்தன. வாயில் வறட்சி. நாவெல்லாம் கசப்பு. சிரமப்பட்டு வாயைத் திறந்தால்... உயிரும் உஷ்ணமும் வெளியேறுவதைப் போன்ற பிரமை.

"செந்தட்டி... செந்தட்டி..."

அவ்வளவு சத்தமிட்டு அழைத்ததில் அயர்ச்சி. கண்களை மூடிக்கொண்டான். இமைகளின் அழுத்த உரசலில் மெல்லிய சுகம்.

காய்ந்த தலையைச் சொறிந்து கொண்டு, தூக்க அசதியோடு வந்து நின்றாள், சிறுமி. பத்து வயசுக்கு மீறாத அரும்பு. சாயம் போய்க் கிழிந்த பாவாடை, உடலில் ஒட்டியிருந்தது.

இந்தச் சின்னஞ்சிறுசு, இத்தனை பன்னிகளையும் எப்படிக் கவனிச்சு மேச்சுடும்? விளையாட்டுப் போக்கில் கவனம் பிசகிட்டா, ஏதாச்சும் தப்பு வந்து சேருமே... ஆனால் வேறு கதியில்லியே...

மகராசிபோனவருஷம்போய்ச்சேர்ந்துட்

டாள். வரிசையாய் நாலு புள்ளைகளைப் பெத்துப் பெத்துச் சாவின் கையில் பறி கொடுத்தவள். அஞ்சாவதைப் பெறுகிற போது... புள்ளையோடு சேர்ந்து அவளும் பறிபோயிட்டா...

'பிரசவத்திலே கஷ்டம்வந்துட்டா...இந்தப் பட்டிக் காட்டுலே என்ன வைத்திய வசதி இருக்கு? ஒரு ஆசுபத்திரியோ... ஒரு டாக்டரோ... ஒரு எழவும் கிடையாது... பொழைச்சு எந்திரிச்சா... சாமிக்குப் பொங்கல் வைக்குறது. போய்ச் சேர்ந்துட்டா விதியைச் சொல்லிப் பொலம்ப வேண்டியது. வேறென்ன செய்ய...? ஹூம்!

'அவ கண்ணை மூடுன அன்னிக்கே... நானும் போய்ச் சேர்ந்திருக்கணும். முடியலியே... எப்படி முடியும்? தாயில்லாத இந்தப் பச்சை மண்ணை நாதியத்த அனாதையாக்கிட்டு, நாம மட்டும் எப்படிக் கண்ணை மூடுறது?'

"என்ன அய்யா...?"

செந்தட்டியின் மூன்றாவது அழைப்புக் குரலில் தலையைத் தூக்கி மகளைப் பரிவோடும், பச்சாதாபத்தோடும் பார்த்தான். நாவால் உதட்டை ஈரமாக்கிக் கொண்டான்.

"அய்யாவுக்குக் காச்சலா இருக்கு. எந்திக்கக்கூட முடியலே. பன்னியைப் பத்திக்கிட்டுப் போய் மேச்சுட்டு வா... என்ன?"

சின்ன உடம்பை ஏழு கோணலாக வளைத்தாள். முகத்தில் செல்லச் சிணுங்கல். மறுக்கிறாள். மனிதர்கள் 'உட்கார்ந்து' கொண்டிருக்கிற ஓடைக்காட்டில், போக அவளுக்கு இஷ்டமில்லை.

காய்ச்சல் வெறியில் இந்தச் சின்ன மறுப்பைக்கூடச் சகித்துக் கொள்ள முடியவில்லை. சண்டாளமாக வந்த கோபத்தில் மட்டியைக் கடித்தான். ஆத்திரத்தில் கண்களை விரித்தான்.

மனசுக்குள் ஒரு சின்ன மனித நேயக் குரல்...'பாவம், தாயில்லாப் புள்ளை... பச்சை மண்ணு.'

கடித்த அடி உதட்டை விடுவித்தான். பார்வையில் கனிவை வரவழைத்துக் கொண்டான். குரலை மிருதுவாக்கிக் கொண்டான்.

"அய்யாவுக்கு முடியலேம்மா... பன்னி கத்துது பாரு... பத்திக்கிட்டுப் போம்மா... சொன்னதைக் கேளு... நல்ல புள்ளை இல்லே நீ? அடுத்த மாசம் பொங்கலுக்குப் புதுச் சட்டை தைச்சுத் தாரேன், என்ன?"

"சரி..." முகத்தில் பயத்தின் வாட்டம். சம்மதிக்காத மனத்தோடு சம்மதித்தாள்.

"கூட்டை மறைச்சிருக்கிற பலகைக் கல்லை நகர்த்தி வைச்சுடு. கூடையைக் கையிலே எடுத்துக்க. சாணி பொறுக்கணும்லே? வெள்ளாமையிலே தப்பி வுழுந்துராமப் பாத்துக்கோ. அந்தச் சலவனும், 'வால் வெள்ளையும்' கள்ளத்தட்டுலேயே திரியும். அதுகளைக் கவனிச்சுக்கோ... என்னம்மா..."

"சரிய்யா."

அவ்வளவு பேசிய களைப்பில் கழுத்து வலிக்க, மறுபடியும் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டான். கண்களை மூடிக் கொண்டான். மூடிய இமைகளுக்குள் வர்ண வர்ணமாய் ரேகைகள் மிதந்தன.

அகலக் கல்லை 'முக்கிப்' புரட்டுகிற சப்தம். விடுதலையான களிவெறியில் சப்த இரைச்சல்களோடு ஓடுகிற பன்றிகளின் சப்தம். பன்றிகளை அதட்டிக் கொண்டே ஓடுகிற செந்தட்டியின் காலடிச் சப்தம்.

கிராமத்தின் விளிம்புகளாக ஊரைச் சுற்றிலும் ஓடைகள். மழை நாள் தவிர, மற்ற நாட்களில் நீரோட்டமில்லாத ஓடைகள். சில இடங்களில் பாறைகள்... சில இடங்களில் மணல், சில இடங்களில் கரிசல்... இன்னும் சில இடங்களில் பொட்டல் தரைகள். ஆனால், எல்லா இடங்களிலும் வஞ்சனையில்லாமல் அடர்த்தியான வேலிச் செடிகள்.

இந்த ஓடைகள்தான் கிராமத்து மக்களுக்குத் திறந்தவெளி கழிவறைகள். காற்றோட்டமான கழிவறைகள். மனிதர்கள் அவஸ்தையோடு கழித்துவிட்டுப் போகும் அசிங்கத்தை... வாலையாட்டிக் கொண்டு ஆவலோடு வாரித் தின்று கொண்டே பன்றிகள்...

ஓடைகளைச் சுற்றிவிட்டுக் கூடு வந்து சேர மணி பத்துக்கு மேலாகி விடும்.

"முதலாளி... நல்ல ஸ்ட்ராங்கா ஒரு டீ குடுங்க!"

"என்னப்பா மயிலு, ஆளு ரொம்ப அசந்துருக்கிறே, நேத்துச் சாயங்காலம் தண்ணி சாஸ்தியா?"

"தண்ணிக்கு வழியேது முதலாளி? என்னமோ தெரியலே, ராவோட ராவா வந்து காய்ச்சல் அமுக்கிக்கிடுச்சு. உசுர் போற மாதிரி மேலெல்லாம் வலி. மண்டைக்குத்து. நீங்க குடுக்குற டீயிலேதான், காச்ச வுடணும், பன்னி பத்தப் போவணும்."

"இந்தா, அடி. கஷாயமா எறக்கியாச்சு. உதட்டுலே ஒட்டும்."

வெள்ளை மாத்திரையை வாய்க்குள் போட்டு, டீயை உறிஞ்சினான். மாத்திரை தொண்டைக்குள் சிக்கிக் கொண்டது. முகத்தைக் கோணி, கண்களைச் சுருக்கி, வாயை அழுந்த மூடி... அப்பாடா... ஒரு வழியாக

"எம் ஃபார் மாங்கோ... ஏ ஃபார் ஆப்பிள்...."

"நாசமாய்ப் போச்சு. இது என்ன முதியோர் கல்வி நிலையம்னு நினைப்பா? எழுத்தை மட்டும் படிங்க போதும்."



# N.S.K.
## பைனான்சியர்ஸ்

இதுவரை
யாரும் அளித்திடாத

சிறப்பு பாதுகாப்பு!

உங்களுடைய முதலீட்டுப் பணத்திற்கு சிறப்பு பாதுகாப்பாக அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டு மனைப் பத்திரம் அளிக்கும் திட்டம்

**சிறப்பு பாதுகாப்பு!**

1. ரூ. 25,000/-ம் அதற்குமேல் உள்ள டெபாசிட்டுகளுக்கு அரசு அங்கீகாரம் பெற்ற வீட்டுமனைப் பத்திரம் அளிக்கும் திட்டம்.
2. பேங்க் கேஷ் சர்டிபிகேட்.

**கவர்ச்சிகரமான வட்டி விகிதங்கள்**

| 1 வருடம் | 2 வருடம் | 3 வருடம் | 5 வருடம் |
|---|---|---|---|
| 20% | 21% | 22% | 24% |

(குறைந்த பட்சம் ரூ. 1000/- அதன் மடங்குகளும்)

கூடுதல் போனஸ் வட்டி:
3 மாதங்களுக்கு ஒருமுறை வட்டி பெற 1%
6 மாதங்களுக்கு ஒருமுறை வட்டி பெற 2%
12 மாதங்களுக்கு ஒருமுறை வட்டி பெற 3%

**கோல்டன் கேஷ் சர்டிபிகேட்:** உங்களுடைய முதலீடு 42 மாதங்களில் இரு மடங்காகிறது. உதாரணம் ரூ. 10,000/- ரூ. 20,000/- ஆகிறது. (இச்சலுகை ஆகஸ்டு 31ந் தேதி வரை மட்டுமே) (பழைய திட்டம் 48 மாதங்கள்)

## அன்பளிப்பு டிவி

| முதலீடு | வருடங்கள் | சிறப்பு பரிசு | கோல்டன் கேஷ் சர்டிபிகேட் 42 மாதங்கள் |
|---|---|---|---|
| 5000/- | 5 | குவார்ட்ஸ் வால் கிளாக் | வெள்ளி குத்துவிளக்கு |
| 10,000/- | 5 | உஷா டேபிள் ஃபேன் | குவார்ட்ஸ் வால் கிளாக் |
| 25,000/- | 5 | பிரீத்தி மிக்ஸி | உஷா டேபிள் ஃபேன் |
| 50,000/- | 5 | சாலிடேர் போர்ட்டபிள் டிவி | பிரீத்தி மிக்ஸி |
| 1,00,000/- | 5 | சாலிடேர் கறுப்பு வெள்ளை டிவி | சாலிடேர் போர்ட்டபிள் டிவி |

சிறப்பு பரிசுகள்: ஜுலை 15-ந்தேதி முதல் ஆகஸ்ட் 31-ந்தேதி வரை வழங்கப்படும். (பிக்சட் டெபாசிட்டுகளுக்கும், கோல்டன் கேஷ் சர்டிபிகேட்டுகளுக்கு மட்டுமே)

**பேங்க் கேஷ் சர்டிபிகேட்**

| 5 வருடம் | 6 வருடம் | 7 வருடம் | 10 வருடம் |
|---|---|---|---|
| 18% | 19% | 20% | 24% |

டெபாசிட்டுகள் ஏற்றுக் கொள்ளப்படும்.



**N.S.K.** பைனான்சியர்ஸ்

38-B, பர்கிட் ரோடு [முதல் மாடி], (தி. நகர் பேருந்து நிலையம் எதிரில்)
தி. நகர், சென்னை-600 017, போன் : 447135

**எதிர்கால சேமிப்பிற்கு என்.எஸ்.கே.**



# பரிசு ரூ 300/-

## எம்.ஜி.ஆரின் வாரிசு யார்?

## வாசகர் பட்டி மன்றம்



இந்தப் பட்டிமன்றத்தில் வாராவாரம் ஒரு பிரச்னை உங்கள் முன் வைக்கப்படும்.

நீங்கள் மைக் முன் நின்று ஒரு கட்சி சார்பில் பேசினால் என்ன முக்கிய கருத்துக்களைக் கூறுவீர்கள்?

கல்கியில் சுமார் அரைப் பக்க அளவில் எழுதி அனுப்புங்கள்.

இரு கட்சியிலும் ஒவ்வொரு கட்டுரை சிறந்ததெனத் தேர்ந்தெடுக்கப்பட்டுப் பிரசுரமாகி தலா ரூ. 100 பரிசு பெறும்.

தவிர இருதரப்பிலும் ஐந்து ஐந்து கட்டுரைகளிலிருந்து முக்கியமான ஒவ்வொரு கருத்து மட்டும் பிரித்தெடுக்கப்பட்டுப் பிரசுரமாகும். இவற்றுக்கு ஆறுதல் பரிசு தலா ரூ. 10.

ஒவ்வொரு கட்சியும் பெற்ற மதிப்பெண்களின் விவரமும் இடம் பெறும்.

ஒரு கோரிக்கை: உறையின் மேல் ''பட்டி மன்றம் — 1'' என்று குறிப்பிடவும்.

ஒரு நிபந்தனை: கீழே விலாசமெழுதி இந்த அரைப் பக்கத்தை முழுமையாகக் கத்திரித்து உங்கள் கட்டுரையுடன் இணைக்க வேண்டும்.

முதல் பட்டி மன்றத் தலைப்பு:

**எம். ஜி. ஆரின் வாரிசு வீரப்பனா? ஜெயலலிதாவா?**

முடிவு தேதி: 18.8.86

பெயர்:....................

விலாசம்:....................

....................

உள்ளுக்குள் இறங்கிவிட்டது.

டீயைக் குடித்தான். வழக்கம்போல் பீடியைப் பற்ற வைத்தான். பீடிப் புகை ஒவ்வவில்லை. வாயெல்லாம் கசந்து அழுறியது.

பீடியைத் தரையில் தேய்த்து எறிந்தான். வெளியே வந்து, வெறுப்புடன் எச்சிலைத் துப்பினான்.

உள்ளுக்குள் இறங்கிய டீயில், உடம்பு கதகதப்பாகியது. சிலைத் துணியை மூடிக்கொண்டு, முட்டங்காலைக் கட்டிக் கொண்டு உட்கார்ந்தான்.

நேரம் என்ன இருக்கும்?

ஒரு கொள்ளைக்காரனைப் போல் பேய் வேகத்தில் வந்து, வட்டமடித்து நின்றது பால்லாரி. வெற்றுக்கேன்களை இறக்கிவிட்டு, பால் நிரம்பிய கேன்களை ஏற்றிக் கொண்டு, வந்த வேலை முடிந்த திருடனைப் போல் வெறி வேகத்தில் புறப்பட்டுப் போய்விட்டது.

இந்தப் பால் லாரி ஊருக்குள் வரத் துவங்கிய பிறகு... பிள்ளைப் பால், ஓசி மோர், உறவுக்காரர்களுக்கு வெண்ணெய் தருதல் என்ற வழக்கங்களெல்லாம் 'ஒரு காலத்து விஷயமாக' ஆகிவிட்டது.

பால் லாரி வந்து திரும்பினால், மணி ஏழரை என்று அர்த்தம். இம்புட்டு நேரத்துக்கு, செந்தட்டி எங்கே போயிருப்பாள்? முத்தையா நாடார் புஞ்சைக்கு நேராகவா, ரெங்கசாமி நாயக்கர் புஞ்சைக்கு நேராகவா?

பாவம், சின்னப்புள்ளை! கவலென்னா என்ன, வேலென்னா என்னன்னு தெரியாம, தெருப் புழுதியிலே வீடு கட்டி விளையாட வேண்டிய வயசு. பெரிய மனுஷியைப் போல வீட்டுப் பொறுப்பேத்து, சட்டி பானை கழுவி, விறகு பாத்து, அடுப்புப் புகையிலே அல்லாடி... சோறாக்கி, காப்பி போட்டு, ஆணம் காச்சி... எல்லாம் விதிக் கொடுமை!

ஏதோ... நொண்டி வீரன் சாமி புண்ணியத்துலே... இந்த ஒரு பொட்டப் புள்ளையாச்சும் தப்பிப் பிழைச்சுத் தங்கியிருக்குறதுனாலே தான்... நாமஒரு குடும்பம்ங்கிற அந்தஸ்துலே இருக்கோம். வீடு வாசலோட இருக்கோம். இந்த அரும்பு இல்லேன்னா... நா ஒண்டிக் கட்டையா... பொறம்போக்கா... தண்ணி குடிக்கக் கூட நாதியத்த அனாதையாகத்தான் அலையணும்...

மயிலப்பன் அயர்ச்சியோடு கண்களை மூடி... இறுக அழுத்திவிட்டுத் திறக்கையில் இமை ரோமங்கள் ஈரத்தில் நனைந்திருந்தன.

நோய்வாய்ப்பட்ட நேரத்தில்தான் எந்த இழப்பும் பூதாகாரமாகத் தெரியும். மயிலப்பனுக்கும் மனைவியின் இழப்பு, எந்த நேரத்தையும் விட, இப்போது பெரிதாகத் தோன்றியது.

கொதிக்கிற நெற்றியைத் தொட்டுப் பார்க்கிற ஈரமான கைகள் இல்லை. 'ஐயய்யோ, காச்ச தீயா பொறியுதே' என்று பதறித் துடிக்கிற அந்த இதயம் இல்லை. 'படுத்துரு. பத்து அரைச்சுப் போடுதேன். கசாயம் காச்சித் தாரேன்' என பதைத்துப் போய் — பரபரத்துத் திரிகிற — அந்தப் பரிவு — அன்பு — உறவு — இல்லை.



''என்னங்க! எங்கம்மா வர்ருங்களாம். லெட்டர் வந்திருக்கு....''

''மறுபடியுமா? இப்பத்தானே மூணு வருஷத்துக்கு முந்தி வந்து போனுங்க.....''

ஆ... எம்புட்டுப் பெரிய இல்லே! சூன்யத்தையே சூழலாக்கிவிட்ட குரூரமான இல்லே. அடப் பாதரவே, எந்த மனுஷனுக்கும் வாய்த்துவிடக் கூடாத கொடுமையான இல்லே...!

உடம்பெல்லாம் வியர்த்துவிட்டதை, கொஞ்ச நேரம் கழித்தே உணர்ந்தான். தலை முடிக்குள் வியர்வைக் கசகசப்பு. கனம் குறைந்து விட்டது. நாசிக் காந்தல், எரிச்சல் எல்லாம் மட்டுப்பட்டிருந்தது.

சீலைத் துணியால் நெஞ்சு, முகம் எல்லாம் துடைத்துக் கொண்டான்! துணியைத் தலையைச் சுற்றிக் கட்டிக் கொண்டான். மேய்ச்சல் தளத்துக்குப் போகலாம் என்ற நினைப்பில், வீட்டுக்குப் போய்க் குச்சியை எடுத்துக் கொண்டான்.

ஊரையொட்டி நடந்தான். சாக்கடை வாய்க்கால் கட்டுமானத்துக்கான செங்கற் குவியல்... கற்குவியல்... சத்துணவுக்கூடத்துக்கான ஆஸ்பெஸ்டாஸ் தகடுகள்... ஊரையொட்டி ரோடு ரோலர்... புதுச்சாலே...

எல்லாம் நடந்து முடிந்த பஞ்சாயத்துத் தேர்தலின் 'உடனடிப் பலன்கள்...

ஓடைக்குள் இறங்கினன். மனிதக் கழிவுகள். வேலிச் செடியைச் சுற்றி அசிங்கங்கள். பழகிப் போன வேலைத்தளம். அருவருப்பில்லாமல் 'வில், வில்' லென்று விறைப்பாக நடந்தான்.

மேல் பக்க ஓடையிலிருந்து வடப்பக்க ஓடைக்குப் போவதற்காகத் தோட்டங்கள் வழியாகக் குறுக்காக விழுந்து நடந்தான். மிளகாய்த் தோட்டங்கள் அஸ்தமன கதியில் இருந்தன. தொங்கட்டான் மாதிரி சின்னக் காய்கள் உச்சியில் தொங்க, இலைகள் பச்சை மாறிப் பழுப்பு நிறத்தில் நரைத்துப் போயிருந்தன.

அகத்தி வரிசைகள் மொட்டை மொட்டையாக நின்றன.

அந்த ஓடைக் கரையிலிருந்த புஞ்சை மண்ணை மிதித்த போது... உடம்பில் சிலிர்த்தது. தொட்டுக் கும்பிடணும் போல் மனசுக்குள் ஒரு புல்லரிப்பு.

இந்தத்தோட்டத்தில்தான்... அது நடந்தது. அட, இந்தப் புஞ்சைக்கார முதலாளி எம்புட்டு நல்ல மனுசர்...!

அன்னிக்கு நடந்ததென்ன, சாமான்யமான தப்பா? முந்நூறு, நானூறுன்னு அவராதம் போட்டுத் தள்ளியிருப்பாகளே... அதுக்கும்மேலேதானே அவருக்குச் சேதாரம் இருக்கும். ஆனா, எம்புட்டுப் பெருந்தன்மையாச் சொன்னரு...

''சரி சரி, போய்ட்டு வா... தப்பு யாருக்கும் வரத்தானே செய்யும். அதுக்காக எளியவன் — ஒன்னே என்ன செய்யறது? எனக்கு நேரம் சரியில்லேன்னு நெனைச்சுக்கிட வேண்டியதுதான்... ம்.''

நொண்டி வீரன் சாமியே அவர் மனசுக்குள் நின்னு பேசின மாதிரி, என்ன அருமையா — மனுசத் தன்மையோட — பெருந்தன்மையோட — பேசினரு! அவரு காலுக்குப் பூப்போட்டுத்தான் கும்புடணும். முடிஞ்சா... அவரு கைக்குத் தங்கக் காப்புக் கூடப் போடலாம். அவரு குடும்பம் ஒரு கொறையில்லாம தழைக்கணும்...

அப்போது —

மயிலப்பனிடம் நிறை மாதச் சினையாக, ஒரு பன்றி இருந்தது. இன்றைக்கோ, நாளைக்கோ எப்பவும் குட்டி போடலாம் என்ற விளிம்பில் நின்றது.

அந்தச் சினைப் பன்றியைக் கூட்டுக்குள் அடைக்க முடியாது. மற்ற பன்றிகள் இதைச் சித்திரவதைப் படுத்திவிடக் கூடும். அல்லது பிரசவ வேதனை வெறியில் இதுவும் மற்றப் பன்றிகளைக் கடித்துக் குதறிவிடக் கூடும்.

சினைப் பன்றியின் பின்னங்காலில் கயிறு போட்டு, கூட்டுக்கு வெளியே இரும்பு முளையில் கட்டிப் போட்டிருந்தான். அதன் முன் தரையில் பதித்திருந்த பட்டிலில் வாடாமல் கஞ்சித் தண்ணீர். அந்தக் கர்ப்பிணியை ராவும் பகலுமாகக் கவனித்துக் கொண்டிருந்தான். பணம் பெத்த பன்னி!

விடிந்து வெளியே வந்து பார்த்தான். கண்ணில் தேள் கொட்டியது போலிருந்தது. கயிறு அறுந்து இற்றுக் கிடந்தது. பன்றியைக் காணோம்.

பயமும் திகிலுமாய் நெஞ்சடைத்துப் போனான்.

பணம் பெத்த பன்னி பாழாயிடுமோ...

பழியைக் கொண்ணாந்து சேர்த்திடுமோ...

இரண்டு வகையான பயம் மனத்தைக் கவ்விக் கொண்டது.

மனத்தின் பரபரப்பு, காலில் இறங்க... மின்னலாகக் காடுகளில் ஓடித் திரிந்தான். முள்ளு மொடல்களைப் பொருட்படுத்தாமல், கண் மூக்கு தெரியாத வெறி வேகத்தில் அங்குமிங்குமாய்ப் பாய்ந்தான்.

கடைசியில் —

இந்தத் தோட்டத்தில் வந்து பார்த்தால் —

நிலம் உழுது புரட்டப்பட்டுக் கிடக்கிறது. வடகிழக்கு மூலையில் மிளகாய் நாற்றங்கால். பத்துப் பதினறு பாத்திகள். 30 நாள் வயசான நாற்றுகள். பிறந்து நாலைஞ்சு நாளான கோழிக் குஞ்சுகளைப் போல் மென்மையா... அழகா... சின்னஞ்சிறுசா... அடர்த்தியான இளம்பசுமையாய்...

நாற்றங்கால் முழுவதும் சினைப் பன்றி



"வரவர இந்த பஸ் பிரயாணிகளுக்கும் பொறுத் தன்மைங்கிறது அடியோடு இல்லாம போயிட்டுதே!"

"எதை வைச்சுச் சொல்றே?"

"பஸ் டெர்மினஸுக்கு வந்த பிறகும் மிதி சில்லறையைக் கொண்டான்னு ஞாபகம் வைச்சுக்கிட்டுக் கேட்டு நச்சரிக்கிறாங்க...."

உருண்டு புரண்டு, குரூரமாக நாசக்காடாகிக் கிடந்தது. ஒடிந்துபோன நாற்றுகளின் மிருதுவில் அரைமயக்கத்தில் பன்றி படுத்துக் கிடந்தது.

அந்த மயக்கத்திலும் பார்ப்பவர்கள் மிரளுகிற மாதிரியான மிரட்டலான உறுமல். 'மூச... மூச' என்று பெரிதாக மூச்சுவிட்டுக் கொண்டிருந்தது. சுற்றிலும் நிறைய குட்டிகள்... 'மொய் மொய்'யென்று.

அப்பாடா...! மனத்தின் கனம் பாதியாகக் குறைந்தது. உள்ளுக்குள் ஒரு கதவு திறந்து கொண்டதைப் போல... பாய்ந்த இளங்காற்றில் மனத்தின் வியர்வை துடைக்கப்பட்டது.

ஆனால், இன்னொர் அச்சம் மனத்தை அறுத்தது. நாசக்காடாகிக் கிடந்த நாற்றங்கால்!

நாற்றங்கால் என்பது, சம்சாரிக்கு மூலவித்தல்லவா? வெள்ளாமையை விட மதிப்பு மிக்கதல்லவா! நடுவைக்குப் பணம் போட்டு நாற்று வாங்கப் போனால்... ஆயிரத்துக்கும் மேலாகுமே! அம்புட்டையும் நாசமாக்கிடுச்சே!

மனசு மருகித் தவித்தது.

அடக் கொடுமையே... என்னதான் ஆகுமோ...? எம்புட்டுதான் அபராதம் போடுவாகளோ... நம்ம குடும்பமே, இதுலே நொறுங்கி, 'நொத்தவிடா' போயிடுமோ...

மீதியும் திகிலும் சினைப் பன்றியாகப் புரள, மனசு நாற்றங்காலாய்ச் சேரழிந்து கொண்டிருந்தது.

பிரசவ வலி பொறுக்காமல், வேதனை வெறியில் கயிற்றை அறுத்துக் கொண்டு, கண் மூக்குத் தெரியாமல் ஓடித் திரிந்து, படுக்கச் சுகமாக இருந்த இந்த நாற்றங்காலில் வந்து புரண்டிருக்கிறது.

சே! மிருகங்கிறது சரியாய்ப் போச்சே! அது குணத்தைக் காட்டிடுச்சே! பச்சைப் புல்லை மாதிரி இருக்கிற இந்த நாத்துலே படுத்துப் புரள மனுசனுக்கு மனசு வருமா?

அடக் கொடுமையே...! இப்ப என்ன செய்யறது?

ஒரு வழியாக – பன்றியை வீடு சேர்த்துவிட்டு, புஞ்சைக்கார முதலாளி வீட்டை நோக்கிப் பறந்தான். சிபிச் சக்கரவர்த்தி காலடியில் வந்து விழுந்த அடிபட்ட புறாவைப் போல... மயிலப்பனும் அவர் காலடியில் நெடுஞ்சாண்கிடையாக விழுந்து கும்பிட்டான்.

பதறிப் போன அவர், "எந்தி, எந்தி... எதுக்கப்பா கால்லே வந்து வுழுறே?"

பயத்தில் வாய் உளற... கண்ணில் நீர் மாலை மாலையாக வழிய... காய்ச்சல் கண்டவன் புலம்புகிற மாதிரி, தவித்துத் தவித்துச் சொல்லி முடித்தான். கடைசியில் —

"முதலாளி, நானறியாமல் நடந்து போன தப்புதான். ஆனாலும், ஒங்களுக்கு நட்டம் நட்டந்தானே! நீங்க எனக்குத் தகப்பன் போல. நா, உங்க நெழல்லே – ஆதரவுலே – பொழைக்கிறவன். நீங்க பாத்து, மனசு வச்சு, என்ன நியாயஞ் சொன்னாலும்... மறு பேச்சில்லாம நான் கட்டுப்படுறேன் முதலாளி"

என்று சொல்லிவிட்டு மருகி நின்றான்.

அப்போதுதான் அந்த வார்த்தைகளைக் கூறினார், தங்கமான மனுசராய்...தெய்வத்தை விட உயர்ந்த மனுசராய் – சிபிச் சக்கரவர்த்தியாய்...

"சரி சரி, தப்பு யாருக்கும் வரத்தானே செய்யும். அதுக்காக எளியவன் – ஒன்னை என்ன செய்யறது? எனக்கு நேரம் சரியில்லேன்னு நெனைச்சுக்கிட வேண்டியது தான்..."

அந்த மனித நேயக் குரல், இதோ... இப்பொழுது கூட ஒலிப்பது போலிருக்கிறது. நெஞ்சுக்குள் ஒரு சிலிர்ப்பு... தேகமெல்லாம் புல்லரிப்பு.

அடடா... எம்புட்டு அருமையான மனுசர்... மனுசரு. இவருதான் மனுசர்...

அந்தத் தோட்டத்தின் சரிவில் இறங்கி, மயிலப்பன் ஓடைக்குள் விழுந்தான். முள் செடிகளுக்கு மத்தியில் ஊடுருவி, கிழக்காகச் செல்கிறபோது நிமிர்ந்து பார்த்தான்.

கருமை கருமையாக நிறைய மேகங்கள். கல்யாணமாகி இன்னும் கர்ப்பம் தரிக்காத பெண்ணைப் போன்ற மேகங்கள். சாயங்காலம் மழை மேகங்களாக மாறவும் செய்யலாம். மலட்டு மேகங்களாகப் போய்விடவும் செய்யலாம். எல்லாம்..... அடிக்கிற காற்றைப் பொறுத்த விஷயம்.

காலைச் சூரியனின் கோடைக் கிரணங்களைத் தவிர்க்க, கையால் கண்ணுக்குக் குடையமைத்துப் பார்த்தான். செந்தட்டி கண்ணில் தட்டுப்படவேயில்லை. குச்சியைக் கக்கத்தில் இடுக்கிக் கொண்டு, மனிதக் கழிவுகளினிடையே நடந்தான். தெற்காகத் திரும்பிவிட்டான்.

ஓடையிலேயே அதோ..... அந்த இடம் பெரும் பள்ளம். ஆள் நின்றால் தலை தெரியாத ஆழம்.

அந்தத் தங்கமான மனிதருக்கு அந்த இடத்திலும் ஒரு துண்டுப் புஞ்சை இருக்கிறது.

ஓடையின் ஆழமான இடத்தைத் தாண்டிய மேட்டில், பன்றிகள் மேய்வது தெரிந்தது. செந்தட்டி எங்கே?

'விளையாட்டுப் போக்காக எங்காச்சும்

— ஆத்மாஸ்

றிக்காளா? பன்னிகளைத் தன்போக்கில் விட்டுவிட்டு, கவனப் பிசகாக இருக்காளா?

மயிலப்பனுக்குள் ஒரு சின்ன உதைப்பு.

நடையை எட்டிப் போட்டான். பத்தடி தூரத்தைத் துடியாய்க் கடந்திருப்பான். மகளின் கதறல், துல்லியமாகக் கேட்டது. மனசுக்குள் திக்கென்றது.

''ஐயய்யோ.... ஐயய்யோ.... அம்மா..... அய்யா..... ஐயய்யோ்..... வலிக்கே.''

வலி தாளாமல் துடித்தலறுகிற தனது ரத்தத்தின் குரல். தாயில்லாப் பிஞ்சின் அவலக் குரல்.

அவனது குலை பதறியது. ஈரக் குலையைப் பிடுங்குவதைப் போன்றதொரு திகிலுணர்வு. திக்திக்கென்று அடிப்பதைக்கூட மனசு நிறுத்திக் கொள்ள.... ஓட்டமும் நடையுமாக முட்செடிகளைக் கிழித்துக் கொண்டு பாய...

அந்த ஓடையின் ஆள் தெரியாத ஆழத்தில் —

செந்தட்டியின் காய்ந்த தலைமயிரை இடது கை பற்றியிழுக்க, வலது கையால் கன்னத்திலும், முதுகிலும் ஓங்கி ஓங்கி அடித்துக் கொண்டிருந்தார், ஒருவர்.

அவள் துடியாய்த் துடித்தாள்.

''புஞ்சையிலே இனிமே பன்னியே விடுவியா? இனிமே விடுவியா? பன்னியைப் புஞ்சையிலே..... இனிமே விட்டே.... கொன்று தோலை உரிச்சிடுவேன்.... சாக்கிரதை.

அவரின் முரட்டுக் குரல். அதே குரல். தங்கமான அதே மனிதரா.... இப்படி.....! புருக் குஞ்சை வதைக்கிற சிபியாக.... அவரா, இப்படி!

''முதலாளி, முதலாளி'' என்று கூப்பாடு போட்டுக் கொண்டே, ஒரே பாய்ச்சலில் வந்து சேர்ந்தான். மேல் மூச்சு கீழ் மூச்சு வாங்க வந்த மயிலப்பன், மகளைப் பிடுங்கித் தொடையோடு சேர்த்து அணைத்துக் கொண்டான்.

அந்தப் புருக் குஞ்சின் கன்னத்திலும், முதுகிலும் முரட்டுக் கை விளையாடிய தடங்கள்.... தடிப்பு தடிப்பாக.... ரத்தம் கன்றிப் போய்.....

அவனுள் தீக்கோலைச் சொருகியது போலிருந்தது. மனசெல்லாம் கிடந்து கொதிக்க.... ''முதலாளி, இந்தப் பச்சை மதலையை எதுக்கு இப்படி அடிச்சுக் கொன்னுருக்கிக.....?''

''தண்ணி பாஞ்சு கெடக்குற வெள்ளாமையிலே பன்னிகளை வுட்டு, ஒழப்புனு, எப்படி இருக்கும்?''

செந்தட்டி பயத்தில் ஒட்டிக் கொண்டு, விக்கி விக்கியழுதாள். அவள் விம்மித் துடிக்கிற துடிப்பைப் பார்க்கப் பார்க்க மனசுக்குள் குத்துண்ட வேதனை.

''இதுக்காகவா முதலாளி, இப்படிப் புள்ளையைத் தொலைச்சு எடுக்கணும்? இது நியாயமா முதலாளி? தாயில்லாப் புள்ளே முதலாளி!''

'தாயில்லாப் புள்ளேங்குறதுக்காக... புஞ்சையிலே பன்னியை விட்டுப் பாழாக்குனு.... முத்தமா கொஞ்சுவாக? நியாயமாம்... நியாயம்!''

''பாழாக்கணும்னு நெனச்சா முதலாளி செய்திருப்பா? தப்பித் தவறித்தானே விழுந்திருக்கும்? இதுக்குப் போய் இப்படி அடிச்சுக் கொன்னுருக்கீங்களே.... அப்படியே தப்பித் தவறிப் புஞ்சையிலே விழுந்துட்டாலும், என்ன அழிமானம் ஆயிருக்கும் முதலாளி? ஒஞ்சு போன வெள்ளாமைதானே? இதைக் கூட முதலாளிமார் பொறுத்துப் போகக் கூடாதா முதலாளி?''

''எதுக்குடா பொறுத்துப் போகணும்? பஞ்சாயத்துத் தேர்தல்லே ஏஞ்சாதிக்காரனுக்கு ஓட்டுப் போடாத சாதிக்காரனுக்கெல்லாம் என்னத்துக்குப் பொறுத்துப் போகணும்? நாலு போடு போட்டு, வைக்கிற இடத்துலே உங்களை வச்சாத்தான்.... உங்களுக்கெல்லாம் மனசுலே பயம் வரும்.''

வாயடைத்துப் போனான் மயிலப்பன். இதுக்கு மேலே என்னத்தைப் பேச?

இவர் இவரா இருந்தப்போ, எம்புட்டு அருமையான மனுசரா இருந்தாரு....! மனுசனை மனுசனு மதிக்கிற, மனுசரா இருந்தாரே....!

பூப்போட்டு கும்புடக் கூடிய காலாக.... தங்கக் காப்பு செய்து போடத்தக்கக் கையாக இருந்தாரே.....!

அதே கைதான்.... செந்தட்டியை—சின்னஞ்சிறு மலரை — கிள்ளி நசுக்கி எறிஞ்சிருக்கு....

அப்பேற்பட்ட மனுசர்.... எப்படி இப்படி மாறிட்டாரு? எது இவரை இப்படி மாத்திச்சு.....? அதான்.... அவரே சொல்லிட்டாரே.....

''ஏஞ்சாதிக்காரனுக்கு ஓட்டுப் போடாத சாதிக்காரனுக்....

காலோடு ஒட்டி நிற்கிற மகள் நடுங்குகிறாள். விக்கி விக்கி அழுகிறாள். அவள் பாவாடை மூத்திரத்தில் நனைந்து கிடந்தது.

'அடிபட்ட பயத்திலேயே காய்ச்சல் வந்து செத்துப் போவாளோ....'

அவன் மனசு நினைக்க நினைக்கக் கொதித்தது....

மகளைத் தடவிக் கொடுத்தபோது.... கழுகின் காலடியில் சிக்கிக் கொண்ட புருவைப் போலத் துடித்தது. அவனது மனம்.



''எங்களுக்குக் கல்யாணமாகி பத்து வருஷமாச்சு. இருந்தும் இன்னும்.....''

''குழந்தை பாக்கியம் ஏற்படலையா?''

''அதில்ல. இன்னும் அவருக்குச் சமையல் சரியா செய்யத் தெரியலே....!''

## பட்டுக்கோட்டை பிரபாகர்

# என்னைக் காணவில்லை

1

வெட்டி வைத்த கேக் துண்டுகளாய் கார்கள், மற்றும் கார்கள், தவிர கார்கள் அருகருகே நின்று ரகசியம் பேசிக் கொண்டிருந்தன. ஆகஸ்ட் காற்றின் உத்தரவின்படி மரங்களின் ருத்ர தாண்டவம். எங்கோ மழைக்கு இங்கே குளிர். விமான நிலையம் முழுக்க மின்சார விளக்குகள். ஐடெக்சில் முகம் கழுவிய வானத்தை நோக்கி வெளிச்சத் தோடுகளணிந்த அந்த அலுமினியக் கழுகு பறக்கத் துவங்கியது. மற்றொன்று இறங்குவதற்கு யோசனை செய்து கொண்டிருந்தது.

'வருகை' பகுதிக்கு முன்னால் நிறுத்தப்பட்ட டாக்ஸியில் இருந்து இறங்கிக் கொண்டாள். பணம் கொடுத்துவிட்டு கைக் கடிகாரம் பார்த்துக் கொண்டாள்.

9 : 08 : 17

கோர்ட்டவாலி போல துப்பட்டாவை மார்புக்குக் குறுக்கே போட்டிருந்தாள். ஆரோக்கியம் இருக்குமிடமான வெளிப்பாய் நிறத்தில் உதடுகள் மின்னின. ஜிக் என்று உடம்பும், கிஸ் என்று கன்னமுமாய் அவள் உள்ளே நடக்கையில்.... எதிரே வந்த இளைஞன் நின்று, திரும்பி, நடந்து, நின்று, திரும்பி, நடந்து, நின்று, திரும்பி.....

உள்ளே வந்தவள் விசாரணைப் பகுதிக்கு வந்தாள்.

''எக்ஸ்க்யூஸ் மி.''

மன்னிக்கத் தயாரில்லாத, சூயிங்கம் மென்ற இளைஞன் ரிசீவரில் அகலமாகச் சிரித்துக் கொண்டிருந்தான்.

காத்திருந்து அவன் வைத்ததும் கேட்டாள், ''பெங்களூர் ஃப்ளைட் நேரப்படி வருமா?''

''யெஸ் மேடம். இன்னும் சில நிமிடங்களில் அறிவிப்பு வரும்.''

நன்றி சிந்திவிட்டு கறுப்பு பாலிமர் நாற்காலியில் சென்று அமர்ந்தாள். கழுத்துச் செயினின் டாலரில் ஒரு சின்னப் பையனும், பெண்ணும் முத்தம் கொடுத்துக் கொண்டிருக்க.. அவர்களை உதட்டில் வைத்துக் கடிக்க ஆரம்பித்தாள்.

ஹால் முழுக்க வரவேற்க வந்தவர்கள் சன்னக்குரல்களில் சினிமா, அரசியல், ஸ்போர்ட்ஸ், இலக்கியம், அடுத்த வீட்டு அக்கப்போர் பேசிக் கொண்டிருக்க....

காமிரா சகிதம் ஒரு வழுக்கைத் தலையர் சிகரெட் ஊதிக் கொண்



டிருக்க... ரோஸ் நிற வழவழப் புடவையின் தலைப்பு அந்தப் பெண்ணின் தோளில் இருந்து சும்மா சும்மா சரிய... தொப்பி வைத்த அரை ட்ரவுசர், நீர் துப்பாக்கி வைத்துக் கொண்டு கடக்கிறவர்களை எல்லாம் குறி பார்த்தான். ஒரு ஜீன்ஸ் பாண்ட்டன் நாவல் படித்தான்.

"யுவர் அட்டென்ஷன் ப்ளீஸ்...."

ஐந்து நட்சத்திர சாக்லேட் தடவின குர லுக்கு அனைவரும் அட்டென்ஷன் தர....

"இந்தியன் ஏர்லைன்ஸ் அனவுன்சஸ் தி அரைவல் ஆஃப் ஃப்ளைட் நம்பர் 510 ஃப்ரம் பெங்களூர்."

அவள் எழுந்து கொண்டாள். பிரயாணி கள் வரப் போகிற கதவுக்குச் சமீபமாக நின்று கொண்ட அவள் கண்களில் இப் போது எல். ஓ. வி. ஈ. இருந்தது.

சட்டை கழன்ற பெண்ணின் படம் போட்ட ஆங்கில நாவல் படித்துக் கொண் டிருந்தவன் பரபரப்பின்றி நிதானமாகப் படித்துக் கொண்டேயிருந்தான். விழிகள் மட்டும் அடிக்கடி கதவுப் பக்கம் தாவித் தாவித் திரும்பிக் கொண்டிருந்தது.

"ஹாய் அசோக்" என்று அவனின் சூட் கேசை வாங்கிக் கொண்டு மேல், கீழ் வரிசைப் பற்களை வெளிப்படுத்தின. இவனின் பெயர்—

"பிரேம், எப்படி இருக்கே?" என்று இயல்பாய் கைகோத்து நடந்த அசோக், ஆழமான நீலத்தில் கார்ட்ராய் பாண்ட் அணிந்து, காலர் இல்லாத பனியனுக்கு மேல் அதே நீலத்தில் ஜெர்க்கின் அணிந்திருந்தான்.

தலையை வகிடில்லாமல் தூக்கி வாரியிருந்தான். அடர்த் தியாய் மீசை, சிவப்பு மாறாத உதடுகள். சின்னக் கண்கள். கழுத்தில் மிக மெல்லிய செயி னில் சிறிய ஒற்றை தங்கச் சாவி.

நிலையக் கட்டடத்தின் வாசலை நோக்கி அவர்கள் நடந்தார்கள்.

நாவல் இளைஞன் எழுந் தான். புத்தகத்தை மூடி ஜீன் சின் பின்பாக்கெட்டில் செரு கிக் கொண்டு போதுமான இடைவெளி விட்டுத் தொடர்ந் தான்.

"உங்க வீட்டுக்குத்தானே அசோக்?"

"இல்லை."

"கோபம் இன்னும் தீர லையா?"

"அதிகரிச்சிருக்கு."



''என்ன ஆச்சு அசோக்?''

''எங்கப்பா கல்யாணம் பண்ணிக்கிட்டார்.''

''நிஜமாவா? நீங்க அத்தனை சொல்லியுமா?''

''ஆமாம். கல்யாணம் முந்தா நாள். ரகசியமா ரெஜிஸ்ட்ரார் ஆஃபீஸ்ல. நாளைக்கு சாயங்காலம் பாம்குரோவ்ல ரிசப்ஷன். எனக்கு ரிசப்ஷனுக்கு மட்டும் அழைப்பு.''

''அதுக்குத்தான் வந்தீங்களா?''

''இல்லே.''

''பின்னே?''

''சொல்றேன், டாக்ஸி!'' என்றான்.

''எங்கே தங்கப் போறீங்க?''

''ஹோட்டல்ல. ஏற்கெனவே ரிசர்வ் பண்ணிட்டேன்.''

இருவரும் ஏறிக் கொண்டு கதவைச் சாத்தியதும், ''எக்மோர், ஹோட்டல் இம்பீரியல்'' என்றான். டாக்ஸி டீசல் புகை உதிர்த்துப் புறப்பட்டதும்....

சைடு பாக்கில் புத்தகத்தைப் போட்டு விட்டு மோட்டார் பைக்கை ஸ்டார்ட் செய்தான் அவன். வெளிச்சப் புள்ளிகளை உடம்பெங்கும் வைத்திருந்த ரன்வேயின் அழகை ரசிக்க நேரமில்லாமல் அந்த டாக்சியை ராமன் வழி சீதையாகத் தொடர்ந்தான்.

''நான்தான் மெட்ராஸ் வந்ததும் உன் ஹாஸ்ட்டலுக்கு போன் பண்றேன்னு சொன்னேனே.... அப்புறம் ஏன் ஏர்போர்ட் வந்தே பிரேம்?''

''ஏன் வரக்கூடாதா? எனக்கு அதுவரைக்கும் பொறுமை இல்லே. அசோக் உங்க முகத்திலே கலகலப்பே இல்லே. பதினஞ்சு நாள் பெங்களூர்ல இருந்ததிலே மூடு மாறியிருக்கும்னு நினைச்சேன்.''

''எப்படி மாறும் பிரேமா? ஒருத்தனுக்கு எதிரி இருக்கிறது இயல்பு. ஆனா வீட்டுக்குள்ளேயே இருந்தா?''

''எதிரிங்கிறது ரொம்பப் பெரிய வார்த்தை அசோக். அவர் உங்க அப்பா.''

''இல்லே பிரேமா. உன்னால புரிஞ்சுக்க முடியாது. உறவினால அவர் அப்பா, ஆனா அவர் ஒரு மோசமான மனிதனைக் காட்டிலும் மோசமானவர். ஐ ஹேட் ஹிம் டோட்டலி.''

''உங்களுக்குள்ளே இவ்வளவு பெரிய மிஸ்அண்டர்ஸ்டாண்டிங் எப்படி வந்திச்சு?''

''இது ஒரு நாள்ல, ஒரு சம்பவத்தில வந்த வெறுப்பு இல்லே பிரேமா. வேணாம். இன்னொரு நாள் சொல்றேன்.''

''நாளைக்கு ஆஃபீஸ் லீவ் போட்டுடவா அசோக்?''

''போட்டுட்டு?''

''என்னைப் பார்த்து இப்படி ஒரு கேள்வியா?''

''நாளைக்கு எனக்கு முக்கியமான நாள் பிரேமா. எத்தனை பேருக்குத் தன் அப்பாவோட கல்யாண ரிசப்ஷன்ல கலந்துக்கிற வாய்ப்புக்கிடைக்கும்? நான் அந்தவாய்ப்பை இழக்கலாமா?''

''வேணும் அசோக். நீங்க அதிலே கலந்துக்க வேணும்.''

''ஏன்?''

''ஏதாச்சும் கூடா பேசி கலாட்டா பண்ணிடுவீங்க.''

''கரெக்ட். பண்ணத்தான் போறேன். ஆறு மாசத்துக்கு முன்னால திருச்சிக்கு ஒரு கல்யாணத்திலே கலந்துக்கிறதுக்காக அழைச்சுட்டுப் போன அம்மாவை, கார் ஆக்ஸிடெண்ட்னு பொட்டலமா கட்டி எடுத்துக்கிட்டு வந்தாரே. அது உண்மையிலேயே ஏற்பட்ட விபத்தா இல்லே ஏற்படுத்தப்பட்ட விபத்தான்னு கேட்கப் போறேன்.''

டாக்ஸி ஓட்டிக் கொண்டிருந்த டிரைவர் ஒரு வினாடி திரும்பிப் பார்த்துவிட்டு மறுபடி பாதையைப் பார்த்தான்.

''இப்போ எதுவும் பேச வேணாம் பிரேமா'' என்றான் சன்னமாக. பின் அதே குரலில், ''என்ன இது. கன்னத்திலே புதுசா பரு எல்லாம்?''

''இருபத்தி நாலு மணி நேரம் பத்தலே அசோக்.''

''எதுக்கு?''

''உங்களை நினைக்கிறதுக்கு.''

''இந்தப் பருவுக்கு நான் ஒரு மருந்து சொல்லட்டுமா?''

''என்ன?-இனி யாரசில்லா?''

''இல்லே. நேரா ரூமுக்குப் போயி....''

''போயி.....?''

''கதவைச் சாத்தி...''

''சாத்தி?''

''கல்கியில இதுக்கு மேலே பேசறது தப்பு பிரேமா. இட் இஸ் இம்ப்பீரியல்!''

இறங்கிக் கொண்டார்கள்.

407 ம் நம்பர் அறை ஒதுக்கப்பட்டிருந்தது. ரிசப்ஷனிஸ்ட் நீட்டின காகிதத்தில் 'கதிர்' என்று ஒற்றைச் சொல் ஆங்கிலத்தில் இருந்தது. ''ரெண்டு தடவை போன் பண்ணினார் சார்.''

அறையில் மெத்தை விரிப்பில் நாப்தலின் மணத்தது. சுவரில் வால்களாக் முழுக்க சின்னச் சின்னப் பூக்கள். தரையில் ஒரே நிறத்தில் மார்ப்ளெக்ஸ். சுவிட்ச் தட்ட 'காற்று முழுக்க வயலின் இசை. பக்கவாத்தியமாக காற்று கண்டிஷனரின் முனகல்.

''அப்புறம்? நான் புறப்படட்டுமா அசோக்?''

''முகம் கழுவிட்டு வர்றேன். கீழே புல் வெளிக்குப் போய் எதாச்சும் சாப்பிடலாம். அப்புறம் போகலாம்.''

புல்வெளி முழுக்க சதுர சதுர மேஜைகள். நேர் மேலே மேகமில்லாத வானம். காதில் கிசுகிசுக்கும் தென்றல். அருகே காபரே ஹாலின் கதவு திறக்கப்படும்போதெல்லாம் அதிரும் ட்ரம்ஸ்.

''யார் அசோக் கதிர்?''

''ஃப்ரெண்டு பிரேமா. ஐ லவ் யு.''

''இதென்ன திமர்னு....''

''இப்ப சொல்லணும்னு தோணிச்சி. சொன்னேன்.''

''நடு ராத்திரி தோணினு?''

''நிச்சயமா போன் பண்ணிச் சொல்வேன். நான் மனசுல ஒண்ணு நினைச்சா, உடனே அதை செயல்படுத்தியாகணும். பிரேமா, நீ யாரை நேசிக்கறே?''

''இதென்ன கேள்வி? உங்களைத்தான்.''

''அதில்லே. நீ நேசிக்கிறது அசோக்கையா? இல்லே கோமஸ்வரர் நாகராஜன் மகன் அசோக்கையா?''

''என்ன புதிர் இது? ரெண்டு பேரும் ஒருத்தர்தானே?''

''இவ்வளவு வரைக்கும் ஒண்ணுதான். நாளைக்கே நான் வீதியிலே நிக்கலாம். அப்பவும் நேசிப்பியா?''

''ஏன் இப்படி எல்லாம் பேசறீங்க? உங்களுக்கு ஏன் அந்த நிலைமை வரப் போகுது?''

''எதிர்க்கேள்வி வேணாம். பதில் சொல்லு.''

''நான் விரும்பறது உங்களைத்தான். உங்க பணத்தை இல்லே. இப்படி நீங்க கேக்கறதே என்னை இன்சல்ட் பண்ற மாதிரி இருக்கு அசோக்.''

''கோவிச்சுக்காதே பிரேம். எனக்குத் தெரியும் உன்னை. சும்மா கேட்டேன். வேறே எதுவும் வேணுமா?''

''வேணாம்.''

''அவ்வளவுதான். பில் கொண்டாப்பா.''

அவர்கள் எழ.... ரெண்டு மேஜை தள்ளி கால் மணி நேரமாக ஒரே குளிர் பானத்தைச் சொட்டுச் சொட்டாக உறிஞ்சிக் கொண்டிருந்த பைக்கனும் எழுந்தான்.

அவர்கள் ஹோட்டலின் வாசலுக்கு வந்ததும்...

''அப்போ நாம எப்போ சந்திக்கிறோம்?''

''நாளைக்கு வேணாம். நீ ஆஃபீஸ் போ. நாளன்னிக்கு நானே போன் செய்றேன்.''

''குட்நைட், அசோக்.''

''குட் நைட்.''

அசோக் உள்ளே நடக்க... ரிசப்ஷனில் சிகரெட் புகைத்துக் கொண்டு காத்திருந்த உயரமானவனைக் கண்டு, ''கதிர், எப்ப வந்தே?''

''பத்து நிமிஷமாச்சு. ரூம்பூட்டியிருந்திச்சு. அதான் காத்திருந்தேன். எதுக்கு வரச் சொன்னே?''

''ரூமுக்குப் போய்டலாம். வா. முக்கியமா பேசணும்.''

மாடிப் படிகளில் அவர்கள் ஏற.....

பைக்வாலா ஹோட்டலை விட்டு வெளியேறி ஒரு பொதுத் தொலைபேசியில் சுழற்றி, காசு போட்டு, ''வந்தாச்சு சார், ஹோட்டல் இம்ப்பீரியல். ரூம் நெம்பர் நானூத்தி ஏழு. இங்கே சந்தர்ப்பம் சரியில்லே. ஹோட்டல்—பொது இடம். உடனே கவனத்தை ஈர்க்கும். இது செயலுக்கு லாயக்கான இடமில்லே. வேறே யோசனையோட நாளைக்கு நேர்ல சந்திக்கிறேன்'' என்றான்.

அசோக்கும் பாய் இரண்டு பீர் பாட்டில்களை வைத்துவிட்டுப் போனதும், ''சொல்லு. கதிர். மாட்டிக்காம ஒரு கொலையை எப்படிச் செய்யலாம்?'' என்றான்.

(தொடரும்)

# நிருபர்

பிருந்தா

ஏற்கெனவே பல அலுவலகங்களில் இண்டர்வியூக்களைச் சந்தித்து, தோல்வியையே கண்டு விரக்தியடைந்திருந்தான் சந்துரு. 'நிருபர் தேவை' என ஒரு நாளிதழில் விவரமாக வெளியாகியிருந்த அந்த விளம்பரத்தைப் பார்த்து, பெயருக்குத்தான் 'அப்ளிகேஷன்' போட்டு வைத்தான்.

அப்ளிகேஷன் போட்டதையே மறந்து, பத்து நாட்கள் ஓடிவிட்டன. பதினோராம் நாள் காலையில் சந்துருவின் பெயருக்கு ஒரு தபால். பிரித்துப் பார்த்தான். விண்ணப்பித்திருந்த நிருபர் வேலைக்கான இண்டர்வியூவுக்கு வரும்படி அழைத்திருந்தனர்!

அப்பத்திரிகையின் நிர்வாக ஆசிரியரின் முன்னிலையில் இண்டர்வியூ நடந்தது. ஏதேதோ பத்திரிகை சம்பந்தமான கேள்விகளைக் கேட்டார். இயன்றவரை சமாளித்துப் பதில்களைச் சொன்னான்.

இண்டர்வியூவை முடித்துக் கொண்டு வெளியேசெல்லும்போது, நிர்வாகஆசிரியர் அவனிடம் வந்தார். "தம்பி, உங்களுக்குப் பத்திரிகை விஷயங்களைப் பற்றி அவ்வளவாகத் தெரியவில்லை. இருந்தாலும் எனக்கு ஏனோ உங்க மேலே நல்ல அபிப்ராயம் ஏற்பட்டிருக்கிறது. அதனால் ஒரு ரிப்போர்ட்டர் போஸ்ட் உங்களுக்கு நிச்சயமாக உண்டு!" என்று சந்துருவுக்கு உறுதியளித்து அனுப்பினார்.

இப்பொதெல்லாம் ஊரில் என்ன நடந்தாலும் முதலில் சந்துருவுக்குத்தான் செய்தி தெரிந்தது. உடனே சம்பவம் நடந்த இடத்துக்கு விரைந்து போய், தகவல் சேகரித்து, ஆராய்ச்சி செய்து, சம்பந்தப்பட்டவர்களிடம் பேசி விவரங்களைச் சேகரித்து எழுதி விடுவான். கடந்தமாதக்கடைசியில் இப்படித்தான் கீதாம்பாள் மில்லில் தொழிலாளி ஒருவர் வேலை பார்த்தபோது மெஷினில் சிக்கி இறந்து போனார். அவர் சாவில் மர்மம் இருப்பதாக அந்தத் தொழிலாளியோடு வேலை பார்த்தவர்கள் பேசிக் கொண்டதால் வேறு பத்திரிகையாளர்கள் போகும் முன்பு, விரைந்து போய், அத்தொழிலாளியின் சாவு சம்பந்தமான முக்கிய விஷயங்களைத் துருவித் துருவி விசாரித்து, மிகவும் தெளிவாக உண்மையை விளக்கிக் கட்டுரை எழுதியிருந்தான். மில்லின் முதலாளிக்கும் அந்தத் தொழிலாளிக்குமிடையில் ஏற்கெனவே இருந்து வந்த பகைமையைக் கட்டுரையில் ஆதாரபூர்வமாகத் தெளிவு படுத்தியிருந்ததால் போலீசாருக்குக்கூட அந்த வழக்கில் துப்புத் துலக்க எளிதாக இருந்தது என்று பேசிக் கொண்டார்கள்.

சந்துருவின் 'இன்வெஸ்டிகேடிவ்' கட்டுரைகளாலேயே அவன் பணிபுரியும் பத்திரிகைக்கு நல்ல பெயர் கிடைத்திருந்தது. ஊரிலுள்ள மூலை முடுக்குகளில் நடக்கும் விஷயங்களையெல்லாம் கவனமாக அறிந்து கொண்டு, முக்கியமான பிரச்னைகள் ஏதேனும் இருந்தால் நன்றாக விசாரித்து, கட்டுரைகளை அமைப்பதில் சந்துருவுக்கு இருக்கும் திறமையைக் கண்டு, பிற பத்திரிகைகளை அவனை வளைத்துப் போட்டுக் கொள்ளச் சந்தர்ப்பம் தேடிக் கொண்டிருந்தன.

அன்று காலை வீட்டிலிருந்து புறப்பட்டுப் போனவனை அவனது உறவினர்கள் தேடிக் கொண்டிருந்தார்கள். பத்திரிகை அலுவலகத்தில் விசாரித்ததில், எங்கோ முக்கியமான தகவல் சேகரிக்கிறேன் என்று அவன் போயிருப்பதாகச் சொன்னார்கள். சாப்பாட்டு நேரத்திலும் அவனைக் காணவில்லை. சந்துருவின் உறவினர்கள் எதிர்பார்ப்போடு அவனைத் தேடிக் கொண்டிருந்தார்கள்.

"பையன் வந்தாச்சாப்பா....?" சந்துருவின் வீட்டில் அனுதாபத்தோடு பெரியவர் ஒருவர் கேட்டுக் கொண்டிருந்தார்.

"இதுவரைக்கும் வரலீங்களே..." பதை பதைப்புடன் யாரோ பதில் சொன்னார்கள்.

"ம்! ஊரில் என்ன நடந்தாலும் முதல் ஆளாய் அவனுக்கு விஷயம் தெரிஞ்சிடும். ஆனா அவன் சொந்த அப்பா திடீர்னு இறந்து போய்விட்டது அவனுக்கு இவ்வளவு நேரமாகியும் தெரியல்ல பார்த்தீங்களா..." பெரியவர் வருத்தத்துடன் சொல்லிக்கொண்டிருந்தார்!



# கள் கடத்த பம்பாய் ஆனது



* ஜாக்கெட்டிலிருந்து பிஸ்கெட்டுகள் வெளியே எடுத்துப் போடப்பட்டுள்ளன.

PROBE

இந்தியாவில் பல நகரங்கள் இருக்க பம்பாயில் மட்டும் கள்ளக் கடத்தல் மிகுதியாக இருக்கக் காரணம் என்ன?

பம்பாய், நாலு பக்கமும் கடலால் சூழப் பெற்ற, கடத்தலுக்கு வசதியான ஒரு தீவு நகரம். வீட்டுப் படிக் கட்டுகளில் இறங்குவதுபோலக் கரையின் நுனி வரை படகுகள் வந்து போகிற கடலின் ஆழம்!

பல பகுதிகளில் மீன்பிடி தொழில் நடந்து வருவதால் கரையோரப் பரபரப்பில் மீன் பிடிப்பவர்கள் போலக் கலந்துவிடக்கூடிய அல்லது அவர்களோடு சரக்கைப் பரிமாற்றம் செய்து கொள்ளக் கூடிய வாய்ப்பு!

இவையெல்லாவற்றையும்விட வியாபாரப் பரபரப்பு. சரக்கு வந்தவுடனே பைசல் செய்யக் கூடிய துரிதம். உடனே நாடெங்கும் சப்ளை செய்துவிடக் கூடிய போக்குவரத்து வசதிகள்.

இவை அனைத்தையும்விட முக்கியமான அம்சம், பம்பாயின் மேற்குப் பகுதியில் அரபு நாடுகள் இருக்கின்றன. பெரும்பாலான கடத்தல்கள் இந்த நாடுகளிலிருந்துதான் நடைபெறுகின்றன.



* சூட்கேஸ் கவரில் எலக்ட்ரானிக் பொருள்கள்

அபாயம் என்று தெரிந்தும், சட்டத்துக்குப் புறம்பானது என்று அறிந்தும் பணத்தை முதலீடு செய்து நீ, நான் என்று போட்டி போட்டுக் கொண்டு கடத்தல் தொழிலில் நிறையப் பேர் ஈடுபட்டிருக்கிறார்கள்.

**கள்ளக் கடத்தல்: ஏற்றுமதி இறக்குமதி:**

கள்ளக் கடத்தலில் இறக்குமதியும் உண்டு: ஏற்றுமதியும் உண்டு. வெளிநாடுகளில் இந்தியப் பொருள்களில் எதற்கு கிராக்கி உண்டோ, அவற்றை ஏற்றுமதி செய்கின்றனர்.

கடந்த சில வருஷங்

* இந்த அயல்நாட் நாறு தங்க பிஸ் டது.



# ாக்
# ழுக்கு
# மையம்
# ஏன்?

களாகவே கஞ்சா, அபினி போன்ற போதைப்பொருள் களின் கள்ளக் கடத்தல் அதிகமாக இருக்கிறது. இங்கே ஒரு ரூபாய் மதிப்புள்ள 'பாப்பி' விதை களுக்கு வெளிநாட்டில் ஐம்பது ரூபாய், நூறு ரூபாய் என வியாபார மதிப்பிருப்பதே காரணம். ராஜஸ்தான் மத்தியப் பிரதேசம் போன்ற மாநிலங்களில் மருந்து தயாரிப்புக்காகக் கஞ்சா தயாரிக்க உதவும் 'பாப்பி' செடிகள் அரசாங்க அனுமதியுடனேயே பயிரிடப்படு கின்றன. இதுதான் சாக்கென்று கள்ளத்தனமாகப் பயிரிடுவோரும் உண்டு. இவற்றை வியாபாரம் செய்யும் கும்பலுக்கு நல்ல லாபம் உண்டு— சிக்கிக் கொள்ளாதிருந்தால்.

இது தவிர, பாம்புத் தோல், வெள்ளிக் கட்டிகள், கிராம்பு, ஏலம் போன்ற வாசனைத் திரவியங்களுக்கு வெளிநாட்டில் கிராக்கி அதிகம் என்பதால் இந்தியா விலிருந்து கடத்தப்படுகின்றன.

**கள்ளக் கடத்தலுக்கு மூலதனம்:**

கடத்தல் வியாபாரத்தில் தனி மனிதர்களாக இறங்கு வோர் குறைவு. 'சிண்டி கேட்' என்ற அமைப்பில் பத்து இருபது பேர் ஒன்று சேர்ந்து மூலதனம் போடு கின்றனர். ஏனெனில் கடத்தல் வியாபாரத்தில் சிக்கிக் கொண்டால் நஷ் டம் கோடிக் கணக்கான ரூபாயில் இருக்கும். அத னால் பெரிய நஷ்டத்தைத் தவிர்க்க இப்படி குழுக்க ளாக அமைகிறார்கள். இந்த முதலாளிகள் யார் என்பது வெளியே தெரி யாது! கடத்தலில் பிடி பட்டாலும் இந்தத் தொழிலை நடத்தும் ஏஜெண்டுகள் முதலாளி களின் பெயர்களைச் சொல்வதில்லை. அதனால் மூலவர் சிக்கிக் கொள்வ தில்லை. உற்சவரே அகப் பட்டுக் கொள்வார்.

ணிந்துள்ள ஜாக்கெட்டில்
ருப்பது கண்டுபிடிக்கப்பட்





* ஸாக்ஸிலும், பூட்ஸிலும்கூட கள்ளக் கடத்தல்.

இந்தியாவிலிருந்து கடத்தப்படும் பொருள்களின் வியாபாரத்தால் இவர் களுக்கு வெளிநாட்டில் மூலதனம் கிடைக் கிறது. இதிலே கிடைக்கிற வரவுத் தொகை யிலிருந்தே மாற்றுப் பொருள்களை வாங்கி, மீண்டும் இந்தியாவுக்குக் கடத்தி வருகிறார் கள். இதிலே இரட்டை லாபம்!

செய்வது கள்ளக் கடத்தல் என்றாலும் செய்யும் தொழிலில் இவர்களுக்கும் நாண யம் இருக்கிறது.

பெரிய கம்பெனிகள் சில, தங்கள் தொழிற் சாலைகளுக்குத் தேவையான பெரிய பெரிய மெஷின்களைக்கூட இப்படி கடத்தல் மூலம் பெறுவது உண்டாம்!

கடிகாரக் கடத்தலுக்கு எப்போதும் மவுசு அதிகம். விஷேதம் என்னவென்றால் நிறைய லாபம் பெறவேண்டி, ரஷ்யத் தயாரிப்புக் கைக்கடிகாரங்களை வரவழைப்பார்கள். விலை மிகக் குறைவு. இவற்றைப் புகழ் பெற்ற சீக்கோ, சிடிஸன் போன்ற கடிகார டூப்ளி கேட் உறை, டயல்களை இந்தியாவில் செய்யச் சொல்லி, பொருத்தி, விற்றுவிடு வார்கள்.

**என்றும் தங்கம்**

அன்றும் இன்றும் என்றும் கள்ளக்

கடத்தலில் பிரதானம் வகிப்பது தங்கமே! இதன் காரணம் விலைவாசியில் உள்ள பெருத்த வேறுபாடுகள்! சுத்தத் தங்கத்தின் சர்வதேச மார்க்கெட் விலை கிராமுக்கு ரூ 165/—. அதே தங்கம் அரபு நாடுகளில் 122 ரூபாய்க்குக் கிடைக்கிறது. அதுவே இந்தியாவில் 200 ரூபாய்க்கு மேலேயே விற்கப்படுகிறது. சுத்தத் தங்கம் 99.99 சதவீதம் சுத்தம்— பத்து தோலா எடையில் 'பிஸ்கட்' என்ற பெயரில் தயாரிக்கப்படுகிறது. (111. 66 கிராம்.)

தங்கக் கடத்தலில் தனி நபர்கள் ஈடுபாடு அதிகம். இவர்கள் சாதாரணப் பயணிகளைப் போல விமானத்திலேயே வந்துவிடுவார்கள். தாங்கள் கொண்டு வரும் பெட்டி, லக்கேஜ் போன்றவற்றில் தங்கத்தை மறைத்து வைத்திருப்பார்கள். பலர் தங்களது உடைகளில், பூட்சுகளில் மறைவிடங்கள் தயாரித்து வைத்து, சந்தேகம் வராதபடி நடந்து கொள்வார்கள்.

ஒருசிலர் தங்கள் உடலிலேயே ஆசனக் குழாய் மூலம் வயிற்றுக்குள் செலுத்திக் கொண்டு வருவதுண்டு. இப்படி ஒரே நபர் ஒரே நடையில் பத்து பிஸ்கட் அளவு கொண்டு வந்து பிடிபட்டதுண்டு!

ஒரு பெண்மணி தன்னோடு ஒரு குழந்தையை அணைத்தபடி இறங்கினாள். சந்தேகப்பட்டு ஆராய்ந்தால் குழந்தை இறந்து போயிருந்தது. குழந்தையின் உடலுக்குள் தங்கம்! இதுபோல் 'சினிமாட்டிக்' கடத்தல்கள் நமது கற்பனைக்கும் அப்பாற்பட்டவை.

### ஜாக்கெட்

தனி நபர் தங்கக் கடத்தலில் பிரசித்தி பெற்றது 'ஜாக்கெட்'. உறுதியான துணியால் தைக்கப்பட்ட இந்த ஜாக்கெட்டை பனியன் போல உடுத்திக் கொள்ளலாம். இவற்றில் விசேஷ அறைகள் தைக்கப்பட்டு அவற்றில் 'தங்க பிஸ்கட்'களைப் பொருத்திக் கொண்டு வருவார்கள்! ஒரு ஜாக்கெட்டில் நூறு பிஸ்கட்கள் வைக்கப்படும். இதைச் சுமந்து வருவது என்பது இரும்புக் கவசத்தை உடுத்தி வருவது போன்றது. இந்தத் தங்கக் கட்டிகள் உடலில் அழுத்தி, கட்டம் கட்டமாக அடையாளத்தை ஏற்படுத்திவிடும். அப்படிப் பட்ட அடையாளத்தை வைத்துக்கூட சில கடத்தல் பேர்வழிகளைக் கைது செய்திருக்கின்றனர்.

### செயல்படும் விதம்:

பெரிய அளவு கடத்தல்கள் தனிப்பட்ட மோட்டார் படகுகள் மூலம் நடக்கின்றன. கப்பலில் ஏற்றப்பட்ட சரக்குகள் நடுக் கடலில் தனி மோட்டார் படகுகளில் மாற்றப்படுகின்றன. டெலக்ஸ், டெலிபோன் மூலம் சங்கேதச் சொற்களாலேயே விவரங்கள் அனுப்பப்படுகின்றன. அப்படி அனுப்பப்படுகிற விவரங்கள்கூட ஒரே சமயத்தில் இருக்காது. நாலைந்து பகுதியாகப் பிரித்து, தொடர் கதையாக அனுப்புகின்றனர். கண்டு பிடிக்கப்பட்டாலும் முழு விவரமும் அம்பலமாகாமல் இருக்க இந்த ஏற்பாடு.

நடுக் கடலிலிருந்து படகு ஓரளவு கடற்கரையை நெருங்கி வந்ததும் கரையிலிருந்து 'வாக்கி டாக்கி' சாதனங்களுடன் உள்ளூர் வியாபாரியின் ஏஜெண்டு மீன்பிடி படகுகளில் செல்கிறார். இவர்கள் தொடர்பு கொள்வதற்காக ரகசியப் பெயர்கள் உண்டு. கடலில் உள்ள படகில் உள்ளவர் 'லைலா' என்று ஒலிபரப்பினால் கரையிலிருந்து செல்பவர்கள் 'மஜ்னு' என்று சொல்வார்கள். இப்படி ஒருவரை ஒருவர் அடையாளம் கண்டு கொண்டு நெருங்குகின்றனர்.

இரண்டு கோஷ்டிகள் நெருங்கினாலும் சரக்குகளை ஒப்படைத்துவிடுவதில்லை. மீண்டும் ஓர் 'உறுதி'ச் சடங்கு. அவர்கள் ஒரு பொருள் தந்தால் இவர்கள் ஒரு பொருள் தரவேண்டும். அதாவது ரூபாய் நோட்டை இஷ்டத்திற்கு இரண்டாகக் கிழித்து ஒரு பகுதி முன்னவரிடமும், அடுத்த பகுதி சென்றவரிடமும் இருக்கும். இரண்டும் சேர்ந்து சரிப்பட்டு வந்தால்தான் 'ஓகே.'

கரைக்கு வந்து சேர்ந்ததும் வாகனங்களுக்குச் சரக்கு இடம் மாறும். இந்த வாகனங்கள் பெரும்பாலும் பினாமி உரிமையாளர் பெயரில் இருக்கும். நம்பர் பிளேட்டுகள் மாற்றப்பட்டிருக்கும். 'ஆம்புலன்ஸ்', 'நகராட்சி வேன்' போன்ற பெயர்கள் எழுதப்பட்டும் இருக்கலாம். வண்டியின் டிரைவர் போகும் வழியில் மாறிக் கொண்டே இருப்பார். என்ன சரக்கு எங்கே போகிறது என்பதொன்றும் அவருக்குத் தெரியாது! குறிப்பிட்ட இடத்திலிருந்து குறிப்பிட்ட இடம், குறிப்பிட்ட வண்டி என்று மட்டும்தான் சொல்லியனுப்புவார்கள். அதனால் மாட்டிக் கொண்டால் பொருள்கள் போகுமே தவிர ரகசியங்கள் வெளியே போகாது.

### தங்க வியாபாரம்:

வெற்றிகரமாகக் கடத்தப்பட்டு வரும் தங்கம் மார்க்கெட்டுக்குப் போவது எப்படி? இவற்றை வாங்குவதற்கென்றே பல வியாபாரிகள் உள்ளனர். டெலிபோனிலேயே வியாபாரம் பைசலாகிவிடும். அவர்கள் ஒரு காரில் பணத்தை வைத்து குறிப்பிட்ட இடத்துக்கு அனுப்புவார்கள். அங்கே சரக்குடன் கார் இருக்கும். இந்த டிரைவர் அந்த வண்டியையும் அந்த டிரைவர் இந்த வண்டியையும் எடுத்துக் கொண்டு திரும்ப வேண்டும்.

இப்படி வாங்கப்பட்ட தங்கத்தை மெஷினில் செலுத்தி தட்டையாக்கி, பிறகு சிறு துண்டுகளாக்கியும் விடுவார்கள். மேலும் கம்பிகளாக்கி பதினொரு அங்குல நீளத்துக்கு வெட்டி அதிலேயே ஒரு டிசைனும் பதித்துவிடுவார்கள். இதனை ஊதி ஊதி வளையல்களாக்கியும் விடுவர். இப்போது சிக்கினாலும், 'நகை' என்ற போர்வையில் போய்விடும். இந்த உருவத்தில் பொருள் அகப்பட்டுக் கொண்டால் கடத்தல் சட்டத்தில் வராது. தங்கக் கட்டுப்பாடு சட்டத்தில் தான் வழக்கு பதிவு செய்யப்படும்.

செல்வாக்குள்ளவர்கள், இவற்றை நகை

யாய் உருவான தங்கமாகக் காட்டி, 'தங்க சாலே'யிலேயே முத்திரை பெற்று மீண்டும் கட்டிகளாக விற்பனை செய்வதுகூட உண்டாம். இப்படி கள்ளத் தங்கம் நல்ல தங்கமாகிவிடுகிறது!

நவீன 'மெட்டல் டிடெக்டர்'கள் தங்கம் இருந்தால் கண்டு பிடித்துவிடும். அதனை ஏமாற்றுவதற்காக தங்கக் கட்டிகளின் மேல் 'கார்பன்' பேப்பரைச் சுற்றிக் கொண்டு வருவார்கள். அதனால் இப்போது சுங்க இலாகாவினர் 'எக்ஸ்ரே' கருவியையே பயன்படுத்துகின்றனர்.

**கள்ளக் கடத்தல் கோஷ்டி பிடிபடுவது எப்படி?**

பம்பாயில் மட்டும் கள்ளக் கடத்தல் வியாபாரம் மாதத்துக்கு மூன்று கோடி ரூபாய்க்கு மேலிருக்கும்என்றுகூறப்படுகிறது. இவற்றில் ஒரு பகுதியைத்தான் சுங்க இலாகாவால் கண்டு பிடிக்க முடிகிறது.

கள்ளக் கடத்தல் கோஷ்டியைப் பற்றித் தகவல் கொடுப்பவர்களுக்கு கவர்ச்சிகரமான தொகை கொடுக்கப்படுகிறது. அதனால அவர்கள் துப்பு கொடுத்துவிடுகிறார்கள். அதை வைத்துக் கொண்டு இவர்கள் தொடர்ந்து பிடிக்கிறார்கள்.

டெலிபோன், டெலக்ஸ், தபால் இலாகா போன்றவற்றின் உதவியுடன் தகவல்கள் கைப்பற்றப்படுகின்றன. இப்படி நிகழ்வதால் கள்ளக் கடத்தல்காரர்கள் நேருக்கு நேர் தகவல் பரிமாறிக் கொள்ளாமல் சிங்கப்பூருக்குத்தெரிவித்து அங்கிருந்துடோக்கியோ பிறகு பம்பாய் என்று சுற்றி வளைத்து தகவல் தெரிவிக்கிறார்கள் — அதுவும் சங்கேதச் சொற்களில். சுங்க இலாகா அதையும் மீறி இவர்களைக் கண்டு பிடிப்பது சிறப்பான அம்சம்.

— விசிட்டர் அனந்த்

புகைப்படங்கள்: டி.என்.என். பிரசாத்

# "சென்னை மாநகராட்சித் தேர்தலை நடத்தாததேன்?"



"தமிழர்களுக்கு அரசியல் விழிப்புணர்வு அதிகம். அப்படி இருக்கையில் தமிழகத்தின் தலைநகரில் மாநகராட்சித் தேர்தலை நடத்தாமல் ஒத்திப் போட்டுக் கொண்டு வருகிறதே தமிழக அரசு! சென்னை நகருக்கு இத்தனை வருடங்களாக மேயர் இல்லாதது ஜனநாயகத்துக்கே ஒரு பெரிய களங்கம்தான். இதற்காக அகில இந்திய மேயர்கள் அமைப்பின்கீழ் நானே தமிழக அரசுக்கு எதிராகப்போராட இருக்கிறேன்'' என்கிறார் பம்பாய் நகர மேயர் தத்தா நளவாடே.

தமிழ்நாட்டில் வசிக்கும் தமிழர்கள் பேரில் இவ்வளவு அக்கறை இவருக்கு ஏன் ஏற்பட வேண்டும்?

"சென்ற தேர்தலில் தமிழர்கள் ஒன்று சேர்ந்து எங்கள் சிவசேனாவை ஆதரித்து நாங்கள் வெற்றி பெறப் பெரிதும் உதவினார்கள். பத்திரிகைகளில் வரும் சில 'செய்திகளுக்கும்' எங்களுக்கும் சம்பந்தமில்லை. உண்மையில் நாங்கள் தமிழர்களுக்கு நிறைய உதவிகள் செய்கிறோம். இன்று தமிழர்கள் பம்பாயின் ஓர் அங்கமாகி விட்டார்கள். இன்று பம்பாயில் சில குடியிருப்புப் பகுதிகளுக்கு 'காமராஜ் நகர்' 'அண்ணா நகர்' என்றெல்லாம் பெயர்கள் உள்ளன! காமராஜ் நகர் என் தொகுதியில் தான் இருக்கிறது. அப்பகுதி தமிழர்களெல்லாம் எங்களுக்குத்தான் ஓட்டுப் போட்டார்கள். சொல்லப் போனால், தமிழர்கள் தமிழர்களை விட எங்களைத் தான் அதிகம் நேசிக்கிறார்கள். நாங்களும் அவர்களை நல்ல நண்பர்களாகக் கருதி நேசித்து வருகிறோம். குடிசை மாற்றுத் திட்டத்தின் கீழ் குடிசைவாழ் தமிழர்களுக்கு வசதிகள் செய்து கொடுக்க முடிவு செய்துள்ளோம்'' என்று தமது 'மினி' பேட்டியை முடித்துக் கொண்டார் நளவாடே.

# உண்மையிலேயே பாதுகாப்பை விரும்புவோருக்கு!

## ஜெயசக்தி பைனான்சியர்ஸ்
(சென்னை)

A LEADING HIRE PURCHASE FINANCIERS

குறைந்த பட்ச டெபாசிட் ரூ. 5000/- ஏற்றுக் கொள்ளப்படும்.
ரூ.10,000/-க்கு மேல் டெபாசிட் செய்யும் ஒவ்வொரு டெபாசிட்தாரர்களுக்கும் ஊக்க போனஸாக 1% கூடுதல் வட்டி வழங்கப்படும்.

கவர்ச்சிகரமான வட்டி விகிதங்களில் பிக்சட் டெபாசிட்டுகள் ஏற்று கொள்ளப்படுகின்றன.

| | |
|---|---|
| 1-வருடம் | 18% |
| 2-வருடங்கள் | 19% |
| 3-வருடங்கள் | 20% |
| 5-வருடங்கள் | 22% |

**உங்கள் டெபாசிட்டுகளை அனுப்பும் முகவரி**

| | |
|---|---|
| சென்னை | 39, நடேசன் தெரு (2வது மாடி) சிவா-விஷ்ணு கோயில் அருகில் உஸ்மான் ரோடு, தி.நகர், சென்னை-600 017. போன்: 442218/447186 |
| பெங்களூர் | 24/1-A, மார்கோஸா ரோடு (10வது கிராஸ்) மல்லேஸ்வரம், பெங்களூர்-560 003. போன்: 366971 |
| திருச்சி : | 22, மதுரை ரோடு (முதல் மாடி) ராஜா தியேட்டர் அருகில் திருச்சிராப்பள்ளி-620 008. போன்: 29772/31376 |
| பாண்டிச்சேரி : | 11, நேரு தெரு (கனரா வங்கி எதிரில்) 2வது மாடி, பாண்டிச்சேரி-605 001. போன்: 6493 |
| தஞ்சாவூர் : | எண்: 2 & 3 முதல் மாடி, தி.எ.கனல் ரோடு, தஞ்சாவூர்-613 001. போன்: 1626 |
| திருவண்ணாமலை : | 14/A, ஆனைக்கட்டி தெரு, திருவண்ணாமலை-606 601. போன்: 2483 |
| பட்டுக்கோட்டை : | 121, தலையாரி தெரு, (முதல் மாடி) பட்டுக்கோட்டை-614 601. போன்: 453 |
| கோயமுத்தூர் : | 666, ராஜா தெரு (முதல் மாடி) கோயமுத்தூர்-641 001. போன்: 34369 |
| மதுரை : | 41, வடக்கு வெளி வீதி (முதல் மாடி) மாடர்ன் லாட்ஜ் ஸ்டாப்பிங், மதுரை-625 001 |

JAY ADTS/JF-101/86 Tam.,

இருவரும் உள்ளே நுழைந்தபோது கல்லூரியில் ஒருவரும் தென்படவில்லை. அவன் குழந்தையை அவளிடமிருந்து வாங்கிக் கொண்டான். மாறாக, நவநீ அவனிடமிருந்து ஒயர் கூடையை வாங்கிக் கொண்டாள். அது அவளே போட்டது. அவளுக்குப்பிடித்தமான ஊதா நிற ஒயர் போட்டுப் பின்னியிருந்தாள். கூடைக்குள்ளிருந்த புளி சாதம் கனத்தது.

''எங்க சாப்பிடறது?'' என்றாள்.

''எப்பவும் தீனிதானா? சாப்டா போவுது'' என்றான்.

அவள் அதற்குமேல் பேசவில்லை. பச்சையப்பன் கல்லூரிக்குள் இப்போதுதான் முதன்முதலாக நுழைகிறாள். அவளது காலனியைச் சேர்ந்த ராஜராஜன் என்கிற பையன் இங்கேதான் படித்தான். இந்தப் புல் படுக்கையில் எங்கெல்லாம் உட்கார்ந்து அரட்டை அடித்தானோ...?

அவளைப் பொறுத்தவரை இது மூன்றாவதாக எழுதப் போகும் பி. எஸ். ஆர். பி. தேர்வு. முதலில் லயோலாவில் எழுதினாள். பிறகு எழும்பூரில் ஒரு பள்ளிக்கூடத்தில் எழுதினாள். அதன் பேர் கூட மறந்து போய் விட்டது. தேர்வுக்காக அவன் புத்தகம் வாங்கிக்கொடுத்திருக்கிறான். இப்போதுகூட அதே புத்தகத்தைத்தான் படிக்கிறாள். ஆனால் யார் கேட்டாலும் தருவதில்லை. அதில் பலப் பல இடங்களில் வார்த்தைக்கு அடிக்கோடிட்டுத் தமிழில் அர்த்தம் எழுதியிருக்கிறாள். அதனால் கூச்சப்பட்டுத் தருவதில்லை. அவன் ஒருமுறை யதேச்சையாகப் பார்த்து விட்டு என்ன இதெல்லாம் என்று கடிந்து கொண்டான்.

எங்கு நோக்கினும் பச்சை. பச்சையப்பன் சிலை, அண்ணாசிலை, காந்தி சிலை, செடி, கொடி, மரம் எல்லாம் பச்சை நிறம்.

''அங்க உட்காருவோம். எஸ்ஸேயை ஒழுங்கா ஒரு தடவை படிச்சுக்க. என்ன! இந்திரா காந்தி பத்தி சத்தியமா ஒரு கேள்வி வருது. அப்புறமா வந்து பாதி பேராவுல மறந்து போச்சுன்னு சொன்னியானா எனக்குக் கோபம் வரும்.''

''அப்படி நான் எழுதாம வந்து சொன்னதுண்டா?''

''இல்ல... ஒரு பேச்சுக்குத்தான். உக்காரு'' என்று ஆணையிட்டுக் குழந்தையை எறும்பு இல்லாத இடமாகப் பார்த்துப் படுக்க வைத்தான். அவள் கூடையிலிருந்து புத்தகத்தை எடுத்துக் கொண்டாள். ஓர் இளைஞன் ஒரு பெண்ணோடு அதிகமாகச் சிரித்துக் கொண்டும் கொஞ்சமாகத் தொட்டுக் கொண்டும் நடந்து கொண்டிருந்தான். யாருமற்ற தனிமையிலும் அந்த இளைஞனது கூச்சம் அவளுக்குப் பிடித்திருந்தது.

''என்ன சிரிப்பு...? படிக்காம?''

''ஒண்ணுமில்ல...'' அவள் ஆழ்ந்து படிப்பது போல் பாவனை செய்தாள்.

அவன் இந்திராகாந்தியைப் பற்றி ஒரு எஸ்ஸே தயார் செய்து கொடுத்திருந்தான். புத்தகத்தின் கடைசி பக்கத்தை விரித்து, மடித்து வைத்திருந்த அந்தக் காகிதத்தை எடுத்துக் கொண்டு படிக்கலானாள்.

அவன் அதை வாங்கிக் கொண்டு, "இப்போ ஒப்பி பார்ப்போம்" என்றான்.

அவள் மிரண்டுபோய், ''அன்னிக்கே சொல்லிட்டேனே!'' என்றாள்.



''இப்போ சொல்லு.''

தயக்கத்துடன் ஆரம்பித்தான்.

**"A great woman has been assassinated. She had a radiant mind....."**

தடதடவென முதல் பேரா வந்து விழுந்தது. இரண்டாவது பேராவின் ஆரம்பம் தெரிந்தால் போதும். அதுவும் இதுபோல மடமடவென்று தானே வந்துவிடும்.

''ம்... சொல்லு...''

''மறந்து போச்சு.''

காகிதத்தை அவள் முகத்தில் வீசியெறிந்தான். ''அன்னிக்கி ஒப்பிச்சியே... இன்னிக்கு என்ன கேடு?''

அவள் அழுதாள்.



நிறைய பேர் அங்கங்கே கூட்டம் கூட்டமாய் சேரத் துவங்கிவிட்டார்கள். அவன் அவளிடம் நெருங்கி ''பணத்தைச் செலவழிச்சு இவ்வளவு தூரம் வந்து பரீட்சை எழுதறேம். அத நல்லா பண்ணனும் இல்லையா! சொல்லு!'' என்றான்.

அவள் மௌனம் சாதித்தாள்.

குழந்தைநிர்ச்சலனமாய்த்தூங்கிக்கொண்டிருந்தது. பஸ்ஸில் வரும்போதும் விழித்துக் கொள்ளவில்லை. அப்படியொரு தூக்கம். காலையில் எழுந்து குளித்து, புடைவை கட்டும்வரை குழந்தையைத் தூக்கி வருவதாக உத்தேசம் இல்லை. மாமியார்தான் கொண்டு போ என்று சொன்னார்கள். குழந்தை அழ ஆரம்பித்தால் நவநீ தவிர யாரும் சாதாரணமாக அதன் அழுகையை நிறுத்தி விட முடியாது.

விடியற்காலையில் நடந்து வந்தது இன்றைய பொழுது முழுவதுக்கும் போதுமானது. மனசை லேசாக வைத்திருக்கும் தன்மை அதற்குண்டு. அவள் இனம் புரியாத மகிழ்ச்சியில் திளைத்த நாட்களில் விடியற்காலையில் வெளியே போய் வந்திருப்பாள். இன்றைக்கும் அந்த விடியற்காலை நடைதான் அவள் மனச்சோர்வுக்கு மருந்திட்டது.

''குழந்தைக்குப் பால் போதாது. நான் போய் வாங்கியாரேன்'' — அவன் கூடையை அருகில் இழுத்து கிழிந்த ஜாக்கெட் துணியில் சுற்றி வைத்திருந்த பாட்டிலை எடுத்துக் கொண்டு கிளம்பினான். போகும்போது நின்று ''படி'' என்று சொல்லிவிட்டுப் போனான்.

இந்த இடைவேளை நவநீக்கு வேண்டும் போல இருந்தது. வரும் போகும் ஜனங்களை வேடிக்கை பார்த்துக் கொண்டிருந்தாள். அவளையொத்த பெண்கள் உடுத்துகின்ற ஆடைகளைக் காணும் போதெல்லாம் அவளுக்குவியப்புதான். என்னமாய் உடுத்துகிறார்கள்! புன்னை மரத்தின் கீழே நிற்பவள் கட்டியிருக்கும் அதே சேலை இவளிடமும் இருக்கிறது. என்ன லாபம்? இத்தனை லாவண்யமாக உடுத்தத் தெரியவில்லையே... என்ன நளினம்! என்ன நயம்! எத்தனை ரசிப்புடன் புடைவை கட்டுகிறார்கள்! மலிவான சேலையைக் கூட பெரிதுபடுத்திக் காட்டும்படி உடுத்துகிற கலை இந்தப் பட்டிணத்துப் பெண்களுக்கு எப்படி கைவருகிறதோ! எல்லாரையும் பார்த்து வியந்து போனாள். தான் மட்டும் அந்நியப்பட்டுப் போனதுபோல் இருந்தது.

அவன் பாலோடு திரும்பி வந்தபோது நவநீயிடம் ஒரு பெண் சிரித்துப் பேச நவநீயும் உட்கார்ந்து கொண்டு பதிலுக்குச் சிரித்துப் பேச — அதைக் கண்டு கொள்ளாமல் புட்டியைக் கீழே வைத்துவிட்டு உட்கார்ந்தான். நவநீ அந்தப் பெண்ணிடம் 'ஒண்ணும் சொல்ல மாட்டாரு' என்றாள். அந்தப் பெண் மௌனமாக அசட்டுச் சிரிப்புடன் ஏதோ சைகைகள் செய்துவிட்டு நகர்ந்தாள்.

அவன் கொஞ்ச நேரம் பேசாமல் இருந்தான். நவநீ எங்கோ பார்த்துக் கொண்டிருந்தாள். அவள் அவனைப் பார்த்துத் திரும்பிய போது அவன் பேச வாயெடுத்தான். வாசல் திறந்து தேர்வு அறைக்குள் எல்லோரும் நுழையவே குழந்தையைக் கையில் எடுத்துக் கொண்டு எழுந்தான். குழந்தை விழித்துக் கொண்டது. அம்மாவைப் பார்த்து கைநீட்டியபடி சிரித்தது. அவள் வாங்கிக் கொண்டாள். தூக்கம் கலைந்திராத விழிகளைத் துடைத்துக் கொண்டே நடந்தாள். அவன், அவள் எங்கு உட்கார வேண்டும் என்பதைப் பார்த்துக் கொண்டு வந்து, 'வா' என்றான்.

படிக்கட்டுகள் சரிந்து வந்த விசாலமான அறையில் மேல் படியில் ஏறி தனது இருக்கையில் உட்கார்ந்தாள். மூச்சு வாங்கியது. குழந்தை சாய்வு பெஞ்சின் கைப்பிடியை பிடித்துக் கொண்டு எதையோ முணுமுணுத்து இன்னமும் மேலே ஏற முடியுமா என்று பார்த்தது. அவள் அதை இழுத்து அணைத்துக் கொண்டாள்.

''சரி, குழந்தையைக் குடு. நான் போறேன்; கவனமா எழுது. என்ன....?''

அவன் குழந்தையோடு திரும்பி இறங்கும் முன்பாக அவள் அருகிலிருந்த ஜன்னலைத் திறந்தான். அவள் முகம் வெளிச்சம் கண்டது.

தேர்வு தொடங்க நேரமானது. அவ்வப்போது அவனும் குழந்தையும் ஜன்னலில் தெரிந்தார்கள். வந்து வந்து சிரித்தார்கள். அவளும் உடன் சிரித்தாள். குழந்தைக்கு ஏதோ தின்பண்டம் வாங்கிக் கொடுத்திருந்தான்.

**தே**ர்வு தொடங்கியதும் அவள் மும்முரமாக அதில் மூழ்கிவிட்டாள். அவளைச் சுற்றிலும் என்ன நடக்கிறது, குழந்தையும் அவனும் ஜன்னலில் எட்டிப் பார்க்கிறார்களா இல்லையா என்று எதையும் கவனிக்காமல் தேர்வு எழுதினாள்.

மொழித் தேர்வுக்காக சற்று நேரம் இடைவெளி கிடைத்தபோது எங்கிருந்தோ வருகிற குழந்தையின் அழுகையைக் கேட்டாள். தன் குழந்தைதான் என்பதை உணர முடிந்தது. ரொம்ப நேரம் அழுதான் போலும். குரல் தேய்ந்து போய் அழ முடியாமல் அழுகிற ஓசை.... 'இதோ பாரு அம்மா, அம்மாடா...ச்சு அழக் கூடாது' என்றபடி அவன் நின்று



''சார், வணக்கம். என்னைத் தெரியுதா? உங்ககிட்டே படிக்கறப்போ எனக்குக் கணக்குச் சரியா வரல்லேன்னு அடிக்கடி பெஞ்சு மேலே ஏத்துவீங்களே?''

''லேசா நினைவுக்கு வருது. இப்போ என்ன பண்ணிட்டிருக்கே?''

''கால்குலேட்டர் வியாபாரம் பண்றேன். ஏதோ உங்க ஆசிர்வாதத்திலே நல்லா போயிட்டிருக்கு.

— பராசரம் நீலகண்டன்.

கொண்டிருந்தான். தாங்க முடியாதவளாய், பேனாவை எடுத்துக் கொண்டு வெளியேற முயன்றாள். ''வேணும் உட்கார்ந்து எழுது'' என்று ஜன்னலின் அருகே வந்து கத்தினான். அவள் உட்கார்ந்தபோது குழந்தை அடங்கிப் போய்க் கேவியது.

அவளுக்கு எல்லாரும் வேடிக்கை பார்ப்பது அவமானமாக இருந்தது. இன்விஜிலேட்டர் ஜன்னலின் ஓரமாக வந்து அவனை முழுதாக மறைத்துக் கொண்டு நின்று, ''சார் டிஸ்டர்ப் பண்ணாதீங்க'' என்றார்.

தன் முன்னால் வைக்கப்பட்ட மொழித் தேர்வுக்கான கேள்வித்தாளை வெறிக்கப் பார்த்தாள். படிக்கக்கூடத் தோன்றவில்லை. மீண்டும் குழந்தை அழுவது கேட்டது. அதன் குரல் சகிக்க முடியாததாய்ப் பாழாகி விரிட்டது. அவள் யாரையும் பொருட்படுத்தாமல் இறங்கி ஓடினாள்.

அவன் முதலில் அவர்கள் உட்கார்ந்திருந்த இடத்திற்கு வலப்புறத்தில் நின்றிருந்தான். குழந்தையின் முகம் கன்றி கருநீலமாக இருந்தது. அவள் குழந்தையை உருவிக் கொண்டாள். அவள் மேனி பட்டதும் குழந்தை அடங்கியது.

''சனியன் நிறுத்துவேனான்னுது.''

புட்டிப் பால் துளிக்கூட இல்லை. அவள் குழந்தையோடு உட்கார்ந்து தன் பாலைப் புகட்டத் தொடங்கினாள். குழந்தையைப் பார்த்துக் கொண்டிருந்த அவன் அழவில்லை என்றாலும் கண்களில் கண்ணீர் இருந்தது.

அவன் ஜன்னலருகே போய் ''இதோ வந்துடுவா சார்'' என்று சொன்னான். குழந்தையை அவள் மடியிலிருந்து எடுத்துக் கொண்டதும் குழந்தை அவன் தோள்களில் அமைதியாக சாய்ந்தது. ''போ போ பரீட்சை எழுது'' என்று அவசரப்படுத்தினான்.

''முடியாது.''

''சும்மா பேசிக்கிட்டு நிக்காதே போ.''

''முடியாதுன்னா முடியாது. உங்களுக்கு அசிங்கமா இல்லையா.... பொண்டாட்டிய கேலிப் பொருளா நிறுத்தறீங்களே! அவள் முகத்தை முழங்காலில் புதைத்துக் கொண்டு அழுதாள். ''எனக்கு இதெல்லாம் வரலே.''

அவன் ஒன்றும் சொல்லாமல் நின்றான்.

''சரி வேண்டாம்னா விடு'' என்றான். பிறகு நிதானமாக அவளருகில் உட்கார்ந்து ஆறுதலாகத் தோளைப் பிடித்து, ''நீ படிச்சவ.... கொஞ்சம் கஷ்டம்தான்..... நமக்கு இருக்கிற சலுகை.....''

''நீங்களும் உங்க சலுகையும்.... என் புத்திக்கு அப்பால இருக்கறது எனக்கு வேண்டாம். உங்களுக்கு நல்ல சம்சாரமா இருக்கறது போதாதா.....''

''எல்லார் முன்னாலேயும் குழந்தை அழுவே தான்.....''

''இல்லே, குழந்தை இல்லாதப்பவும் எனக்கு விருப்பமில்லே.''

**வீ**டு வரும்போது மாலை நேரம்தான். சூரியன் மறையக்கூட இல்லை. திட்டப்படி எதுவும் நடக்காததால் எங்கேயும் எதுவும் சாப்பிடவில்லை. புளி சாதம் இன்னமும் கனத்தது. பூட்டியிருந்த வாசல் முன்பு நின்றார்கள். அவன் அம்மாவிடம் திரும்பி வர இரவு மணி பத்தாகும் என்று சொல்லியிருந்தான். எனவே அம்மா சினிமாவுக்குப் போயிருந்தாள். எதிர் வீட்டுப் பெண் சாவியைக் கொண்டு வந்து கொடுத்தாள். கதவைத் திறந்து, முடிச்சுப் போட்டிருந்த தூளியை இறக்கிவிட்டு குழந்தையைத் தூக்கம் பண்ணினாள். முகம் கழுவப் போனாள். அவன் ஒன்றும் செய்யாமல் ஈஸி சேரில் படுத்துக் கொண்டிருந்தான். ஏதாவது பேசினால் விழுந்து கடிப்பானோ என பயந்து, சும்மாயிருக்கப் பிடிக்காமல் அவனது பழைய சட்டைக்குப் பொத்தான் தைக்க ஆயத்தம் பண்ணினாள். நூலை ஊசியின் காதில் நுழைத்த போது அவன் கேட்டான்.

''அந்தப் பொண்ணு யாரு?''

''எந்தப் பொண்ணு?''

''அதான். அங்கப் பேசினதே.''

''அதுவா! போன தடவை என்னோட பரீட்சை எழுதினவங்க. அவங்களுக்கு இன்டர்வியூ வந்ததாம். நிச்சயமா கிடைச்சுடும்னு சொன்னாங்க.''

'இதில் சிரித்துச் சிரித்துப் பேச என்ன இருக்கிறது' என்று நினைத்துக் கொண்டான்.

''அந்தப்பொண்ணைப்பார்த்துக்கூட உனக்குப் பரீட்சை எழுதணும்னு தோணலைப்-பாரு'' என்றான்.

அவள் ஊசியின் நுனியால் விரல்களின் நகப்பூச்சைத் தேய்த்தாள். அது பெயர்ந்து பெயர்ந்து வந்தது. அவன் எழுந்து போய் முகம் கழுவும் ஓசை கேட்டது. அவள் மேலும் எந்த சிந்தனையும் இல்லாமல் நகப்பூச்சைப் பெயர்த்துக் கொண்டிருந்தாள். அவன் செருப்பை மாட்டிக் கொண்டு வெளியே கிளம்பும்வரை அவள் ஒன்றும்செய்யவில்லை. அதன்பிறகுதான் அவள் பொத்தான் தைக்க ஆரம்பித்தாள். இருள் கூடி வரத் தொடங்கியது. விளக்குப் போட வேண்டும் என்ற எண்ணமில்லாமல் குறைந்த வெளிச்சத்தில் தைத்துக் கொண்டிருந்தாள். அவளுக்கு இந்த வெளிச்சமே போதுமானதாகவும் அமைதி தருவதாகவும் இருந்தது.

# எரிச்சல் • நமைச்சல் • இரத்தக் கசிவு
# மூலநோயின் ஆரம்ப அறிகுறிகள்

## உடனே சிகிச்சையைத் துவக்குங்கள்,
## அறுவை சிகிச்சையின் தொல்லையை அகற்றுங்கள்.

மூலநோய் ஒரு சாதாரண நோய். ஆனால் கவனக்குறைவாக இருந்துவிட்டால் இந்த நோய் கவலைக்கிடமாகிவிடும். அறுவை சிகிச்சை செய்ய வேண்டிய நிலை வந்துவிடும்.

மூல நோய்க்கு சக்திவாய்ந்த சிகிச்சை ப்ரிப்பரேஷன் எச்.* இதை வெளிநாடுகளில் தலைசிறந்த டாக்டர்கள் சிபாரிசு செய்கிறார்கள்.

ப்ரிப்பரேஷன் எச் மருந்துள்ளடங்கிய ஆயின்ட்மென்டின் இணையற்ற ஃபார்முலா விரைவில் வலியையும் நமைச்சலையும் நீக்குவதோடு மட்டுமல்ல, வீக்கமடைந்த திசுக்களை சுருக்கி புண்களை ஆற்றிவிடுகிறது. அத்துடன் ப்ரிப்பரேஷன் எச் மசகிட்டு குடல் அசைவின் வலியையும் குறைத்து விடுகிறது.




* Licensed user of T.M.: Geoffrey Manners & Co. Ltd.

GM-PH-84-TM

---

கால்களிலும் கைகளிலும் கால் ஆணி வியாதியினால்
அவதியுறும் நண்பர்களே!
கால் ஆணிக்குக் கைகண்ட அரிய

## பச்சிலைத் தைலம்



கால் ஆணி குணமாக கைகண்ட பச்சிலைத் தைலம்! கால்களிலே தினந்தடவி செருப்பணிந்தும் நடந்திடலாம்! மருந்து தடவி, தண்ணீரில் நடந்தாலும் தீதொன்றும் நேராது! ஒன்றிரண்டு மட்டுமிருந்தால் மாதமொன்றில் குணமாகும்! இரண்டுக்கு மேலிருந்தால் கொஞ்ச நாட்கள் கூடலாகும்! தொடர்ந்து நீங்கள் உபயோகித்தால் பூரணமாய் குணமாகும். எட்டு தினம் உபயோகித்த உடன் நீங்கள் பலனறிவீர்! இம்மருந்தை உபயோகிக்க கால் ஆணியை அறுத்திடுமோர் அவசியம் இல்லை! உத்தரவாதம் அளிக்கின்றோம்! உடன் நீங்கள் அணுகிடுவீர்!



இந்தத் தைலம் கிடைக்கும் இடம்:

**எஸ். முத்துக்குமார்**

இலக் நகர், மாஹிம் (கிழக்கு)
மாஹிம் ஸ்டேஷன் அருகில், தாராவி,
பம்பாய் – 400 017.

# வளரும் தென்னகக் கலைகள்

பம்பாய் ஸ்ரீ ஷண்முகானந்தாவில் நிகழ்ச்சி அளிப்பது என்றால் இந்தியாவின் தலைசிறந்த, முன்னணிக் கலைஞர்கள்கூட பெருமையும் பூரிப்பும் கொள்கிறார்கள். மூவாயிரம் பேர் அமரக் கூடிய ஓர் ஏ.ஸி. அரங்கில் தம் நிகழ்ச்சி நடைபெறவுள்ளது என்பது ஒருபுறம் இருக்க, அரங்கின் ஒலி பெருக்கி வசதிகள் மிகக் கச்சிதமாக இருப்ப தால் இங்கு நிகழ்ச்சி அளிப்பது கலைஞர் களுக்கு – குறிப்பாக இசைக் கலைஞர்களுக்கு ஒரு நிறைவான அனுபவம்.

சண்முகானந்தாவின் வரலாறு 1951 ஆம் ஆண்டில் தொடங்கியது. அதற்கு முன்பு மாதுங்கா பகுதியில் தனித்தனியாக இயங்கி வந்த இந்தியன் ஃபைன் ஆர்ட்ஸ் ஸொஸைடி, சண்முகானந்தா சபா, தக்ஷிண பாரத சங்கீத சபா ஆகிய மூன்று அமைப்புக்களும் கலையார்வம் படைத்த சில பெரியவர்களின் முயற்சியினால் இணைந்து ஸ்ரீ சண்முகானந்தா ஃபைன் ஆர்ட்ஸ் ஆண்டு சங்கீத சபா என்று ஆயின.



• சண்முகானந்தா

• செம்பூர் ஃபைன் ஆர்ட்ஸ்

சபை ஆரம்பித்த ஒருசில வருடங்களுக் குள் நிகழ்ச்சிகளை நடத்த அரங்கம் ஒன்று அவசியம் தேவை என உணர்ந்து முதல் கட்டமாக 1954ல் 45,000 சதுரடி நிலம் வாங்கப்பட்டது. அன்றைய சபா தலைவர், டி.கே. துரைசாமியின் விடாமுயற்சியால் கட்டடப் பணிகளும் துவங்கப்பட்டன: பம்பாயின் அரசர் என்று புகழ் பெற்ற எஸ்.கே. பாட்டீல் நிலம் வாங்கவும் கட்டடம் அமைக்கவும் பெரிதும் உதவினர்.

1963ல் முற்றுப் பெற்ற இக்கட்டடத்தின் அன்றைய மதிப்பு 27 லட்சம் ரூபாய். இன்று ஒரு கோடிக்குக் குறையாமல் பெறும்! சண் முகானந்தா அரங்கக் கட்டடப் பணிகளைத் தமது சொந்த வேலையாக நினைத்து, அதற் காக உழைத்த தமிழர்கள் பேராசிரியர் டி.வி. ராமானுஜம், ஆர். எஸ். மணி, பி. நாராயண சுவாமி, எஸ். பாலகிருஷ்ணன், டி.என்.பி. ஈசுவரன், எஸ்.ஆர். கஸ்தூரி, சேஷாத்ரி ஆகியோர். எண்ணிலடங்காத் தமிழர்களின் ஆதரவு இவர்களுக்கு இருந்தது.

இன்று இச்சபாவில் 5,800 அங்கத்தினர் கள் உள்ளனர். சுமார் ஆயிரம் பேர் இதில் சேர க்யூவில் நிற்கின்றனர்!

கே.எஸ்.எஸ். மணியும், சுவாமிநாதனும் சபாவின் சுறுசுறுப்பான செயலாளர்கள். மாநில அமைச்சர் டாக்டர் வி. சுப்பிரமணி யம் பதினைந்து வருடங்களாகத் தொடர்ந்து தலைவராக இருந்து வருகிறார். கலைநிகழ்ச்சி களை நடத்துவதோடு, இசைப் பள்ளி யொன்றையும் திறம்பட இயக்கி வருகிறது ஸ்ரீ சண்முகானந்தா. ஐந்நூறு மாணவர் களுக்குமேல் பயிலும் அப்பள்ளியில் பதினாறு ஆசிரியர்கள் வாய்ப்பாட்டு, வீணை, வயலின், மிருதங்கம், சிதார் ஆகியவைகளில் பயிற்சி அளிக்கிறார்கள். பம்பாய் பல்கலைக் கழகத் தோடு இணைந்த இசை, 'டிப்ளமா'வும் கொடுக்கப்பட்டு வருகிறது. அவர்கள் காலாண்டு இதழாக வெளியிடும் 'சண்முகா' வில் கலைகளைப் பற்றியும், கலைஞர்களைப்



## பம்பாயின் இளையராஜா

என்று செல்லமாக அழைக்கப்படும் ஆர். தியாகராஜன் முறையாகக் கர்நாடக இசையைப் பயின்ற மெல்லிசைக் கலைஞர். தமிழர் பண்டிகை தினங்களில் இவரது 'காம்பினேஷன்ஸ்' குழுவின் நிகழ்ச்சி ஏதேனும் ஒரு தமிழ்ச் சங்கத்தின் ஆதரவில் நிச்சயம் நடைபெறும். இவருடைய தங்கை விஜயலட்சுமியும் இவருடைய தாயாரும் இவர் குழுவில் பாடுகிறார்கள். பல இசைக் கருவிகளையும் வாசிக்கும் திறமை தியாகராஜனுக்கு உண்டு.

— செம்பூரான்

பற்றியும் எழுதி வருகிறார்கள்.

இதைத் தவிர அங்கத்தினர்களுக்காக மருத்துவ கேந்திரமொன்றும் இலவசமாக நடைபெற்று வருகிறது. அங்கத்தினர்களுக்கு இந்த மருத்துவ கேந்திரம் ஓர் அரிய வரப்பிரசாதமாகத் திகழ்கிறது.

நூற்றிருபது லட்சம் ரூபாய் செலவில் செம்பூர் ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைடி ஒரு கட்டடம் எழுப்பி வருகிறது. இக்கட்டடம் செம்பூரிலே மிக உயர்ந்த கலைக்கூடமாகத் திகழும். அங்குள்ள கல்யாண மண்டபத்திலுள்ள 'மணமகள் அறை' குளுமையாக இருப்பதற்கு ஏர்-கண்டிஷன் செய்யப்பட்டிருக்கும். சுழலும் மேடையும், கலைக் காட்சிகள் நடத்த அரங்கும் அங்கு நிறுவப்பட்டிருக்கும்.

1964 ஆம் ஆண்டு துவங்கப்பட்ட இச்சபாவின் அங்கத்தினர் எண்ணிக்கை: 1200. சபா, கலை நிகழ்ச்சிகள் நடத்துவதோடு 250 மாணவர்களுக்குச் சங்கீதப் பயிற்சியும் அளித்து வருகிறது. இசைத் தேர்வுகள் நடத்தி நற்சான்றிதழ்களும், வழங்கி வருகிறது. கட்டடப் பணிக்கு நிதி வசூல் செய்யும் பொருட்டு ஒரு 'கலைப் பத்திரிகை'யும் வெளியிடவிருக்கிறார்கள்.

கடந்த முப்பது வருடங்களாக இசை, நாட்டியம் முதலிய கலைகளுக்குப் பெரிய அளவில் சேவை செய்து வரும் சபா, 'பாரதிய இசை, கலைக்குழு.' பலவித இன்னல்களுக்கிடையேயும் கலை நிகழ்ச்சிகளையும், குறிப்பாக இசைப் பள்ளியையும் சிறப்புடன் நடத்தி வருகிறார்கள் இவர்கள். இசைப் பள்ளியின் முதல்வர் ஏ.எஸ். பஞ்சாபகேச அய்யர், சென்னை ஆர். ஆர். சபாவில் முப்பத்திரண்டு வருடங்களாகப் பணியாற்றிய அனுபவசாலி. இவர் புகழ் பெற்ற ஆலத்தூர் சகோதரர்களில் ஒருவர். இவர் நடத்தும் பள்ளியில் படித்த பம்பாய் மாணவர்கள் பலர் இன்று நல்ல பெயர் பெற்றுள்ள வளரும் கலைஞர்களாகத் திகழ்கின்றனர். 'பம்பாயில் திறமைக்குக் குறைவேயில்லை' என்று உறுதியோடு சொல்லும் இவர் உள்ளூர்க் கலைஞர்கள் வாய்ப்பில்லாமல் வருந்துகிறார்கள் என்றும் தெரிவிக்கிறார்.

உள்ளூர்க் கலைஞர்களுக்கு அதிக ஆதரவு அளிக்கும் முலண்டு ஃபைன் ஆர்ட்ஸ்-மினி-டிராமா விழா, மிகவும் பிரசித்தம். 1968 ஆம் ஆண்டு துவக்கப்பட்ட முலண்டு இசைச் சங்கம், ஐந்நூறு அங்கத்தினர்களைக் கொண்டது. அவர்களது ஆண்டு விழாக்களும், கலை நிகழ்ச்சிகளும் மகாராஷ்டிர சேவா சங் அரங்கில் நடைபெறும்.

இனி, காட்கோபர் ஃபைன் ஆர்ட்ஸ்:

நாடகங்கள்தான் இச்சபாவின் 'ஸ்பெஷாலிடி'. உள்ளூர்க் கலைஞர்கள் நடத்தும் நாடகங்களுக்கு இவர்கள் சபாவில் நிச்சயம் ஆதரவு கிடைக்கின்றது. தங்களது நிகழ்ச்சிகளை காட்கோபர் பகுதி பள்ளிகளில் நடத்தி வருகின்றனர். துடிப்பான இளைஞர்கள் ஆர்வத்தோடு செயல்படும் இச்சபா நன்கு வளர வாய்ப்பிருக்கிறது.

அணுசக்தி நகரிலுள்ள 'பக்த ரசிக ரஞ்சனி' சபா ஒரு சிறிய அமைப்புத்தான் என்றாலும் அங்கு பாடுவதென்றால் இசைக் கலைஞர்களுக்கு ஒரே உற்சாகம்; அறிவியல் துறையில் வல்லுனர்களான இதன் அங்கத்தினர்கள் மிகச் சிறந்த கலா ரசிகர்கள் என்பதால். இதன் தலைவர் பி. எஸ். கிருஷ்ணமூர்த்தியும், செயலாளர் சங்கரநாராயணனும் சிறந்த சங்கீத விற்பன்னர்கள். கிருஷ்ணமூர்த்தி பல பத்திரிகைகளில் இசை, நாட்டியம் கலைகளைப் பற்றி எழுதி வரும் விமர்சகர்.

கொரேகாவிலுள்ள வித்யா 'மியூஸிக் டிரையாங்கிள்', டோம்பிவிலி ஃபைன் ஆர்ட்ஸ் சொஸைட்டி போன்ற அமைப்புக்கள் பல கலை நிகழ்ச்சிகளை நடத்தி, அந்தந்தப் பகுதி மக்களின் கலா ரசனையை வளர்த்து வருகின்றன. இதைத் தவிர சுப்பிரமணிய சமாஜ் (சண்முகப்ரியா); ஆஸ்திக சமாஜ் போன்ற அமைப்புக்களும் கலை நிகழ்ச்சிகளைத் தங்கள் ஆன்மிகவிழாக்களில் ஏற்பாடு செய்கின்றன.

தமிழ்நாட்டிலிருந்து பிரபல மெல்லிசைக் குழுக்களை வரவழைத்து ஜனரஞ்சகமான நிகழ்ச்சிகளை அமைத்துப் பெருமை பெற்றிருக்கின்றனர் கார்த்திக் ஃபைன் ஆர்ட்ஸ் சபாவினர். இதன் செயலாளர் வி. சந்துரு. நிகழ்ச்சிகளில் வரும் வருவாயைச் சிறந்த மாணவ மாணவிகளுக்கு உபகாரச் சம்பளமாக வழங்கி, நல்லதொரு சமூக சேவையும் செய்து வருகிறார்கள்.

— செம்பூரான்






சினிமாவின் போன தலைமுறை வெற்றி ஜோடி சிவாஜி – பத்மினிதான் படத்தின் பிரதானப் பாத்திரங்கள். நம் வீட்டில் அப்பா அம்மாவுக்கு அறுபதாம் கல்யாண நாளன்று, மணையில் உட்கார வைத்துப் பார்த்துப் பரவசப் படுவோமே, அந்த உணர்வு வருகிறது இந்த ஜோடியை வெகுநாள் இடைவெளிக்குப் பின் மறுபடியும் திரையில் பார்க்கும் போது. விடுபட்டுப் போன வருடங்கள் பத்மினியின் முகத்தில் ஓர் அழகான முதுமையையும், வசனங்கள் பேசுவதில் ஓர் அநாவசியச் செயற்கைத்தனத்தையும் இழைத்திருக்கின்றன.



ஆர்ப்பாட்டமில்லாத ஒரு கதை. அறுபது வயது 'இஞ்சினியர்' சிவாஜி. அவரது அன்பான மனைவி. பெருமை தரும் மூத்த மகன் (ஐ. ஏ. எஸ்.) மகள் (படிப்பில் படுசுட்டி); கவலை தரும் கடைசிப் பையன் (எதிலுமே ஒரு விட்டேற்றித்தனம்).

அந்த 'ஒன்றுக்கும் உதவாத' கடைசி மகனாய்ப் பாண்டியராஜன். சிரிக்க வைத்துப் போன படம் பண்ணியவருக்கு இந்தப் படத்தில் சீரியஸ் ரோல். அதுவும் சிவாஜிக்கு இணையாக! கொஞ்சம் அவஸ்தைப்படுகிறார்—படுத்துகிறார்.

தந்தை – தாய் – மகன் உறவுகளில் கிளர்ந்தெழும் சின்னச் சின்னச் சிக்கல்கள் சுவாரஸ்யமானவை. அப்பாவைக் கிண்டல் பண்ணி மகன் நாடகம் போடுவது, வீட்டிற்கு வந்த பெரிய மனிதரிடம் மற்றவரை அறிமுகம் செய்து இந்த மகனை அறிமுகம் செய்யாமல் அப்பா விடுவது, ரகசியமாக அவனுடைய ரோஷத்திற்குப் பெருமைப் படுவது என்று நிறைய யதார்த்தக் காட்சிகள். யதார்த்தத்திற்கு ஆசைப் பட்டதில் படம் வெகு நிதானம். கதையில் பெரிய சிக்கல் முடிச்சு ஒன்று இதோ விழப் போகிறது, இதோ விழப்போகிறது என்று ஏக்கத்தோடு கடைசி வரை காத்திருந்து ஏமாற்றம். படத்தின் நீளத்தை நறுக்கென்று குறைத்திருந்தால் கொட்டாவிகளைத் தவிர்த்திருக்கலாம்.

பாண்டியராஜனின் கனவுக் காட்சி அபத்தம். தொழிலாளர் பிரச்னையில் அழுத்தம் மிஸ்ஸிங். சிவாஜியின் பழைய காதல் விவகாரத்தில் நிறைவு கிடையாது. டைரக்டர் பாலசந்திர மேனன் இதையெல்லாம் கவனித்திருக்கலாம்.

பழைய பாடல் ட்யூன்களை அப்படியே எடுத்துக் கையாண்டதில் இளையராஜாவுக்கு எந்தப் பெருமையும் இல்லை.

ஓர் இலக்கு இல்லாமல் படம் ஆரம்பித்து, இலக்கு இல்லாமல் தொடர்ந்து...... க்ளைமாக்ஸ் கூட சப்.

—ஜெயமன்மதன்

* 'லஞ்ச் டைமில்' இவ்வளவு வாரமாய் அக்கப் போரும், அரட்டையுமாய், அமர்க்களமான (நகைச்) சுவையான விருந்து, கிடைத்தது. ரு(ர)சித்து மகிழ்ந் தோம்.

சென்னை—4, மயிலை கோபி.

* 'நதி நீர் வழக்காடு மன்றம் அமைத்து அதன் தீர்ப்பை மதித்து நடக்க வேண்டும் என்று ஆலோசனை கூறிய உமது தலையங்கம் பாராட்டப்பட வேண்டிய ஒன்று.

சென்னை—28, எம். தியாகராஜன்.

* இருபத்தோராம் நூற்றுண்டிருக்குத்தான் இன்னமும் முழுசாகப் பதினுலு வருடங்கள் இருக்கின்றனவே.... அதற்குள் மாதேஸ்வரியின்-கொளகம்பட்டிக்கு டவுன் பஸ் என்ன, ஏர் பஸ்லே விட்டுடமாட்டாங்களா?

திருச்சி—20, ஆர். அப்துல் சலாம்.

* ஒருபக்கம் 'மாதிரி கிராமங்கள்' (Model Villages) மறுபக்கம் கொளகம்பட்டி மாதிரியான கிராமங்கள்! என்ன அக்கிரமம் ஐயா இது? 'இந்தியா கிராமங்களில் தான் இருக்கிறது' என்று சொன்னுர் மகாத்மா. ஆனால் இன்றைக்கு அனேகம் கிராமங்கள் கொளகம்பட்டிகள் தான்.

தஞ்சை—7, வடுஜர் கண்ணன்.

* கலெக்டர்களெல்லாம் 'கல்கி' நிருபர்களைச் சந்திப் பதற்காகக் காத்திருக்க ஆரம்பித்து விட்டார்களா? சபாஷ்! கல்கியே உன் சேவை தொடரட்டும்.

தோப்புத்துறை, எச். கே. நாசர்.

* நீங்கள் அடுக்கடுக்காகக் கேள்விகள் கேட்டும் சிறிதும் அயராமல், அமைதியுடன் பதிலளித்துள்ள அந்த தர்மபுரி மாவட்ட கலெக்டர் நம் வாழ்த்துக்குரி யவர்.

சாலிக்கிராமம், எஸ். சம்பத்குமார்.

* 'அடுத்த இதழில் எம்.ஜி. ஆரிலிருந்து மோகன் வரை' என்ற அறிவிப்பைப் பார்த்துவிட்டு ஒரு வார மாக நாக்கைத் தொங்க போட்டுக் கொண்டு காத்திருந்த எங்கள் மூஞ்சியில் கரியைப் பூசிய உங்களே, இரண்டு மாலிஷ்காரர்களிடம் ஒப்படைக்க வேண்டியதுதான்!

பெங்களூர்—16, டாக்ரிக்ஸ்.

* ஒகேனக்கல் நீர் வீழ்ச்சிச் சாரலின் இனிய அனு பவங்களே ரசித்து, குளித்து, எழுதி அமர்க்களப் படுத்திவிட்டீர்கள்!

பண்ருட்டி, எஸ். தமீஜுதீன்.

* 'விளக்கத்துக்குரிய சினிமா விளம்பரங்களில் 628 இதை மறந்துவிட்டாரே:

'குடும்பத்துடன் பார்க்க வேண்டிய படம்.'

உள் அர்த்தம்: 'நீங்கள் ஒருவர் மட்டும் பாவம் செய்தால் போதாது, குடும்பத்தி ன்ன அனைவரும் பாவம் செய்ய வேண்டும்.'

அரூர், மதிவாணன்

* '628' தந்த 'விளக்கத்துக்குரிய சினிமா விளம் பரங்கள்' நல்ல நகைச்சுவையாக இருந்தது.

சீர்காழி, க. இளங்கோ.

* 'படம் வசூலில் வெற்றி பெறுகிறதோ இல்லையோ, மக்களை நிச்சயம் கெடுக்காது' என்ற ரகுராமிரெட்டி யின் எண்ணம் ஒவ்வொரு தயாரிப்பாளருக்குமிருந் தால்.... நாம் கொடுத்து வைத்தவர்கள்தான்!

குடியாத்தம்—2, கே. பட்டாபிராமன்.

* பாபு ஜெகஜீவன்ராமின் சமீப கால நடவடிக்கை களை மட்டும் வைத்து அவர் மேல் கசப்புணர்ச்சி கொண்டிருந்த என் போன்ற இளைஞர்களுக்கு அவரின் கடந்த கால அரசியல் பணி எப்படிப்பட்டது என்று கல்கியின் அஞ்சலி விளக்கியது.

சீர்காழி—10, ஆர். எஸ். இராஜ்.

* சிங்காரப்பேட்டை அசிங்கப்பட்டுப் போய்க் கொண்டிருப்பதற்கு போலீஸாரும் உடந்தை என்பதைப் படிக்கும்போது தமிழக அரசின் மெத்தனத்தை எண்ணி வேதனைப் படத்தான் முடிகிறது!

பெங்களூர்—53, சித்திரப்பிரியா.

* எங்கள் ஊரில் நீண்ட நாட்களாக நடந்து வரும் விபசாரத் தொழிலைப் பற்றி பகிரங்கமாக எழுதியுள்ள

# கொளகம்பட்டிக்கு ஏர் பஸ்ஸே விடுவார்கள்!

வட்டமேஜை

முதல் பத்திரிகை உமது பத்திரிகைதான்! 20.7.86 கல்கி இதழை அறியாதவர் கையிலும் கண்டேன். மற்றும் இதழ் வெளிவந்த மறுநாளே தலைமைப் போலீஸார் வந்து நடவடிக்கை எடுக்க ஆரம்பித்து விட்டனர்.

சிங்காரப்பேட்டை, வி. அண்ணாதுரை.

* இப்படி அறியாயமாகக் கெகிகளைப் போட்டு டைத்து வெட்ட வெளிச்சமாக்கிவிட்டீரே! இனி பாருங்கள், நெல்லை அருப்புக் கோட்டைத் தொகுதி அரசு அதிகாரிகளுக்கு அரசாணைகள் (?!) ஜெட் வேகத்தில் பறக்கப் போகின்றன. கூடவே எதிர்க் கட்சியின் பாவத்தையும் வாங்கிக் கட்டிக் கொள்ளப் போகின்றீர்.

சின்னதாமல்செருவு, வி.எம். கருணாகரன்.

* தர்மபுரி மாவட்ட செய்திகள் எல்லாம் புதுக மய மாகவே இருந்தன சார்! மதுமகேஷின் சிறுகதைக் கும் சேர்த்துத்தான் இந்தப் பாராட்டு.

தக்கலே, உ. சங்கரப்பு.

* 'எல்லாம் புதுக மயம்' கதை அபத்தம், அபத்தம், படு அபத்தம்! எந்த ஒரு மனிதனுமே தனது பெண்ணை விருந்துக்குத் தருந்தாற் போல் வீட்டையும், வீட்டில் உள்ள பொருள்களையும் மாற்றிக் கொள்ளத்தான் செய்வான். அதற்காக மனைவியையும் மாற்றிக் கொள்வான் என்று எப்படித் தீர்மானிக்கலாம்?

கொப்பம்பட்டி, த. ஜெயக்குமார்.







மங்கல சௌபாக்கியத்தின் சின்னம்

# ஐடெக்ஸ்

டீலக்ஸ் குங்குமம்

matt finish

**ஐடெக்ஸ்** 48 ஆண்டுகளாக
உங்கள் நம்பிக்கையின்
மகத்தான சின்னம்




அரவிந்த் லாபரடரீஸ், சென்னை 600033.

# பெருக்குவது மரங்களை, சுருக்குவது மக்கள் தொகையை, இதில் நெய்வேலி நிறுவனத்திற்கு மட்டற்ற மகிழ்ச்சி!



## மரங்களைப் பெருக்கும் நெய்வேலி நிறுவனம் அதே நேரத்தில் மக்கட் தொகையைச் சுருக்கி அரும்பணி ஆற்றுகிறது. இந்த இரண்டு துறைகளிலும் நெய்வேலி தேசிய சராசரி சாதனையை முறியடித்துவிட்டது. அதுமட்டுமல்ல...

**ஒரு முன்மாதிரி நகரம் :**
நாட்டிலேயே அதிக லாபம் ஈட்டும் பொதுத்துறை அமைப்புகளில் ஐந்தாவதாகத் திகழும் நெய்வேலி நிறுவனத்திற்கும், சூழ்நிலைச் சுற்றுப்புற வளப்பு மற்றும் பிறப்பு விகிதக் கட்டுப்பாடு ஆகியவற்றிற்கும் என்ன தொடர்பு? இது ஒரு நியாயமான கேள்வியே!

ஆசியாவிலேயே மிகவும் பெரியதான லிக்னைட் சுரங்கத் தொழிலகம் நெய்வேலியில் 1956ல் ஆண்டில் உருவான போது, இந்திய அரசு மிக அதிக சமூக உணர்வுடன் நேர்த்தியான, மிகவும் வசதியான, முன்னுதாரணமான தொழில் நகர் வாழ்க்கை மக்களுக்கு அளிக்கவும் எண்ணம் கொண்டது.

**பொறுப்பு - நெய்வேலி பங்கு**
மரங்கள் மண்ணில் புதைந்து கரியாக மாறிவிட்டன. அந்தக் கரியை வெட்ட மண்ணைத் தோண்டிப் புரட்டிய நெய்வேலி நிறுவனம் அதே மண்ணில் மேலும் பலவகை மரக் கன்றுகளை இலட்சக்கணக்கில் ஆண்டு தோறும் நட்டு வருகிறது. ஒரு குடும்பத்திற்கு ஒரு மரம் என்பது தேசிய இலட்சியம். குடும்பத்திற்கு 345 என்பது நெய்வேலியில் இன்றைய சாதனை.

நெய்வேலியில் பல்வேறு மரங்களின் மொத்தத் தொகை ஏறத்தாழ 60 இலட்சம் - இது கடந்த ஐந்து ஆண்டு கால வளர்ச்சி.
குடும்பநலத் திட்டத்தினால் 97.35 சதவிகிதத் தொழிலாளர்கள் பயன் பெற்றிருக்கின்றனர். அதனால் குழந்தைகள் பிறப்பு விகிதம் வியக்கத்தக்க வண்ணம் 1000க்கு 4.04 என்று குறைக்கப்பட்டுள்ளது.

350 படுக்கைகள் கொண்ட பெரிய பொது மருத்துவமனை, ஐந்து சிறு மருத்துவமனைகள் ஊழியர்களின் உடல் நலத்தைக் காக்கின்றன.

சுரங்கத்திலிருந்து வெளியேற்றப்படும் உபரிநீர் விளைநிலங்களுக்குப் பயன்படுகிறது. பல ஆழ்துளைக் கிணறுகள் 72 சுற்றுப்புற கிராமங்களின் வறட்சியை விரட்டி இருக்கின்றன.

**மனிதத் திறமை மேம்பாடு :**
தொழில் முனைவுகளில் அதிக லாபம் ஈன்று, நாட்டின் பத்து முதன்மைப் பொதுத் துறை நிறுவனங்களில் நெய்வேலி ஐந்தாவதாகத் திகழ்கிறது.

அதனால்தான் நிறுவனம் 20,000 ஊழியர்களுக்கும், பிறருக்கும் அருமையான வளாக வசதிகள் செய்துதந்து சமூகப்பணி செய்யமுடிகிறது. திறமையான செயல்பாடே செல்வம் என்பதனால் நிறுவனம் ஒரு கோடி ரூபாய் செலவில் உருவாக்கியுள்ள பயிற்சி நிலையத்தில் பலருக்கும் அவர்தம் துறையில் நவீன வளர்ச்சி பற்றிய பயிற்சி அளிக்கப்பட்டு வருகிறது.

சமுதாய நலத்திற்கும் மற்றும் வசதிகளுக்கும் ஆண்டு தோறும் ஒவ்வொரு ஊழியருக்கும் நிறுவனம் ரூ. 4,500 செலவிட்டு வருகிறது.

வன வளம், மன நலம், மாறுபட வளம், அவை நெய்வேலியின் சிறப்புமிக்க செல்வம்.



**நெய்வேலி லிக்னைட் கார்ப்பொரேஷன் லிட்.,**
(இந்திய அரசு நிறுவனம்) நெய்வேலி 607 801 ■ தமிழ் நாடு



நாளும் வளரும் நெய்வேலி



# நெருப்பாக நீ

ஸ்டேஷன் மாஸ்டரின் பேச்சு, லோகநாதனை மட்டுமில்லை, மாதையனையும் ஒரு கலக்குக் கலக்கியதென்றால், அது மிகையே இல்லை.

படித்தவர்களே ஆவி, பிசாசு என்றால் பயப்படுகிறபோது, படிப்பறிவில்லாத—கிராமத்து மண்ணிலேயே புரண்டு வளர்ந்த அவன், பிரமித்துப் போய் உட்கார்ந்துவிட்டான்.

மங்களாம்பாளின் ஆவி, இன்பாவின் உடம்புக்குள் புகுந்திருப்பதாக ஸ்டேஷன் மாஸ்டர் சொன்னதும், அதே கூடத்தில் பெருத்த தூண் ஒன்றின் மறைவில், கை கட்டி, வாய் பொத்தி, எசமானரின் ஆணைக்காகக் காத்து நின்றவனின் தேகமே பறந்தது....

இரவு எப்பொழுது வரும்.... இன்பாவை எப்பொழுது சந்திக்கலாம் என்று காத்திருந்தான்.

காத்திருந்த நேரத்தில் யோசித்துப் பார்க்கப் பார்க்க, இன்பாவின் நடவடிக்கைகளும், பேச்சும், பாட்டும் மங்களாம்பாளை ஒத்திருந்ததற்குப் புதிய அர்த்தம் கிடைக்கிறது....

அவன், இன்பாவைத் தேடிப் போனபோது, நந்தகுமார் அவளருகில்....

மாதையனுக்குள் பயம் குபீரெனப் பரவுகிறது.. சின்ன எசமானரின் அந்தரங்க நேரத்தில் உள்ளே பிரவேசிப்பது அதிகப்பிரசங்கித்தனமாகத் தோன்றுகிறது அவனுக்கு.

சாதாரண நாளாயிருந்தால், சிறுசுகளின் சேட்டைகளைப் புன்முறுவலுடன் ரசித்தபடி, அறைக்குள் தன்னைத் தவிர வேறு யாரையும் அனுமதிக்கக் கூடாது என்கிற எஜமான விசுவாசத்துடன், இவர்களின் பேச்சுக்கு இடையூறு இல்லாதவாறு ஒதுங்கி நின்று காவலிருப்பான்.

சமையற்காரியோ, எடுபிடி ஆளோ, அந்தப் பக்கம் வந்தால் ஓர் அதட்டல் போடுவான்.

''இந்தா.... குழிப் பிள்ளைய நரி சுத்தற மாதிரி, இங்கேயே ஏன் சுத்திச் சுத்தி வர்றே? பங்களாவுல வேறே எடமா இல்லே? போவியா.... ஒட்டுக் கேட்கிற ஜென்மங்க எல்லாம் மறு பிறவியில கழுதையாப் பொறப்பாங்க.''

இன்று அப்படி மெத்தனமாக இருக்க முடியவில்லை.

மாதையன் யாருக்கும் பயப்பட மாட்டான்தான். ஆனால் அப்பேர்ப்பட்டவனையும் ஆவி பயம் பிடித்து உலுக்குகிறது....

இன்பாவின் வழக்கமான கிங்கிணிச் சிரிப்புகூட, அடி வயிறு வரை சென்று தாக்குவதாய்....

'அய்யய்யோ....சிரிச்சுப்பேசியே சின்னய்யாவை, எசமானியம்மாவோட ஆவி தின்னுடும் போல இருக்கே....'

அவன் மெள்ளக் கனைக்கிறான்.

ஊம்ஹூம். இது எதுவும் காதில் விழும் நிலையில் இல்லை நந்து.

''இன்பா.... இப்ப வலி எப்படியிருக்கு....''

## முன் கதை:

ஓவியக் கல்லூரியில் பயிலும் இன்பாவும் நந்தகுமாரும் காதலர்கள். நந்துவின் சொந்த ஊருக்கு அவனுடன் சென்று வர இன்பா தன் அப்பாவின் அனுமதி பெற்றுப் புறப்படுகிறாள். "நீ தனியாகப் போறதா நினைக்காதே! நீ நெருப்பு! நெருப்புக்குத் துணை காற்று! காற்றோடு கரைந்த உன் அம்மா உனக்கு எப்பவும் துணை இருப்பா" என்று கூறி மகளை ரயிலேற்றி அனுப்புகிறார் ஜனார்த்தனம்.

கிராமத்துக்கு வந்து சேர்ந்த இன்பாவுக்கு முதலில் அந்த இயற்கைச் சூழல் சுற்றிப் பார்க்கவும் ஓவியம் தீட்டவும் மாறுதலாகவும் மனோரம்யமாகவும் இருக்கிறது. ஆனால் போகப் போக அவளுக்கு உள்ளத்தில் பலவித கேள்விகள் முளைத்தெழுகின்றன. பல சந்தேகங்கள் தோன்றுகின்றன.

நந்துவின் அப்பா லோகநாதன் இன்றைக்கும் ஒரு ஜமீன்தார் போலத் தமது பெரிய பங்களாவில் சவுக்கும் கையுமாக வளைய வருகிறார். அவருடைய இரண்டாம் மனைவி புவனாதான் நந்துவின் தாய். அவள் உடம்பு சரியில்லை என்று கூறிக் கொண்டு படுத்துப் படுத்துப் பொழுதைக் கழிக்கிறாள். எழுந்து உட்கார்ந்தாள் என்றால் தன்னைக் கண்ணாடியில் அழகு பார்த்து அலங்கரித்துக் கொள்கிறாள். எழுந்து நடந்தாள் என்றால் மூத்தாள் வாழ்ந்த அறைகளில் எதையோ தேடுவது போலச் சுற்றிவருகிறாள். அவருடையமூத்தமகன் அவினாஷ் — நந்துவின் அண்ணா — புத்தி பேதலித்த நிலையில் மாடியில் சங்கிலியால் பிணைக்கப்பட்டு ஓர் அறையில் பூட்டி வைக்கப்பட்டிருக்கிறான்.

ஜமீன்தாரையும் புவனாவையும் பார்க்க அடிக்கடி ஒரு டாக்டர் வந்து போய்க் கொண்டிருக்கிறார். அவர் கலபமாகப் பணம் பண்ணுவது போல் தோன்றுகிறது இன்பாவுக்கு. அந்த ஊர் ஸ்டேஷன் மாஸ்டரும் ஜோதிடம் ஜாதகம் என்று கூறியபடி வந்து போய்க் கொண்டிருக்கிறார். டாக்டர், தமது அசட்டுப் பெண் மல்லிகாவை எப்படியாவது நந்துவுக்குக் கல்யாணம் செய்து வைத்து,சொத்துக்களை அடையத் திட்டமிடுகிறார்.

இவர்கள் எல்லாருமே போலித்தனத்துடன் வளைய வருவதுபோல் இன்பாவுக்குத் தோன்றுகிறது. அந்த வீட்டில் ஏதேதோ மர்மங்கள் இருப்பதாகச் சந்தேகிக்கிறாள். படிப்படியாக லோகநாதனின் முதல் மனைவி — மறைந்து போன மங்களாவின் ஆளுமையை அவள் உணர ஆரம்பிக்கிறாள். எப்படி நிகழ்கிறது, ஏன் என்று புரியாதவாறு சிலசம்பவங்கள்நடக்கின்றன. 'குழந்தைஇல்லாமல் இறந்த மங்களா யார்? சிறு வயதில் தாயை இழந்த எனக்கும் அவளுக்கும் என்ன சம்பந்தம்' என்று இன்பாவை யோசிக்க வைக்கின்றன!

நெடுங்காலமாக அந்த வீட்டில் எடுபிடி காரியங்கள் செய்தும், வண்டியோட்டியும் வருகிறான் கிழவன் மாதையன். அவன் வாயைக் கிளறினால் உண்மைகள் தெரிய வரும் என்று நம்புகிறாள் இன்பா. இது லோகநாதனுக்குப் பிடிக்கவில்லை. தமது அதிகாரத்தை அவ்வப்போது நிலைநாட்டி வருகிறார்.

இந்தப் பனிப் போரின் முடிவுதான் என்ன?

"பரவாயில்லே. ஆமா, அந்த டாக்டர் என்ன ஊசி போட்டாரு?"

"தெரியல்லே. எதுவாயிருந்தா என்ன? உன்னோட வலிய குறைச்சதுக்காகவாவது, அந்த டாக்டரைக் கொஞ்சணும் போல இருந்தது..."

"அவரைக் கொஞ்சாதே. அசிங்கம், அவர் பொண்ணைக் கொஞ்சு. சந்தோஷப் படுவார்."

"எப்படி இன்பா, இந்த மாதிரி நெஞ்சுல ஈரமே இல்லாம பேசறே... வேஷம் போடாம சொல்லு... உனக்கு என் மேல ஆசையில்லையா?"

"இல்லேன்னு நான் சொன்னேனா... நிறைய ஆசை இருக்கிறதாலேதான் நிறைய யோசிக்க வேண்டியதா இருக்கு... நீ என் கிட்டயிருந்து என்ன எதிர்பார்க்கிறே?"

"உன்னை... உன்னைத் தவிர வேறே எதுவுமே இல்லே..."

"என்னையின்னா... இன்பாங்கிற பேரைச் சுமந்துட்டிருக்கிற இந்த இருபத்தியொரு வயசுப் பொண்ணையா... இவளோட கண், மூக்கு, அங்க அவயவங்களையா?.. இல்லே — இவளுக்குள்ளே இருக்கிற இன்னொரு இன்பாவையா...?"

"இதப் பாரு... என்னால உன்னை மாதிரி பேச முடியாது... 'நீ'யின்னா — உனக்குள்ள இருக்கிற சகலத்தையும் சேர்த்துத்தான் எனக்குச் சொந்தமாக்கிக்கணும்னு விரும்பறேன்..."

"இந்த இன்பாவுக்குள்ள இருக்கிற இன்பா — ஹோம குண்டத்துல நீறு பூத்துக் கிடக்கிற நெருப்பு மாதிரி நந்து... அவ எதையோ தேடி, நெஞ்சு நெருப்பை, சாம்பல் போர்வையில காலம் காலமா மறைச்சு வெச்சிருக்கா... இப்பக் கொஞ்ச காலமா சந்தேகம்கிற நெய், நெருப்பைத் தூண்டி விட்டிருக்கு... யூ நோ... நெய்ய எவ்வளவுக்கு எவ்வளவு அதிகமா ஹோமத்துல விடறோமோ, அவ்வளவுக்கு அவ்வளவு தீ ஜ்வாலை எழும்பி, நெய்யை ஊத்தற கையையே சுடும்..."

"உன்னை முதல்லே ஸைக்யாட்ரிஸ்ட் கிட்ட அழைச்சிட்டுப் போய்க் காட்டணும்..."

"எப்பப் போகலாம்? எனக்குக் கூட அவர் கிட்ட கேட்டுத் தெரிஞ்சுக்க வேண்டிய விஷயம் சிலது இருக்கு..."

நந்தகுமார் பெருமூச்செறிகிறான்.

"கல்யாணம் பண்ணிட்டு புருஷனோட ஹனிமூன் போய், டூயட் பாடணும்கிற ஆசை எல்லாம் உனக்கு இல்லவே இல்லையா இன்பா?"

"ஓ... கல்யாணம் பண்ணிக்கணும்... அதோ, அந்த பூஜையறையில கோலம் போட்டு, விளக்கேத்தி வெச்சு கண்ணை மூடிப் பிரார்த்தனை செய்யணும். அந்த எளிமையான சமையற்கட்டுல வெச்சிருக்கிற விறகடுப்பையும், வெண்கலப் பானையையும் உபயோகப்படுத்தணும்... ஆஞ்சநேயர் படத்துக்குப் பொட்டு வைக்கணும். உங்க பெரியம்மா மாதிரி பட்டுப் புடைவையும் நிறைய நகைங்களுமா இந்த வீட்டுல வளைய வரணும்..."

இந்தச் சமயத்தில், நந்துவின் வழக்கமான கோபம் எட்டிப் பார்க்க, 'பட்'டென

வெடிக்கிறான்...

''எல்லாத்தையும் வரிசையாச் சொல்லு... என்னோட வாழுறதைப் பத்தி மட்டும் மூச்சு விடாதே... உன்னை நான் கல்யாணம் பண்ணிக்க ஆசைப்படறது இந்த வீட்டு ஆஞ்சநேயர் படத்துக்குப் பொட்டு வைக்க ஆள் இல்லேங்கிறதுக்காக இல்லே... என்னை எப்பத் தொட அனுமதிக்கப் போறே...''

''உன் அப்பா மாதிரியே இருக்கே நீயும்... ஒண்ணு செய்யேன்... நான், உங்க பெரியம்மா மாதிரி இந்த போர்ஷன்லே, எனக்குப் பிடிச்ச வேலையச் செஞ்சுட்டு அக்கடான்னு இருக்கேன். உனக்கு, உன் கூடப் படுத்துக்க வேணுமானா இன்னொருத்தியக் கொண்டு வந்து மாடியில வெச்சுக்க...''

''ஷிட்!''

அவன், கையில் கிடைத்த தலையணையால் அவளை மொத்திவிட்டு, வேகமாய் அந்த அறையை விட்டு வெளியேறுகிறான்.

எதிரில் வந்த மாதையனைக் கூட கவனிக்கவில்லை.

மாதையன், தயங்கித் தயங்கி இன்பா படுத்திருந்த அறைக்குள் எட்டிப் பார்த்த போது, அவள் கண்களில் நீர் தளும்ப, வயிற்றைப் பிடித்துக் கொண்டு சிரித்துக் கொண்டிருக்கிறாள்.

சில வினாடிகளுக்குப் பிறகே மாதையனைக் கவனிக்கிறாள் அவள்.

அவனோ, அவளெதிரில் இரு கைகளையும் மார்போடு சேர்த்துக் கட்டியபடி, பவ்யமாய் நிற்கிறான்.

அவனைப் பார்த்ததுமே ஆஞ்சநேயரின் நினைவு வர, மறுபடியும் சிரிக்கிறாள் அவள்.

'உம்... பாவம்... சின்னப் பொண்ணை... ஆவி நல்லாத்தான் பிடிச்சிருக்கு... உன் ஊர்ப் பூசாரி கையால துண்ணூறு வாங்கி இட்டு, வேப்பிலையாலே, ரெண்டு தட்டுத் தட்டச் சொல்ல வேண்டியதுதான்...'

'தாயே மங்களாம்பா... உங்களுக்கு நடந்தது முச்சூடும் கொடுமைதான். இல்லேங்கலை. அதுக்காக யாரைப் பழி வாங்கணுமோ வாங்குங்க... இந்த சின்னஞ்சிறுசுங்களோட வாழ்க்கைய அழிச்சிடாதீங்க...'

'மகராசி... ஒரு ஈ, எறும்புக்குக் கூட துரோகம் நினைக்க மாட்டீங்களே... உங்களுக்கு இந்த மாதிரியான நினைப்பு வரலாமா...?'



இன்பா, கட்டிலில் சப்பணமிட்டு அமர்ந்து, மாதையனையே குறுகுறுவெனப் பார்க்கிறாள்.

"குளிருதா மாதையா?"

"இ... இ... இல்லீங்களேம்மா!"

"பின்னே ஏன், இப்படிக்கையக்கட்டிட்டு, ஏதோ சாமி முன்னாடி நிக்கறாப்பல நிக்கறே..."

அவ்வளவுதான் அவன் சற்றும் எதிர்பாராத விதமாய் மாதையன் அழத்தொடங்கி விட்டான்...

இடுங்கிய கண்களிலிருந்து தாரை தாரையாய் வழியும் நீர் — கன்னத்தைச் சதுப்பு நிலமாக்கி, நாணற் புதரில் மறைவது போல வெண் தாடியில் மறைவதை ஆச்சரியத்துடன் பார்க்கிறாள் இன்பா.

"என்ன ஆச்சு மாதையா... நான் ஏதாவது தப்பாச் சொல்லிட்டேனா?"

"ஐய்யோ... அதெல்லாம் இல்லே தாயே... இருவது வருஷங்களுக்கு அப்பாலே பார்த்த அதிர்ச்சியில பேச்செழும்பலே.."

"மாது!"

இன்பா அதட்டும் குரலில் அழைக்கிறாள்.

"குடிக்கிற பழக்கம் உண்டா... என்ன உளறல் இது... இருபது வருஷத்துக்கு அப்புறமா யாரைப் பார்க்கறே?"

"உங்களைத்தாங்க..."

இன்பா 'சட்'டென எழுந்து, அவனருகில் வந்து நின்று, உற்றுப் பார்க்கிறாள்...

"என்னைத்தான் இருபத்துநாலு மணி நேரமும் பார்த்துட்டே இருக்கியே மாது..."

"இருந்து என்னங்க பிரயோசனம்... அம்மா வந்திருக்காங்கன்னு இந்த மடையனுக்குப் புரியலியே... இதோ இப்ப ஸ்டேஷன் மாஸ்டர் வந்து சொல்றார்... ஏம்மா, இத்தினி வருஷமா உங்க உப்பைத் தின்னு உசிர் வளர்த்து, இன்னமும் உங்க விசுவாசியாவே இருக்கேனே... என் கனவுல வந்து, 'தா பாருடா மாதையா... இந்த வீட்டுக்கு நான் திரும்பியும் வந்திருக்கேன்... எனக்கு இன்ன காரியம் நடக்கணும்'னு எங்கிட்ட சொல்லக் கூடாதா...?"

"......"

"சின்ன எசமான் இருக்காரே... அவரு ரொம்பவும் பிரியப்பட்டு அழைச்சுட்டு வந்த பொண்ணுங்க இது... கண்ணாலம் கட்டிட்டு, நல்லபடியா வாழணும்னு ஆசைப்படறாரு... அவங்க ஆசைக்குத் தடை போட்டுடாதீங்க... உங்களுக்கு யார் மேல கோவம்... யார் உங்களை இப்படி அலைய விட்டிருக்கிறதுன்னு எங்கிட்டச் சொல்லுங்க... தலைய வெட்டி உங்க காலடியில வெச்சிட்டு, தூக்கு மேடைக்குப் போகக் கூடத் தயாரா இருக்கேன்... உங்க கையாலே தின்ன சோறும், பலகாரமும் இன்னும் கூட என் நெஞ்செல்லாம் மணக்குது தாயே... புண்ணியவதி.."

இதைச் சொல்லிவிட்டு இன்பாவின் முன் அவன் நெடுஞ்சாண் கிடையாகத் தரையில் விழுந்து வணங்க —

அவள் பதறிப் போய் பின்னுக்கு நகர —

"மாதையா!"

குரல் கேட்டு, சுய உணர்வு பெற்றவனாய் எழுந்து திரும்பிப் பார்க்கிறான் அவன்...

லோகநாதன்....!

"என்ன இது...? பைத்தியக்காரத்தனம்...?"

அவர் அதட்ட, அவன், மிகப் பணிவாய் கூறுகிறான்.

"என்னமோ கும்பிடணும் போல இருந்துச்சுங்க...."

"உன் வயசு என்ன, அவ வயசு என்ன...?"

"அதானே...?"

இன்பாவும், லோகநாதனுடன் சேர்ந்து சொல்ல — அவர், அவள் பக்கம் திரும்பிப் பாராமலேயே, மாதையனிடம் சொல்கிறார்.

"இனிமே ராவு, இங்கே படுக்க வேண்டாம்... புறப்படு..."

இன்பா திடுக்கிட்டாள்.

"ஐய்யோ... எனக்குத் துணை வேணும்... ராத்திரி தனியாப் படுத்துப் பழக்கமில்ல.."

இப்போதும் லோகநாதன், அவளது முகத்தைப் பாராமலேயே சொல்கிறார்:

"பழகின இடத்துல படுக்க என்ன பயம்! இது உன் வீடு. மாதையனுக்கு வேற வேலை இருக்கு.... நீ வா மாதையா...."

அவர் மிடுக்காய்த் திரும்பி நடக்க, இன்பா, கட்டுப் போட்ட தலையை இரு கைகளாலும் பிடித்தபடி உட்கார்ந்து விட்டாள்..

மாதையனின் பேச்சிலிருந்து ஒன்று மாத்திரம் அவளுக்குப் புரிந்தது.

அவன், தன்னிடம் பேசவில்லை. என்றோ செத்துப் போன தன் எஜமானியிடம் பேசியிருக்கிறான்...

எனக்குள்ளே அவளைக் காண்கிறானோ...?

இல்லை, என்னையே அவளாக நினைத்து விட்டானோ...?

நந்துவோட அப்பா வேற போற போக்குல — 'இது உன் வீடு'ன்னு ஒரு புதிர் போட்டுட்டுப் போறார்...

'என்ன ஆச்சு இவங்களுக்கு?'

யோசித்து யோசித்துக் குழம்பியவள் எப்பொழுது தூங்கினாளோ...?

விடிகாலையில் மறுபடியும் மாதையன் வந்து எழுப்பிய போதுதான் எழுந்திருக்கிறாள்.

(தொடரும்)

"சண்டைப் படம்னு என்னோட மனைவியை அழைத்துச் செல்ல மாட்டேன்!"

"ஏன்?"

"புதிய யுக்திகளைத் தெரிஞ்சுக்குவாளேன்னு தான்!"

— கடுவை கோபால்சாமி





# Full of Beans!

The growing child has energy to let her play long. And the secret of such energy? Health truly built up with Albo-Sang- a nutritious tonic that suits all ages. Supplements diet with its minerals and herbs.




## ALBO-SANG®

Aids digestion and adds energy

"Ask your dealer for Economy Family Pack"




J.& J. DeChane
Laboratories Private Limited
Hyderabad -500

மகிழ்ச்சிகரமான பிறந்த நாளா உங்களுக்கு
மகிழ்ச்சிகரமான மணநாளா உங்களுக்கு

பிறந்த நாள் — மணநாட்களை ஒரு வித்தியாசமான முறையில் கொண்டாடுங்கள்

பிறந்த நாள், மணநாட்களை மகிழ்ச்சியாகக் கொண்டாடும்பழக்கம்உலகமுழுவதும் அனைவருக்கும்பொதுவானது. ஆனால் சின்னஞ்சிறார்கள் விஷயத்தில் இவ்விழா இன்னும் அதிக முக்கியத்துவம் அடைகிறது. இக்கொண்டாட்டங்களுக்கு வயது ஒரு தடையில்லை.

விருந்தும் இனிப்பு வழங்குதலும் வேடிக்கை விளையாட்டுகளும் இவ்விழாக்களில் தனித்தன்மையாகும். மலர் மாலைகள் அன்பளிப்புகள், பணம் இவைகள் நம்மை விரும்புபவர்களால் நமக்குக் கொடுக்கப்படுகிறது.

ஆனால் இவைகள் அனைத்திற்கும் பணமே மிகவும் அவசியம். இந்த சந்தர்ப்பங்களில் நாம் எப்போதாவது எளியோரையும், நோயுற்றோர்களையும் சிறிதளவாவது எண்ணிப் பார்ப்போமா? தேவையுள்ளோருக்கு ஒரு நன்மை என்பது நமக்குத் திருப்தி அளிக்காதா?

இத்தகு விழாக்களை சிறப்பாகக் கொண்டாடுங்கள். ஆனால் அன்பும், இரக்கமும் ஆசியும் வேண்டி நிற்கும் அனாதைப் பற்றியும் சிறிது எண்ணிப் பாருங்கள்.

இப்படிப்பட்ட ஆதரவற்ற அவர்களின் நலனுக்காக ஏதாவது நாம் வழங்காவிட்டாலும் மேற்கண்ட கொண்டாட்டங்கள் நிறைவுறாது. இக்கொண்டாட்டங்கள் ஆண்டிற்கு ஒரு முறைதானே வருகிறது. அடிக்கடி வரவில்லையே, அந்நாளில் இக்குழந்தைகள் மீதும் கருணைப் பார்வை விழுமானால் அவர்களுடைய வாழ்த்துக்கள் உங்களையும் உங்களுக்கு உரியவர்களையும் வாழ வைக்கும்.

தாங்கள் தங்களது நன்கொடையினை ஒரு பொது நிதியாகவோ அல்லது கட்டிட மானியமாகவோ அளிக்கலாம்.

உதாரணத்துடன் செயல்படுங்கள்; திருப்தி கொள்ளுங்கள். சிவானந்த ஆசிரமத்திற்கு தாராளமாக உதவுங்கள்.

தாங்கள் அனுப்பும் நன்கொடைகள் சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம் என்ற பெயருக்கு பணவிடை, அஞ்சல் ஆணையாகவோ, காசோலையாகவோ அளிக்கலாம். அனுப்ப வேண்டிய முகவரி:

**நிர்வாகி,**
**சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்**
**20 கம்பர் தெரு**
**கிழக்கு தாம்பரம்**
**சென்னை — 600 059**
**தொலைபேசி எண்: 48248 433384**



பிள்ளே விட்டார்!



அமெரிக்கரை பூரணகும்ப மரியாதைகளோடு வரவேற்கும் கேஹில்...

# அமெரிக்கத் தூதரகமே; கல்யாண வைபோகமே!

"**வா**ருங்கோ! வாருங்கோ!" — சற்றே மழலே கலந்த உச்சரிப்புடன் வரவேற்கிறுர் அந்த அமெரிக்கர். 'வாருங்கோ' என்ருல் **'Welcome to you'** என்று அர்த்தம்" என்று புன்னகையுடன் விளக்குகிறுர். பட்டுஜூர்த்தா, ஜரிகை அங்கவஸ்திரம், நெற்றியில் குங்குமப் பொட்டு, கையில் மல்லிகை வளேயம் சகிதம் பம்பாயிலுள்ள அமெரிக்கத் தூதரகத்துக்கு நம்மை வரவேற்கும் இவர் அந்தத் தூதரகத்தின் உயர் அதிகாரி ஹாரி கேஹில். ஆனுல் இன்று இவருக்குப் புதிதாய் ஒரு செல்லப் பெயர் சூட்டியிருக்கிறுர்கள் — ஹரிஹரன் கேஹில் என்று!

பம்பாயின் பல மாடிக் கட்டடங்களுக்கு நடுவே, கம்பீரமாக வீற்றிருக்கும் 'லிங்கன் ஹவுஸ்' என்ற அமெரிக்க தூதரகத்தின் பச்சைப் பசேல் புல்வெளி. 'உயர்ந்த எண்ணங்கள், நோக்குகள் கொண்டு மனிதா, நீ உயர்வாயாக!' என்று மறைமுகமாகப் பறை சாற்றும் உயர்ந்த கோபுரங்கள். நாம் இருப்பது பம்பாயில் செல்வாக்கு மிகுந்தது என்று சொல்லப்படும் புலாபாய் தேசாய் ரோடு என்பதே மறந்து விடுகிறது. திருப்பதி வெங்கடவனின் ஆலய கோபுரம் இங்கு வந்து அமர்ந்த மாயமென்ன! இந்தி திரைப்படத் தயாரிப்பாளர் பிரகாஷ் மெஹ்ராவின் மேற்பார்வையில் ஆர்ட் டைரக்டர் மன்சூர் அமைத்த 'மாடல்' கோபுரம் என்று பின்னர் விசாரித்து அறிந்து கொள்கிறோம். வரிசை வரிசையாய் அணிவகுத்து நிற்கும் மங்கல விளக்குகள். 'மல்லிகை, வாழை, மாவிலைத் தோரணங்கள்; கணபதியும், மஹாலட்சுமியும் சரஸ்வதியும் பல திசைகளிலும் நம்மை வரவேற்று வாழ்த்துகிறுர்கள்.

'தகதின் ஷோபா' விழாவை ஒட்டித்தான் அமெரிக்க தூதரகத்துக்குள் இப்படி 'மினி' தென்னகம் உருவாகியுள்ளது. இந்தியா

வின் இரண்டாவது தமிழர் திருநகர் என பெயர் பெற்றுள்ள பம்பாயில் தக்ஷிண ஷோபா ஒரு குட்டிக் கல்யாணம். பிறந்த மண்ணின் வாசனையை வாழ வந்த இடத்திலும் பரப்பி, பிற மொழி மக்களுடன் நேசத்தோடும் நட்புறவோடும் வாழும் தமிழர்கள் தமது பண்பாட்டுச் சிறப்பை உலக அரங்கில் பறைசாற்றிக் கொள்ள வாய்ப்பு அளிக்கும் ஒரு சின்னத் திருவிழா.

வேத கோஷத்தின் மங்கல ஒலியும், நாதஸ்வரத்தின் பின்னணி இசையும் ஒன்றோடொன்று கலந்து முழங்க, இதோ வருகிறார் அன்றைய சிறப்பு விருந்தினரான மாநில அமைச்சர் டாக்டர் வி. சுப்ரமண்யம். மராட்டிய மண்ணில் தமிழரின் உயர்வுக்கும் நிர்வாகத் திறமைக்கும் எடுத்துக் காட்டாகத் திகழும் இவரை மேள தாள மரியாதைக ளோடு பூரண கும்பம் தந்து வரவேற்கிறார் ஹாரி கேஹில். அமெரிக்க 'மாதர் சங்க' உறுப்பினர்களும், அமெரிக்க தூதரக உயர் அதிகாரிகளும் தமிழர் திருவிழாவில் பங்கு கொள்ளும் உற்சாகத்தோடு சந்தனம் பூசி, மல்லிகை சூடி பவனி வர, இங்கு வாழும் உயர்மட்டத் தமிழ் அதிகாரிகள், கலைஞர்கள் அவர்களோடு கலந்து பேசி மகிழும் இனிய மாலைப் பொழுதின் ஆரம்பம். கல்யாணம் களை கட்டிவிட்டது!

காக்டெயிலுக்குப் பதிலாகப் பரிமாறப்படும் பானம் 'கோகனட் வாட்டர்'; சீவப்பட்ட இளநீரில் 'ஸ்ட்ராவைப்' போட்டு 'ஸ்டைலாக' உறிஞ்சுகிறார்கள். இளநீருடன் குட்டி குட்டி முறுக்கும் தட்டையும் பரிமாறுகிறார்கள் பட்டணிந்த இளம் பெண்கள்.

**"What an artistic piece of work"** என்று முறுக்கை விள்ள மறுக்கும் ஓர் அமெரிக்கர். முறுக்குத் தயாரித்த தைலா மாமிதான் அன்றைய மாலைப் பொழுதின் கதாநாயகி! அங்கங்கே, 'திஸ் சாம்பார் இஸ் லவ்லி' என்றும், 'டேஸ்ட் திஸ் க்யூட் லிட்டில் திங்' என்றும் வியந்து நிற்கும் அமெரிக்கர்களுக்கு நம் பெருமையை எடுத்து விடும் தமிழரின் தனிப் பெரும் கர்வம்.

சரசரக்கும் காஞ்சீபுரம் பட்டுப் புடைவைகளின் கண்காட்சி ஒருபுறம். பழந்தமிழ்நாட்டின் வேலைப்பாடு மிகுந்த நகைகளின் அணிவரிசை இன்னொரு பக்கம். பட்டுப் புடைவையைத் தொட்டுத் தடவிப் பார்த்து மகிழ்வதோடு நிறுத்திக் கொள்ளாமல், அவற்றின் வரலாற்றை விசாரிக்கும் விருந்தினர்களுக்கு அவை தயாரிக்கப்படும் முறையை விரிவாக விளக்குகிறார் ஓர் அமெரிக்கர். **'Temple City'** ஆன காஞ்சீபுரத்தின் வரலாற்றை நாமே இவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம் போல இருக்கிறது.

**'Your attention please'** என்று நம்மை அழைக்கும் லதா, தமிழர் உணவு வகைகள், அவை பரிமாறப்படும் பாங்கு, தயாராகும் விதம், நமது இசை, நாட்டியக் கலைகளின் ஆழம் — என்று வரிசையாகப் பெருமைகளை அடுக்குகிறார்.

தாள ஜதிகள் ஒலிக்க, பின்னணியிலே இந்துபாலா கணபதியின் இனிய குரலோடு, ஆட்டுவிக்கும் ஆசிரியர் கல்யாணசுந்தரம் பிள்ளையின் ஜதிகள் அழுத்தம் திருத்தமாக ஒலிக்க, ராஜராஜேஸ்வரி கலைப்பள்ளி மாணவியர் பரத நாட்டிய விருந்து அளிக்கின்றனர். செவிக்கும் கண்களுக்கும் விருந்து முடிந்த கையோடு வயிற்றுக்கும் ஈயப்படுகிறது.

கிண்ணங்களில் **South Indian Soup** என்ற ரசம். இட்லியும், தோசையும், அவியலும், ஜாங்கிரியும், பால் பாயசமும் அகில உலக அந்தஸ்தைப் பெற்றுவிட்ட கர்வத்தில், தங்கள் பெயரோடு அதன் ஆங்கில மொழி பெயர்ப்பையும், தாங்கள் பிறந்து வளர்ந்த பூர்வீகத்தையும், 'போர்டு' போட்டுக் கொண்டு அணிவகுத்து நிற்கின்றன. இட்லி, தோசைக்கு, அந்த இடத்திலேயே டெமான்ஸ்ட்ரேஷன் வேறு!

நாம் நிற்பது அமெரிக்க கான்சலேட்டா இல்லை நம் ஊர் கோயில் பிராகாரமா, இது கனவா, நினைவா என்று நம்மைக் கிள்ளிப் பார்த்துக் கொள்ளும்போது வருகிறார் கனவுக் கன்னி! ஆம், இந்தித் திரை உலகிலே, கனவுக் கன்னி என ரசிகர்கள் வியந்து போற்றிய ஹேமமாலினியேதான்! தைலா மாமியின் கதாநாயகி அந்தஸ்து தற்காலிகமாய்ப் பறிபோகிறது!

இந்திய அமெரிக்க நாடுகளின் நல்லுறவுக்கு அமைச்சர் டாக்டர் சுப்ரமண்யம் வாழ்த்துக் கூறுகிறார். தமிழர் இருக்குமிடம் கலைகள் தழைக்குமிடம்; அன்பு வளருமிடம்; நல்லவை நடக்குமிடம் என உபசாரமாக அன்றி, மனதார வாழ்த்துகிறார் ஹாரி கேஹில்.

இந்திரா—சபரிநாதன் தம்பதிகள் 'கேடரிங் கலையிலே' தமக்கென ஒரு இடத்தைப் பம்பாயில் மட்டுமின்றி 'லாஸ் ஏஞ்சல்ஸ்' வரை சென்று கொடி நாட்டியுள்ளனர். (வியாசா இண்டர்நேஷனல் லாஸ் ஏஞ்சல்ஸில் இருக்கும் இவர்களது ரெஸ்டாரண்ட்.) இத்தம்பதிகளே தக்ஷிண் ஷோபா கல்யாணத்தின் 'பெண் வீட்டுச்' சம்பந்திகள். பிள்ளை வீட்டார் யார் தெரியுமா? அமெரிக்க மாதர் சங்கத்தின் உறுப்பினர்கள். விழாவின் தொடக்கத்திலிருந்து இறுதிவரை அனைவரையும் வரவேற்று உபசரித்த இவர்கள் வித்தியாசமான பிள்ளை வீட்டுக்காரர்கள் தான்!

"இது இரு நாடுகளுக்கிடையே நடந்த கல்யாணம்" என்றார் சபரிநாதன். இதன் வெற்றியின் பின்னணியில் இவரது சகோதரர்கள் ராமன், சங்கர், அருமை நண்பர்கள் நீலகண்டன், ரங்கராஜ் என்று நீண்டு கொண்டே போகும் ஒரு பெயர்ப் பட்டியலே உள்ளது.

"'நன்றி! நன்றி!' **In Tamil means Thank you!"** என்று கேஹில் புன்னகையோடு வழியனுப்பும்போது சாவியின் 'வாஷிங்டனில் திருமணம்' தான் ஞாபகம் வருகிறது.

— ஜெயஸ்ரீ ரங்கராஜ்

ஒவ்வொருவர் உடலுக்கும் ஒப்பற்ற பொருத்தம்

# டான்டெக்ஸ்®

ப்ரீஃப்ஸ்

வெஸ்டஸ்

காஷுவெல்ஸ்

சிறுவர்களுக்கான ரகங்கள்



tt தயாரிப்பு

Imageads-2321 Tam

### முன் கதை :

பின்னால் சேக்கிழார் என்று பெரும்புகழ் பெறப்போகும் ராமதேவர் குன்றத்தூரில் வசித்து வருகிறார். அந்தப் பேரறிஞரைத் தமது முதலமைச்சர் ஆக்கிக் கொள்ள விரும்பி அநபாய (இரண்டாம்) குலோத்துங்க சோழன் தமது அரண்மனைப் புலவர் ஒட்டக்கூத்தரையே தூது அனுப்புகிறார்.

அழைப்பை ஏற்று வரும் இராமதேவர் திருநாகேச்சுரம் கோயிலில் ஜோதியைச் சந்திக்கிறார். சிவன் கோயில்களில் மட்டுமே தன் கலையை அரங்கேற்றுகிறவள் ஜோதி. சிவத் தொண்டர்கள் வரலாறு அறிந்து ஆடத் திட்டமிட்டுள்ள ஜோதி, அத்தொண்டர்களின் வரலாற்றை ராமதேவர் கவிதைகளாக எழுத வேண்டும், அவற்றை இசையமைத்துத் தான் ஆட வேண்டும் என்று ஆசைப்பட்டு அந்த ஆர்வத்தை அவரிடமும் தூண்டிவிட, அடிக்கடி அவரைச் சந்தித்து வருகிறாள்.

ராமதேவர் மாண்புமிகு முதலமைச்சர் ஆகிறார். அவர் செல்வாக்கு மக்களிடமும் மன்னரிடமும் வளர்ந்து கொண்டே போகிறது. இது வாணிதாசரான ஒட்டக்கூத்தருக்கே கவலையையும் இலேசான பொறாமையையும்கூட ஏற்படுத்துகிறது.

ஜோதியுடன் விகாரத் தோற்றமளிக்கும் ஒரு காபாலிகன் அடிக்கடி காணப்படுகிறான். காபாலிகரன் தன்னைப் பாதுகாத்து வரும் பரமசிவன் மட்டுமல்ல; தன் காதலனும்கூட என்று ஜோதி கூறும்போது ராமதேவர் அதை நம்ப முடியாமல் திகைக்கிறார். அவரைத் திருத்தொண்டர் புராணம் எழுத வைப்பதில் அந்தக் காபாலிகனுக்கும் ஆர்வம் இருக்கிறது.

ஏரி உடைப்பும் வெள்ளமும் பயிர்ச் சேதமும் ஏற்பட்டு நாட்டில் துன்பம் சூழ்கிறது. ஏரி உடைப்பு, தன் மீது பொறாமை கொண்ட சிலர் வேண்டுமென்றே செய்த காரியம் என்று சந்தேகிக்கும் ராமதேவர், மன்னர் அனுமதியோடு அமைச்சரவையில் மாற்றங்களைச் செய்கிறார். வெகு காலமாக நடக்காதிருந்த உள்ளாட்சித் தேர்தல்களை நடத்தி, நல்லாட்சி மலரச் செய்கிறார்.

ஜோதிக்கும் ராமதேவருக்கும் இடையில் ஏற்பட்டுள்ள நெருக்கம் பற்றிப் பலர் பலவிதமாகப் பேசியபோதிலும் ராமதேவர் அதையெல்லாம் லட்சியம் செய்யவில்லை. ஆனால் ஜோதியை மன்னர் குலோத்துங்கனே காதலிப்பதாக ஒட்டக்கூத்தர் கூறக் கேட்டு மேலும் திகைக்கிறார்.

தில்லைப் பேரம்பலத்துக்குப் பொன்வேயும் திருப்பணியை மன்னர் ஆணையிட ஏற்று, தம்பி பாலறாவாயன் துணையுடன் வெற்றிகரமாக நிறைவேற்றி வைக்கிறார் ராமதேவர். நிறைவு விழாவில் ஜோதி நடனமாட வேண்டும் என்று மன்னரும் முதலமைச்சரும் கேட்டுக் கொள்ள, ஜோதி ஒரு நிபந்தனையுடன் சம்மதிக்கிறாள்: அதாவது, தொண்டர் புராணத்தையே அன்று சேக்கிழார் பாட ஆரம்பிக்காவிட்டாலும் ஒரு தோத்திரப் பாடலையாவது இயற்றி ஆரம்பம் காண வேண்டும். அடுத்து மானுடப் பயணையும் பாட வேண்டும். ராமதேவரும் இதற்கு ஒப்புக் கொள்கிறார் ஒரு நிபந்தனையுடன்: அதாவது, அவருக்கு ஈசனே அல்லது அவன் மூலம் வேறு யாரோ தொடங்கப் போகும் மாக்கதைக்கு அடியெடுத்துத் தரவேண்டும். அசரீரி போல் அது ஒலிக்க வேண்டும்!

பொன்வேய்ந்த திருப்பணி நிறைவு விழா கோலாகலமாக ஆரம்பித்தபோதிலும் வைணவர்கள் காட்டிய எதிர்ப்பினால் குழப்பத்தில் முடிந்துவிடாமல் காக்கிறார் முதலமைச்சர். ஜோதியின் நடனத்தைக் காண, பெருங்கூட்டம் காத்திருக்கிறது. ஜோதியோ ராமதேவரின் கடவுள் வாழ்த்துப் பாடலுக்காகக் காத்திருக்கிறாள். ராமதேவரோ தியானத்தில் ஆழ்ந்திருக்கிறார்.....!

## சருக்கம் — 17

### ஜோதி நடனம்!

விளக்குகள் ஒளிக்கரம் கூப்ப, இராக்கன்னி நிலா நடம்புரிய வருகை தருகிறாள்.

திருமால் கோயிலின் திருக்கதவங்கள் சாத்தப்பட்டதையடுத்து, வைணவப் பெருமக்கள் வடவாக்கினி நெருப்பாக மாறிக் கொண்டிருக்கிறார்கள். செருக்கான அநபாயனின் சிரத்தையே சீவிவிட வேண்டும் என்பது போன்ற கொதிப்பு. ஆனால் இயலாது; கூடாது. நாளை திருவரங்கத்து அத்துணை வாசல்களும் அடைபட்டு விடும்! இதற்கான மூல காரணத்தை முறியடிக்க வேண்டும்! யார் அந்த மூல காரணம்?

தில்லையம்பலவன் கோயிலை நாடி மக்கள் திரண்ட வண்ணமிருந்தனர். ஜோதியின் நடன நிகழ்ச்சியாயிற்றே! ஜோதி நடம்புரிந்தால் அந்த ஜோதீஸ்வரனே மயங்கி, கயிலையை விட்டிறங்கி ஓடி வருவானுமே!

காலையில் நடைபெற்ற கசப்பான நிகழ்ச்சி குறித்து இன்னமும் சேக்கிழார் இதயத்தைப் பிழிந்து கொண்டிருந்தார். சைவமும் வைணவமும் தமிழின் இரு கண்களல்லவா?

நாயன்மார்களும் ஆழ்வார்களும் பக்தியின் நாகரிகத்தைப் பறைசாற்றியவர்கள் அல்லவா? ஏனிந்த போக்கு? தேவைதானா?

சித்திரக்கூடத்தில் நாட்டிய அரங்கத்தை நிர்மாணித்திருந்தார்கள். அதாவது நடராசப் பெருமானின் சந்நிதிக்கு நேராக!

தூணுக்குத் தூண் தீப்பந்தங்கள் ஒளிவீச

# மாண்புமிகு முதலமைச்சர்




லாடின.

நடன அரங்கத்து இருபுறமும் அகண்டா காரமான அகல் விளக்குகள்.

* ஒருமுக எழினியும் அதற்குப் பின்னே இருமுக எழினியும் அரங்கத்தில் கட்டியிருந்தார்கள்.

அரச குடும்பம் வருகை தந்துவிட்டது.

முன்வரிசையில் சோழமாமன்னன் அநபாய குலோத்துங்கன்; அரச மாதேவிகள்; மகன் ராசராசன்.

பின்னே அரசியல் அதிகாரிகள்.

மாண்புமிகு முதலமைச்சர் சேக்கிழார், நடராசப் பெருமான் சந்நிதியில் ஆழ்ந்த தியானத்தில் மூழ்கி இருக்கிறார். நாட்டியமே அவர் மூலமாகத்தானே தொடங்க இருக்கிறது?

அநபாயன் குலோத்துங்க சோழமாமன்னன் என்ன நினைத்துக் கொண்டானோ... தியானத்திலிருந்த சேக்கிழாருக்கு வியர்த்துக் கொட்டுவதைக் கவனித்துக் கவரி வீசத் தொடங்கினான். அதுவரை அப்படிச் செய்ய வேண்டும் என்று தோன்றாத அதிகாரிகள் உடன் ஆட்களை ஏற்பாடு செய்ய, எரிக் கண்களால் அதிகாரிகளை எரித்துச் சமிக்ஞையால் தூரச் செல்லுமாறு ஆணையிடுகிறான். இக்காட்சியைக் கண்ட மக்கள், 'ஆ! இவரன்றோ மாமன்னர்!' என்று புளகிக்கின்றனர்.

குறிப்பிட்ட நேரம் வரை முழங்கிய மங்கல வாத்தியங்கள், நாட்டியத் தொடக்கத்துக்கான குறிப்பிட்ட நேரம் வந்ததும் ஒரு சேர முத்தாய்ப்புடன் அடங்கின.

திருத்தொண்டர் புராணத்தையே அன்று தொடங்காவிட்டாலும்வாழ்த்தைப்பாடிவிட்டால், பின்னர் வரலாற்றைப் பாட வேண்டியதுதானே?

எங்கும் ஒரே அமைதி.

ஜல்......

ஜோதியின் காற்சதங்கையா? அந்த ஜோதி வாணனின் காற்சதங்கைப் பிரமையா?

பக்கவாட்டில் நின்றிருந்த மக்கள் அந்த அமைதியில் காதோடு காது வைத்த மாதிரி ஏதோ மெல்லப். பேசிக் கொள்கிறார்கள். ஏனைய ஆயிரமாயிரம் கண்கள் அரங்கத்தையே மொய்க்கின்றன. ஏன் தொடங்கவில்லை?

வாழ்த்துப் பாடல் ரகசியம் ஒரு சிலரேயன்றி வேறு எவர் அறிவார்?

சேக்கிழார் தியானமே அரசியல் அதிகாரிகளுக்குப் புரியாத புதிராக இருந்தது. அதைவிடப் புதிர்.... அநபாயச் சோழன் கவரி வீசுவது......!

'ஓம், ஓம், ஓம்.....

சேக்கிழார் நாவிலிருந்து எழுந்த பிரணவ மந்திரம்.

ஓம், ஓம், ஓம்.....

அந்த ஓங்கார நாதம் அவையைச் சிலிர்க்க வைக்கிறது. ஏனிந்த ஓங்காரம்?

ஒருவன் மெல்லச் சொன்னான். "இது ஒரு தெய்வீக ஆரம்பம்."

இன்னொருவன்: "சோழமாமன்னரின்

---

* நேரே தொங்கவிடும் ஓவியத் திரை: பக்கவாட்டில் தள்ளும் ஓவியத் திரை — சிலப்பதிகாரம்.



## அருள்வாக்கு

ஆத்மா இல்லாமல் எந்த இயக்கமும் இல்லை. ஆனாலும் ஆத்மா எதனோடும் நேராக ஸம்பந்தப்படவில்லை. இதைத்தான் மாயை என்பது. எத்தனை யோசித்தாலும் இது புரிபடாது. எதிலும் ஸம்பந்தப்படாவிட்டாலும் ஸம்பந்தப்பட்டாற்போல மாயா விலாஸத்தால் ஆத்மா இருந்து கொண்டுதான் இத்தனை கூத்தையும் நடத்துகிறது!

இதை ஏதோ கொஞ்சம் புரிய வைப்பதற்காக ஒரிரு த்ருஷ்டாந்தம் சொல்வார்கள். அதாவது, ஸூர்யன் இருப்பதால்தான் இத்தனை செடி கொடிகளும், வ்ருக்ஷங்களும் வளர்ந்து கொண்டும், புஷ்பித்துக் கொண்டும், பழுத்துக் கொண்டும் இருப்பது. ஸூர்யன் இல்லாவிட்டால் இது எதுவுமே நடக்காது. அதற்காக, ஸூர்யனே தான் திட்டம் போட்டு இவற்றை எல்லாம் உண்டாக்கி நடத்துவதாகச் சொல்ல முடியுமா?

வெளிச்சம் இல்லாமல் ஒரே இருட்டாயிருந்தால் எந்தக் கார்யமும் செய்ய முடிவதில்லை. விளக்கு ஏற்றி வைக்கிறோம். அதன் வெளிச்சத்தில் ஒருவன் புராணம் படிக்கிறான். இன்னொருத்தன் ஏதோ மனஸைக் கெடுக்கும் நாவல் படிக்கிறான். வெளிச்சத்தின் துணையினால் பல பேர் பலவிதமாக நல்லதும் கெட்டதுமான கார்யங்களைச் செய்கிறார்கள். அதனால் இத்தனைக்கும் விளக்குதான் ஜவாப்தாரி என்று சொல்வதா? ஆனாலும் அந்த தீபம் இல்லாவிட்டால் இந்தக் கார்யம் எதுவும் நடக்க முடியாது. இப்படித் தா... ...ரவின் நேர் தூண்டுதல் இல்லாமல்... ...ாந்நித்ய விசேஷத்தால் ...லை செய்வதும், சரீரத்தை ...ும் என்று உபமானம்

காஞ்சி காமகோடி
...ஜயேந்திர சரஸ்வதி
...ய சுவாமிகள்.

இந்தத் திருப்பணி தமிழகம் முழுவதும் பரவும்!''

ஓம்கார ஒலிக்கும் இடையே பேசிய இரகசியப் பேச்சுதான்.

பக்கத்திலிருந்தவன் கேட்டான்: ''தமிழகம் முழுதும் மட்டுந்தானா?''

பின்னே இருந்த ஒரு சைவப் பெரியவர், சிவனைப் போல் ஜடா முடி தரித்த பெரியவர், பக்தி உந்திய பரவசத்தால், தம்மை மறந்து, அமைதியை மறந்து, 'தமிழகம் மட்டுந்தானா?' என்று இரகசியமாகக் கேட்டவனைத் தொடர்ந்து உரத்த குரலில், ''உலகெலாம்!'' என்று கூவிவிட....

அவையில் ஒரு பரபரப்பு...

'உலகெலாம், உலகெலாம்.....!'

ஓம்கார ஒலி நின்றது.

எவன் கொடுத்த குரல் இது? எம்பிரான் குரலோ? எந்தை குரலோ?

சேக்கிழார் நெற்றியில் செம்மையொளி பனிச்சிட, மேனி சிலிர்க்க, மெய்யெல்லாம் உருகப் பாடுகிறார். பாடிக்கொண்டே, அன்று ஜோதி அன்புடன் வேண்டித் தந்த வெற்றோலைக் கட்டொன்றில் எழுத்தாணி கொண்டு எழுதவும் செய்கிறார்:

உலகெலாம் உணர்ந்து
    ஓதற்கு அரியவன்
நிலவு லாவிய
    நீர்மலி வேணியன்
அலகில் ஜோதியன்
    அம்பலத் தாடுவான்
மலர் சிலம்படி
    வாழ்த்தி வணங்குவாம்!

பாடி முடிக்கிறார். எங்கும் 'நமசிவாயம் தான் வாழ்க! நடராசர் தான் வாழ்க!' என்கிற கூக்குரல்கள்.

''மானுடப் பிறவிப் பயன் சுவாமீ!''

அரங்கத்துள்ளிருந்து இந்தப் பலாச்சுளைக் குரல் கேட்கிறதா? அந்தராத்மாவிலிருந்துதான் இந்த நிலாச்சுளைக் குரல் ஒலிக்கிறதா?

அரங்கத்துள் சேக்கிழார் பாடிய வாழ்த்தை, வல்லரசியும் ஓர் ஓலையில் எழுதிக் கொள்கிறாள்.

மானுடப் பிறவிப் பயன்!

காலையில் வைணவர்கள் செய்த வம்பு சேக்கிழார் நினைவில் தும்பாய் ஓட்டுகிறது.

பாடுகிறார் பைந்தமிழமைச்சர் சேக்கிழார்:

ஊன் அடைந்த
    உடம்பின் பிறவியே!
தான் அடைந்த
    உறுதியைச் சாருமால்
தேன் அடைந்த
    மலர்ப்பொழில் தில்லையுள்
மா நடம்செய்
    வரதர்பொற் றாள்தொழ!

# It's a small world.

And Air-India makes sure it stays that way!

Air-India has an extensive network that spans over 40 cities across five continents. Every important city of business or pleasure is within a flight or two of each other on a modern fleet of wide-bodied 747 and A300 aircraft.

Aboard, the fabled Indian hospitality makes the going great. Exotic interiors, gracious sari-clad hostesses who welcome you with the 'namaskaar'—a traditional Indian greeting. A choice of exclusive Continental and Indian cuisine, inflight movies and music.

The Air-India network...unrivalled!



**AIR-INDIA**

The airline that treats you like a Maharajah

AIR-1972

வரதா, வரதர், வரதர்....
இது என்ன சொற்பிரயோகம்?
முன்னே ஜோதி.....
பின்னே வரதர்......
மத்தளம் ஆவேசமாக முழங்குகிறது: தொடர்ந்து சல்லரி....
யாழ் மேல் நிலைநரம்பில் சந்நதமிடுகிறது.
தளங்கு தகதிமி தத்.... தளாங்கு தகதிமி தத்.... தளங்குதகதிமி —
''உலகெலாம்....''
ஜோதியே முதலில் பாடுகிறாள்.
உலகைக் கரம்கூப்பிய பாவனையுடன், தலையசைய அபிநயித்துப் பாடுகிறாள்.

திரை விலகுகிறது.
எங்கும் ஒரே கரவொலிகள்.
மாண்புமிகு முதலமைச்சர் செந்தமிழ் சேக்கிழார் எழுந்து வந்து முன்வரிசையில் அவருக்கென்று போடப் பெற்ற பொன்னாசனத்தில் அமர்ந்து கொள்கிறார். அதற்கு முன்னமையே, கவரி வீசிய அநபாயன், சேக்கிழார் பார்த்துவிடக்கூடாதே என்று அலமரல் கண்டு வந்தமர்ந்து கொண்டார்.
பொன்னாசனம் முத்தமிழ் முதலமைச்சர் சேக்கிழாருக்கு மட்டுமே என்பதே அவர் அறியாத ஒன்றாயிற்றே!

'உலகெலாம்....'
'ஜல், ஜல், ஜல்' என்று மூன்றடி முன்னே எடுத்துவைத்து வந்த ஜோதி உலகை வணங்குகிறாளா? சஞ்சீவித் தமிழாய் வந்தமர்ந்த சேக்கிழாரை வணங்குகிறாளா?
''உலகெலாம்....''
தநிமிதா....
*மபஸ்நீ....
பலமுறை 'உலகெலாம் உலகெலாம் என்று பாடி, பல்வேறு கோணங்களில் அபிநயம் செய்கிறாள். அலகில் ஜோதி அரங்கத்தில் ஆடுவாள்....
மத்தளமும் முழவும் குழலும் யாழும் சல்லரியும்....
ஜோதியின் மெய்ப்பாடுகளுக்குச் ஜோடனை செய்கின்றன.
இப்போது வல்லரசியைப் பாடுமாறு சமிக்ஞை காட்டிய ஜோதி, ஒரு பெரிய முத்தாய்ப்புக்கான சமிக்ஞையை வாத்தியக்காரர்களுக்குக் காட்ட....
அக்கணமே அரங்கம் அமர்க்களப்படுகிறது.
உலகெலாம் என்பதை விளக்க.....
ஊர்த்துவ தாண்டவம் போல வானுயரக் காலையுயர்த்தியும் துள்ளிக் குதித்தும் அண்ட சராசரம் அதிரும்படியாடுகிறாள்....
சேக்கிழார் மெய்ம்மறந்து, 'இவளுக்கு ஆவேசம் கண்டுவிட்டதோ' என அதிர்ந்து ''ஜோதி, ஜோதி'' என விளிக்கிறார்....
சோழமாமன்னன் குலோத்துங்கன் கண்களில் கங்கை புரளுகிறது. இமயத்திலிருந்து இறங்கும் நீரல்லவா அது!
தேவியர் இருவர் தெய்வச் சிலிர்ப்பு கண்டனர்.
மக்கள் இதயங்களெல்லாம் அரங்கமாகின்றன.
ஜோதிதான் ஆடுகிறாளா? அலகில் ஜோதி அம்பலத்து ஆடுவானான நடராசமூர்த்திதான் மோகினி அவதாரம் பூண்டு ஆடுகிறானா? இல்லை அலகில் ஜோதியான சிவகாம சுந்தரிதான் ஆடுகிறாளா?
முழுப் பாடலும் ஒலிக்கத் தொடங்குகிறது.
ஒவ்வொரு சொல்லுக்கும் ஓராயிரம் உயிர்த் துடிப்புகளுடன் அபிநயிக்கிறாள், ஜோதி.

அலகில் ஜோதி....
தன்னை அலகில் ஜோதியாகவும், அலகில் ஜோதியில் தானாகவும் கற்பித்துக் கொண்டு, அதனை மெய்ப்பித்து ஆடிய மெய்ப்பாடுகள்.....
காரணமறிந்த தோரணங்களாய் அவள் தொட்டுத் தொட்டு மெய்ப்பிக்கும் கரணங்கள்.....
ஆ! அமைதியே பெருமூச்சு விடுகிறது. இறுதியில்....
மலர்ச் சிலம்படி வாழ்த்தி வணங்குவாம்!
அந்த மலர்ச் சிலம்படியை எப்படியெல்லாம் வாழ்த்தி வணங்குகிறாள்!
நடராசப் பெருமானின் சிலம்படியை வாழ்த்தி வணங்குகிறாளா?
— சேக்கிழார் மலர்ச் சிலம்படியை வாழ்த்தி வணங்குகிறாளா?
நாடக நாயகனான குலோத்துங்க சோழனுடைய மலர்ச்சிலம்படியை வாழ்த்தி வணங்குகிறாளா?
தனது சிலம்பையும் சேர்த்து வாழ்த்தினாரோ சேக்கிழார்?
பேதமை நெஞ்சு அபிநயத்தால் பெருமூச்சு விடுகிறது....
வாழ்த்துப் பாடலை முடித்து மானுடப் பயனைத் தனது தேனுடம்பில் புகுத்தி ஆடத் தொடங்குகிறாள்.
அவளது தேனுடம்பில் —
ஊன் அடைந்ததோ?
உடம்பின் பிறவியே தானடைந்ததோ?
தில்லையில்தேனடைந்தமலர்ப்பொழிலில் மாநடஞ் செய்யும் நடராசனை விட்டு....
வரதர் பொற்றாள் எங்கிருந்து வந்தது? வரதர் என்கிற சொல் எங்கிருந்து வந்தது? ஏனிந்தச் சொல்?
நாட்டியத்தில் நயமாகக் கேட்கிறாள். அபிநயத்தில் அலசுகிறாள்.
வரதர், வரதர், வரதர்.....
இச்சமயத்தில்தான்.....
எங்கோ ஒருமூலையில்நின்றிருந்தஒருவன் இடுப்பிலிருந்த குறுவாளை எடுத்துக் குறி பார்க்கிறான்.
யாருக்கு?

(தொடரும்)

* 'ஸ'வுக்கு மேல் புள்ளி வைத்தால் மேல் சட்சமம். ஓரலகு உழை (சுத்தமத்திமம்) ஓரலகுதாரம் (கைசிகி நிஷாதம்)




உங்கள் குழந்தைக்கு போலியோ சொட்டு மருந்து அளித்து இளம்பிள்ளை வாத நோயிலிருந்து பாதுகாப்பு அளித்திடுங்கள்

எல்லா வார நாட்களிலும்
மாலை : 3 முதல் 6 வரை
ஞாயிறு : விடுமுறை

மருத்துவரின் மேற்பார்வையில் போலியோ சொட்டு மருந்து
டிரிபிளாண்டிஜென் மற்றும் மீஸில்ஸ் வாக்ஸின்
அளிக்கப்படும் இடம் :

**தமிழ்நாடு தாதா பார்மஸூடிகல்ஸ் லிமிடெட்**

10, பத்மாவதியார் சாலை, ஜெய்பூர் நகர், (ஆயிரம் விளக்கு மசூதி அருகில்)
சென்னை-600 086. தொலைபேசி : 470656 479603

# பிள்ளையாரின்

ஆகஸ்டை செப்டம்பர் தழுவ ஓடோடி வரும் காலத்தில், மழையும் வெயிலும் மாறி மாறிக்கொஞ்சும்பருவத்தில்,படு'ரொமாண்டிக்'காகப் பிள்ளையார் பிரசன்னமாவார். இந்தப் பத்து நாள் விழாதான் மகாராஷ்ட்ராவின் மாபெரும் விழா.

போலீஸ்காரப் பிள்ளையார், ஜவான் பிள்ளையார், விவசாயிப் பிள்ளையார், டிஸ்கோ பிள்ளையார், இழை உருண்டையாகச் சுற்றும் உலகம் போன்ற அமைப்பின் மேல் காட்சி தரும் பஞ்சமுகப் பிள்ளையார், லக்ஷ்மி, சரஸ்வதி, ராமர், சீதை, அனுமன் என்று பலரும் பின்னணி இசைக்கேற்ப வாயசைத்துப் பாட, நடுவில் அமர்ந்து கோஷ்டி கானத்தை ரசிக்கும் ரசிகப் பிள்ளையார், கிருஷ்ணவதாரத்துக் கோபிகைகளுடன் நர்த்தனமாடிக் கொண்டே வட்டமடிக்கும் நர்த்தனப் பிள்ளையார், ரேகா, ஸ்ரீதேவி, பூனம் தில்லான், ஜெயப்பிரதா இவர்களுடன் அளவளாவும் ஹீரோப் பிள்ளையார்... அப்பப்பா... அகஸ்தியப் பிள்ளையாரிலிருந்து அமிதாப்பச்சன் பிள்ளையார் வரை பல ரூபங்கள்... பல வண்ணங்கள்... நல்லவேளை 'யானை முகத்தார்' என்ற 'ஐடெண்டிடி'யை வைத்துக் கொண்டிருந்தாரோ, பிழைத்தாரோ! இல்லாவிட்டால் பிள்ளையார் என்பதற்கு என்ன கியாரண்டி?

## தமிழர் கணபதி

இதில் பெரும்பாலும், வீட்டில் வைத்துப் பூஜை செய்பவர்கள் நாடுவது அகஸ்தியப் பிள்ளையார்களையே! அதன் விலையே கிட்டத்தட்ட இருபது இருபத்தைந்து ரூபாய் வரை போகும். பல சொஸைட்டிகளில் செம்பூர், காட்கோபர், முலுண்டு, அந்தேரி, மாதுங்கா, டோம்பிவிலி போன்ற பகுதிகளில் சொஸைட்டிப் பிள்ளையார் கொலு வீற்றிருப்பார் (கலெக்ஷனைப் பொறுத்த சைஸில்). மாதுங்கா, செம்பூர் பகுதிகளில் 'சர்வஜனிக்' பிள்ளையார்கள் சர்வ சாதாரணம். மாதுங்கா ஸ்டேஷனுக்கருகில் இருக்கும் வரதாபாயின் பிள்ளையார் பிரசித்தம். 5000, 10,000 ரேட்டுகளில் பிரஸ்டீஜ் பிள்ளையார்கள் ரகம் இங்கேதான். லால்பாக்கின் மராத்திப் பிள்ளையார்களுக்கு எந்தவிதத்திலும் குறையாத விஸ்வரூபப் பிள்ளையார்கள், விழா நடக்கும் பத்து நாட்களும் சர்வாலங்காரப் பூஷிதர்களாய் — போலீஸ்காரர்கள் கும்பலைத் தடியால் கட்டுப்படுத்துமளவுக்கு 'பாப்புலரான'வர்களாய்த் திகழ்வார்கள்.

பெரிய பிள்ளையார்கள் முன்னால், உண்டியல், பழங்கள் பிரசாதங்கள் வகையறுக்களுடன், மக்கள் அர்ச்சிக்கும் குங்குமத்தையெல்லாம் அபிஷேகித்துக் கொண்டு ஒரு குட்டிப் பிள்ளையார் அமர்ந்திருப்பார். இந்தச் 'சோட்டு'வுக்குத்தான் இருவேளை ஆரத்தி, பூஜை, பஜன்கள் எல்லாம்! 'மோட்டு' பெரும்பாலும் "ஷோ"வுக்குத்தான். சின்னவரிடம்தான் சர்வ ஜாக்கிரதையாகப் பய பக்தியுடன் நடந்து கொள்ள வேண்டும். சிறு கீறல் விழுந்தால் கூட 'அசுபம்' என்று பதறுவார்கள். கடைசி நாளன்று சத்ய நாராயண பூஜை பல இடங்களில் நடக்கும். மற்றபடி நாள் முழுவதும் "யாரு வச்ச மய்யி" என்று சந்தேகப்பட்டும் "ஸாகர் ஜைஸே ஆங்கோவாலி"க்களைப் பற்றி ஆச்சரியப்பட்டுக் கொண்டும்தான் கணபதி அமர்ந்திருப்பார்.

## ஆனை முகத்தானை...

கணபதி ஸீஸனில் யானை வளர்ப்பவர்களுக்கு (என்ன விழிக்கிறீர்கள்? இங்கே நிறைய யானை உண்டு; மார்க்கெட் நெரிசலில்



# 'ஃபாஷன் பரேட்!'

நமக்குப் போட்டி போட்டுக் கொண்டு நிம்மதியாக நடந்து கொண்டிருக்கும்) நல்ல பிஸினஸ். ஒவ்வொரு சொஸைட்டி, ஒவ்வொரு பில்டிங்காக யாரோ வந்து 'கணபதி பப்பா' பேரில் காசு (+ பழம் + தேங்காய் +பிரசாதம்) வசூலிக்கும். இருபத்தைந்து பைசாவுக்குக் குறைந்து போடுபவர்களுக்கு ஆசீர்வாதம் குறைச்சல்.

## 'பைசா அவுர் பிரசாத்'

சர்வஜனிக் கணபதிகள் இருக்குமிடங்களில் நாள் முழுவதும் ஏதாவது பிரசாதம் விநியோகிக்கப்பட வேண்டும். மதிய வேளைகளில் பல இடங்களில் சாதாரணமாக ஒரு சின்ன வாண்டுதான் பெரிய மனுஷத் தோரணையில் பிரசாதம் விநியோகித்துக் கொண்டிருக்கும். சும்மா சும்மா பிள்ளையார் பார்க்கிறேன் என்று பிரசாதத்துக்கு வரும் கூட்டத்துக்கு எண்ணி ஒரு வேர்க்கடலை, ஒரு சர்க்கரைக் கட்டிதான் கையில் வைக்கும். யாராவது உண்டியலில் சில்லறை போட்டு விட்டுக் கைநீட்டினால் பிரசாதம் இருமடங்காகும் — அதாவது 2 கடலை + 2 சர்க்கரைக் கட்டி! பிரத்தியேகமான தினங்களில் சில இடங்களில் பேடா, வடை, சர்க்கரைப் பொங்கல், பஞ்சாமிர்தம், பாலில் மிதக்கும் வாழைப்பழம் எல்லாமுண்டு. அந்தந்த 'கணபதி'யின் 'ஸ்டேட்டஸை'ப் பொறுத்துத்தான் எல்லாம்! பிரசாதம் முன்னே பின்னே இருந்தாலும், சர்வஜனிக் பிள்ளையார்களுக்கு "நைட் ஷோ" பார்க்கும் அதிர்ஷ்டமடிக்கும். குறைந்தபட்சம் இரண்டு திரைப்படங்களாவது உண்டு!



* கிருஷ்ண ஜயந்தி — உறியடி.



## அமெச்சூர் ஸ்பெஷல்

நம் வீட்டுக்குள்ளேயும், அக்கம்பக்கத்திலுள்ள லதா மங்கேஷ்கர், பத்மா சுப்ரமணியம், சிவாஜி, அமிதாப், ஸ்ரீதேவி, ரேகாக்களுக்கும் இது விசேஷ சீசன். பல சொஸைட்டிகள், ஏதேனுமொரு நாள், மேடை போட்டு, லவுட்ஸ்பீக்கரெல்லாம் அமைத்து, இவர்களை ஆட, பாட, பேச, நடிக்க வைத்து வேடிக்கை



பார்ப்பார்கள்! கணபதியும், 'சிவனே' என்று எல்லாவற்றையும் சகித்துக் கொண்டிருப்பார்!

### குட்டி போடும் பிள்ளையார்

விசர்ஜனத்தன்று பிள்ளையாரை அருகிலுள்ள குளங்களுக்கோ, கடற்கரைக்கோ எடுத்துச் செல்வார்கள். (இங்கேதான் வீடுகளில் கிணறு கிடையாதே!) பாண்டு வாத்தியங்களுடன், 'பியார்தே பியார்தே' வை ரசித்துக் கொண்டு, லாரிகளிலும், தள்ளு வண்டிகளிலும் ஊர்வலமாக எக்கச்சக்கப் பிள்ளையார்கள் செல்வார்கள். அத்தனை தூரம் செலவழிக்க முடியாத தமிழர்கள் சிலர், ஒரு நாள் பூஜைக்குப் பின், தத்தம் வீட்டுப் பிள்ளையார்களைத் தங்கள் தெருவிலிருக்கும்பிரும்மாண்ட பிள்ளையார்களிடம் கொண்டு போய் விட்டுவிடுவார்கள். சில மீடியம் சைஸ் பிள்ளையார்களும், ஐந்தாவது அல்லது ஏழாவது தினங்களுக்குப் பின் இப்படிப் பெரியவரிடம் அடைக்கலம் புகுவர். இதனால் விஸ்வரூபருக்கு எக்கச்சக்க சிஷ்யர்கள் தோன்றுவர். தினமும் கணபதி பார்க்க வரும் வாண்டுகள் இதைப் பார்த்து விட்டுத் தங்கள் தங்கள் அன்னையரிடம் வழக்கமாக இப்படித்தான் வினவுவர்: "அம்மாம்மா! பிள்ளையார் குட்டி போடுவாரா?"

### முக்கலுக்கு முந்நூறு

குளத்துக்குப் போனாலும், விக்கிரகத்தைப் போட்டோம், வந்தோமென்றிருக்க முடியாது. பூஜைக்குரிய விக்கிரகங்களை அலுங்காமல், நலுங்காமல் புறமுதுகிடாமல் நடுக் குளத்துக்கு எடுத்துச் சென்று, இரண்டு முறை முக்கி எடுத்து, மூன்றாவது முறை போட்டுவிட்டு, ஒரு பிடி குளத்து மண்ணை எடுத்து வந்து சம்பந்தப்பட்டவர்களிடம் கொடுத்துவிட்டு, பவ்யமாகக் கைநீட்ட வென்றே சில நீச்சல் வீரர்கள் தயாராய் நிற்பார்கள். பிள்ளையாரின் அலங்காரம், சைஸ், இவற்றைப் பொறுத்து, நீட்டிய கரத்தில் ரூபாய் நோட்டுக்களைத் திணிக்க வேண்டும். ஒரு சராசரி 'முக்கல்' வீரருக்கு ஒரு விசர்ஜன நாளையின் சராசரி வருமானம் ரூ. 300/— ஊறும்... 'போகும்' காலத்திலும் சிலருக்கு 'வரவு' வைக்கிறார் பிள்ளையார்.

பல விதங்களிலும் 'வரவு' வைப்பதாலோ என்னவோ, பிள்ளையாரின் 'வரவை' ஆவலுடன் எதிர்நோக்கியவாறே பிரியாவிடை கொடுக்கின்றனர் மக்கள். "கண்பதி பப்பா மோரியா, புட்சா வர்ஷா லோக்கர் யா" என்று வழியனுப்புவது மராத்தியக் குரல்கள் மட்டுமா? தமிழ்க் குரல்களும் அதில் கலந்து ஒலிக்கும்!

### ரக்ஷா—பந்தன்

சகோதரன் — சகோதரி பந்தத்தை உறுதிப்

* தீபாவளியன்று....





# The King of Sweets turns milk into a handful of fun!




# CARAMILK



Rich creamy milk and golden caramel ... Parry's puts them together perfectly in this delicious, soft milk toffee!

Parry's exciting range:

Caramilk • Chocolate Eclairs
Coconut Bounty • Try-Me
Choclairs • Golden Bon Bon
Menthox • Lollipops



**The reigning name in sweets for over 70 years**

படுத்தும் பாசமலர்த் திருநாள் இது: உடன் பிறப்பின் நல்வாழ்வுக்குப் பிரார்த்தித்து சகோதரி, சகோதரனின் வலது மணிக்கட்டில் 'ராக்கி' கட்டுகிருள். அவனும் மகிழ்வுடன் அவளுக்கு அன்புப்பரிசளித்து, அவளை என்றும் மறவாது, காத்து ரட்சிப்பதாக உறுதி பூணுகிருன். இந்த வைபவத்தைத்தான் வட இந்தியர்கள் 'ரக்ஷா—பந்தன்' என்று கொண்டாடுகிருர்கள்.

இதன் முக்கியத்துவம் என்னவென்ருல், உடன் பிறவாதவர்களையும் உடன் பிறந்தவர்களாய்ப் பாவித்து, அவர்கள் நல்வாழ்வுக்குப் பிரார்த்தித்துக் கொண்டு, அவர்களுக்கும் இந்த 'ராக்கி' கட்டலாம். இப்படிப் பாவிக்கப்பட்ட சகோதரத்துவத்துக்குத்தான் பவித்ரம் அதிகம் என்று கூறப்படுவதுண்டு. இக்காரணங்களாலேயே தமிழர்களும் இப்பண்டிகையில் கலந்து கொள்ள வாய்ப்பேற்படுகிறது.

முலுண்டு, பாண்டுப் பகுதிகளில் பல தமிழர்கள் விதவிதமான 'ராக்கி'களை விற்பதைக் காணலாம். மலிவு விலை ராக்கிகள் சாதாரணர்களுக்கு; சந்தனத் தகடுகளில் டிஸைன் செய்யப்பட்ட ராக்கிகள் நடுத்தர வர்க்கத்துக்கு; வெள்ளித் தகடுகளிலும், தங்க முலாம் பூசியுமுள்ள ர்ராக்கிகள் 'மவுசு' உள்ளவர்களுக்கு. ஒரு ரூபாயிலிருந்து ஓராயிரம் ரூபாய் வரை அவரவருக்குத் தகுந்த ரேட்!

தமிழர்களுக்கு 'ராக்கி' அறிமுகமாவது இரண்டு விதங்களில். அக்கம் பக்கத்திலுள்ள வீடுகளிலிருப்பவர்கள், அலுவலகத்தில் சேர்ந்து பணிபுரிபவர்கள், மற்றும் அறிமுகமானவர்கள் அன்பின் மேலீட்டில் கட்டும் 'ராக்கி'. தீப ஆரத்தி சுற்றி, திலகமிட்டு, லாகவமாக லட்டைப் போட்டு, ஒயிலாகப் பாட்டுப் பாடிக் கொண்டே 'ராக்கி' கட்டும் பிசினெஸெல்லாம் சினிமாச் சகோதரிகளுக்குத்தான்! நிஜ வாழ்வில் அட்சதைத் திலகம் மட்டும்தான்! வருடங்கள் பல உருண்டோடினுலும் ஊரை விட்டு ஊர் சென்ருலும், 'போஸ்ட்மேன்' தயவிலாவது கட்டாயம் 'ரக்ஷா பந்தனைக்' கொண்டாடியே தீருவார்கள். 'ராக்கி' சீஸனில் குறைந்தது மூன்று வாரங்கள் முன்பாவது 'ராக்கி' அனுப்பப்பட்டால்தான், போய்ச் சேர வாய்ப்புண்டு. பல சமயங்களில் சகோதரன் அனுப்பும் மணியார்டர் 'ராக்கி' போய்ச் சேர்வதற்கு முன்பே வந்து சேர்ந்திருக்கும்.

எல்லாவற்றிலும் பம்பாய்க்குச் சில ஸ்பெஷல்கள் இருப்பது போல் 'ராக்கி' விஷயத்திலும் சில ஸ்பெஷல்கள் உண்டு. தமிழர்களுக்கு 'ராக்கி' அறிமுகமாகும் இரண்டாவது விதம் இந்த 'ஸ்பெஷலிஸ்ட்' முறையில் தான். வீட்டில் ஓர் ஆண் மகன் இருந்துவிட்டால் போதும்! பில்டிங் வாட்ச்மேன் பெண்கள், வேலைக்காரிகளின் பெண்கள், பாக்டரி தொழிலாளர்களின் மகள்கள், பால்காரரின் புத்திரி சிகாமணிகள்... இப்படி ஒரு பெரும் படையே 'ராக்கி' கட்டுவதற்குத் திரண்டு வந்துவிடும். கட்டிய கையோடு காசுக்குக் கையேந்தும்.



## கப்புடுவின் நகைச்சுவை

**அண்மையில் பம்பாய் வந்த கப்புடுவிடம் 'லெக்சர்—கம்—டெமான்ஸ்ட்ரேஷன்' நிகழ்ச்சி அளிக்கும்படி கேட்டுக் கொண்டார் சங்கீத வித்வானும், அணுசக்தி நகர் பக்த ரசிக ரஞ்சனி சபாத் தலைவருமான பி. என். கிருஷ்ணமூர்த்தி. அதற்கு கப்புடு சொன்ன பதில்: "நான் 'லெக்சர்' செய்வேன். வெளியே எனக்கு எதிராக டெமான்ஸ்ட்ரேஷன் நடக்கும்."**

**— செம்பூரான்**

இது தவிர முன்பின் அறிமுகமேயில்லாதவர்களுக்குக் கூட ரயில்வே ஸ்டேஷன்களில், பஸ் ஸ்டாப்புகளில், ஆஸ்பத்திரிகளில் என்று பொதுவான இடங்களில், ராக்கி கட்டுவதற்கு ஒரு கூட்டம் தயாராக இருக்கும். அரசியல்வாதிகள் வீட்டு வாயிலில் அருகிலுள்ள குப்பங்களிலிருக்கும் தாய்க்குலமே திரண்டிருக்கும். இத்தனை ஏன்? அலிகள் சிலர் (பெரும்பாலும் தமிழர்கள்) மார்க்கெட்டுகளிலிருக்கும் கடைக்காரர்களுக்கெல்லாம் 'ராக்கி' கட்டிவிட்டு பலத்த வசூல் செய்வார்கள் என்ருல் பார்த்துக் கொள்ளுங்களேன்!

சில குறிக்கோள் 'ராக்கி'(ங்)களும் உண்டு: இப்படிப்பட்ட கட்டாய வசூல்களை, ரத்தச் சேமிப்பு வங்கிக்கோ, அனுதை ஆசிரமங்களுக்கோ தானமாகக் கொடுத்து விடுபவர்களும் உண்டு. (இப்படிப்பட்ட வசூல்களுக்கெல்லாம் பெரும்பாலும் அழகிய பெண்களே செயல்படுவர்.)

எது எப்படியிருப்பினும் 'ராக்கி' பண்டிகையின் நோக்கம் உயர்வானது. அதன் புனிதத்துவம் மாருமல் ரக்ஷா—பந்தன் கொண்டாடப்படுமாயின், மக்களிடையேயும் நாடுகளிடையேயும் சகோதரத்துவம் வளர உண்மையான உயர்வான வழி இது!

### நவராத்திரி

நவராத்திரி என்று பெயரிலேயே 'ராத்திரி'க்கு முக்கியத்துவமளிக்கும் பெரு விழா. ராத்திரியில் பூத்திருக்கும் பெரிய தாமரையாய் பம்பாய் நகரமே இந்த ஒன்பது இரவுகளும் மந்தகாசமாய் மலர்ந்திருக்கும். குறும்புமிக்க அரும்புகள் குதூகலத்துடன் கூடி, குயிலாகப் பாடி, கோலெடுத்து ஆடி,

கோலாகலிக்கும் திருவிழா இது!

ஆம்; ஒன்பது இரவுகளும் நகரெங்கிலும்; நாற்சந்திகளிலும் பெரும் வீதிகளிலும் தெரு வடைக்கப் பந்தலிட்டு, பல்புத் தோரணங்கள் மின்ன, கர்நாடகமும் கசமுசாவும் இணைந்த ஒரு சங்கீதப் பின்னணியில், (பெரும்பாலும்) வெள்ளியாலான அலங்கார மண்டபங்களில், 'ஜெகதம்பே மாதா' ஜெகஜ்ஜோதியாக எழுந்தருள்வாள்.

சூரனை தேவி வதம் செய்த அதே அடிப்படையில்தான் இங்கேயும் கொண்டாட்டம்; மகிஷாசுரனை வதம் செய்தது போல் வறுமையையும் 'சுதம்' செய்வான் என்ற எதிர்பார்ப்பிலோ என்னவோ, லாட்டரி சீட்டுகளும் லக்கி டிப்புகளும் அம்பிகையின் பெயரில் எக்கச்சக்கமாக இந்த சீசனில் உலா வரும்.

பம்பாயின் 'செட்டியார்'களான குஜராத்தியரும், 'கணக்கர்'களான தமிழர்களும் ஒருங்கிணைந்து வாழும் மாதுங்கா, காட்கோபர், முலுண்டு, அந்தேரி, போரிவிலி போன்ற பகுதிகளில்தான் இவ்விழா களை கட்டும்.

நம்மவர்களில் இடவசதி படைத்தவர்கள் கொலு வைத்து, மஞ்சள் குங்குமம் வழங்குவர். மஞ்சள் குங்குமத்திற்கென்று பல தமிழர்கள் வீட்டில் 'மினி இண்டியாவே' திரண்டிருக்கும். ஆம்! மராத்தி, குஜராத்தி, பஞ்சாபி, சிந்தி, தமிழ், தெலுங்கு, கன்னடம், கொங்கணி என்று — பில்டிங்கிலுள்ள அத்தனை பேரும் கொலுவை வேடிக்கை பார்க்கவென மஞ்சள் குங்குமத்துக்குத் திரண்டு வருவார்கள். அவர்களது கேள்விக் கணைகளைச் சந்திக்க நாம் நமது இதிகாச புராணங்களில், பழக்க வழக்கங்களில் 'தரோ'வாக இருக்க வேண்டும். விஷயம் தெரிந்தவர்களுக்கும், விளக்கிச் சொல்லக் கூடியவர்களுக்கும் இந்த விழா உண்மையான கலாசாரப் பரிவர்த்தனைக்கு வழிவகுக்கும். நம்மூர்ச் சுண்டலுக்கு நல்ல டிமாண்ட்; 'என்ன பாஜி (கறி காய்)யையெல்லாம் பிரசாதமாகத் தருகிறீர்கள்?' என்று வியப்பவர்களுமுண்டு.

குஜராத்தியர் கிருஷ்ண பக்தர்களென்பதால், டாண்டியா ரஸ்ஸில் கிருஷ்ண லீலைப் பாடல்களைப் புகுத்தி அதற்கேற்பப் பாடி, ஆடி தேவியை மகிழ்விப்பர். குஜராத்தியருடன் தமிழர்களும் இணைந்து, பளபளப்பான ஆடை அணிகலன்களுடன், பல சமயம் குஜராத்தி ஸ்டைலிலேயே, ஆடுவது கண்கொள்ளாக் காட்சியாக இருக்கும். விடிய விடிய நடைபெறும் இந்த ஆட்டத்துக்கு போட்டி, பரிசுகள் எல்லாம் கூட உண்டு. தூக்கப் பிரியர்களுக்கும், பம்பாய்க்குப் புதிதாக வந்துள்ள தமிழர்களுக்கும் இந்த ராத்திரிக் களியாட்டங்கள், தலைவலியாக இருந்தாலும் பழக்கப்பட்டவர்களுக்கு இதுவே தாலாட்டாக அமைந்துவிடும்.

காலத்துக்கேற்றாற்போல் தேவிகூட மாடர்னாக ஆக டிஸ்கோ டாண்டியாக்களையும், டாண்டியா ஷேக்ஸ் — டாண்டியா ப்ரேக்ஸ் களையும் ரசிக்கத் துவங்கி விட்டாள். அம்மனுக்கு நமது ப்ரேக் — ஷேக் திறமைகளையெல்லாம் காட்டுவதற்கென்று காசு கொடுத்து டிக்கெட் வாங்கி உள்ளே நுழைய வேண்டிய இடங்களும் உண்டு. பல போட்டிகளில் தமிழர் குழுக்கள் பரிசுகளைத் தட்டிச் சென்றிருக்கின்றன என்பது குறிப்பிடத்தக்கது!

எங்கேயிருந்தாலும், தனது தனித்தன்மையை இழக்காமல், தனது நாகரிகத்தைக் காப்பாற்றிக் கொண்டு, பிறரது நாகரிகத்தையும் கற்றுத் தேர்ந்து, அதில் ஒன்றி ஒருங்கிணைவதில் வல்லவர் தமிழர் என்பதற்கு இந்த விழாவும் ஓர் எடுத்துக் காட்டு!

## தீபாவளி

பம்பாயெங்கும் பரவலாக ஐந்து நாட்கள் கொண்டாடப்படும் பண்டிகை தீபாவளி. தீபாவளியின் முதல் நாளான 'தன்தரஸ்' அன்று புதிதாக வெள்ளியோ, தங்கமோ வாங்கினால் தனம் பெருகும் என்பர். நம்மவர்களிலும் பலர் அன்று நகைக் கடைகளில் படை எடுப்பதைக் காணலாம். உடலிலும் நகை, உதட்டிலும் நகையாகப் பலர் பவனி வருவர்.

தீபாவளியின் மூன்றாவது நாள்தான் பெரும்பாலும் நமது 'கங்கா ஸ்நானம்' அங்கு நடைபெறும். அடுத்த நாள் குஜராத்தியரின் புது வருடப் பிறப்பு. புதுவருடப் பிறப்பு என்னவோ குஜராத்திகளுக்குத்தான் என்றாலும், வேலை மெனக்கெட்டு ஒவ்வொரு வீடாகச் சென்று, 'ஹாப்பி நியூ இயர்' சொல்வார்கள். வீடுகளெங்கும், வீதியெங்கும் 'ஹாப்பி நியூ இயர்' முழக்கமாகவே இருக்கும். இதுவே பழகிப் போய் தமிழர்களும் எதிர்ப்பட்டவர் கன்னடர், தெலுங்கர், பஞ்சாபி, குஜராத்தி, மராத்தி, சிந்தி என்று யாராக இருந்தாலும் அவர்களுக்கும் புது வருட வாழ்த்துக்களைத் தெரிவிப்பர். நகரெங்கிலும் மக்கள் நண்பர்கள், உறவினர்கள் வீட்டுக்குச் செல்வதும், வாழ்த்துக்களைத் தெரிவிப்பதுமாக இருப்பார்கள். குஜராத்திகளுக்கு ஒப்பாக, தமிழர்களது வரவேற்பறைகளிலும் விதவிதமான தட்டுகளில் வண்ண வண்ணமான இனிப்புக்கள் நம்மைநோக்கிக் கண்சிமிட்டும்.

இந்நன்னாளில் துயர் துடைப்புப் பணிகளில் ஈடுபடும் தமிழர்கள் ஏராளம்! நல்லுள்ளம் படைத்த தமிழர் நற்பணி கழகங்கள் எண்ணற்றவை. ஏழை எளியவர்களுக்குப் புத்தாடைகளும், பட்டாசுகளும் வழங்குவதோடன்றி, மேற்படிப்புக்கு உதவி, வீட்டு வசதி, தரும திருமணங்கள் போன்ற நிலையான பயன் தரக்கூடிய சீரிய பணிகளையும் செவ்வனே நடத்தி முடிக்கப் பல தமிழர் குழுக்கள் செயல்படுகின்றன.

கொண்டாட்ட குதூகலங்களுக்கிடையே, நம்மில் மெலியாரை எண்ணி, பகிர்ந்துண்டு பல்லுயிரோம்பி, அவர்கள் இதயத்திலும் இன்ப ஒளியை ஏற்றுவிப்பதால் பம்பாயில் தீபாவளி ஓர் ஒப்புயர்வற்ற விழாவாய்க் கோலோச்சுகிறது.

— சரண்யா

# வாழ்க்கை வாழ்வதற்கே!

"சுலபமாகக் கூறிவிடலாம் 'வாழ்க்கை வாழ்வதற்கே' என்று; ஆனால் எங்கே முடிகிறது? விடிந்தால் எத்தனை பிரச்னைகள்! இதில் வாழ்க்கையை அனுபவிப்பது எப்படி சாத்தியம்?" — இப்படிக் கேட்கும் முணுமுணுப்பு ஒரு பக்கம்.

'வாழ்க்கை வாழ்வதற்கே' என்று சொல்லிச் சொல்லி, அப்படியே நடந்து கொண்டு சீரழிஞ்சு போனாண்டா; எல்லாக் கெட்ட பழக்கங்களுக்கும் அடிமையாகி மீள முடியாம தவிக்கிறான்' என்று ஒலிக்கும் குரல் இன்னொரு பக்கம்.

ஒரு தரப்பினர், பிரச்னைகளையே நினைத்து நினைத்துக் கவலைப்பட்டு வாழ்க்கையை அனுபவிக்க மறக்கின்றனர்; இன்னொரு தரப்பினர், 'கட்டுப்பாடு இழந்த வாழ்க்கை குட்டிச் சுவர்' என்பதை மறந்தனர். நிறைவான வாழ்க்கை என்பது இந்த இரண்டுக்கும் இடையில் ஒரு நல்ல பாதையை அமைத்துக் கொள்வதுதான். அந்தப் பாதையைத் தார் ரோடு போல அரசு நமக்கு அமைத்துத் தர முடியாது. நமக்கு நாமேதான் உள்ளத்தைச் செம்மைப்படுத்தி உருவாக்கிக் கொள்ள வேண்டும். இந்த முயற்சியில் தடங்கல்களை எப்படி வெற்றி கொள்வது; எதைத் தவிர்ப்பது; எதைச் செய்வது? — இதுபற்றிச் சிந்திப்பதே இந்த ஒரு பக்கக் கட்டுரைத் தொடரின் நோக்கம். இதில் நீங்களும் பங்கேற்க வேண்டும். உங்கள் யோசனைகளை வாழ்க்கை அனுபவங்களோடு இணைத்துக் கூற வேண்டும். வாசகர்களிடையே நடக்கும் ஒரு பயனுள்ள கலந்துரையாடல் போல இப்பகுதி வளர வேண்டும். உங்கள் எண்ணங்களை எழுதும்போது தயவு செய்து உறையின் மேல் "வாழ்க்கை வாழ்வதற்கே" என்று மறவாமல் குறிப்பிட்டு விடுங்கள்.

என் நண்பர் ராகவன் ஆபீஸிலிருந்து வந்ததும், 'உஷ்' என்று ஒரு பெருமூச்சு விட்டபடி லுங்கி பனியனுக்கு மாறுவார். ஃபேனைச் சுழலவிட்டு விட்டு டி. வி. எதிரே சாய்வு நாற்காலியில் சரிவார். அவ்வளவுதான். டிபன் — காப்பி, இரவுச் சாப்பாடு



எல்லாம் அந்த நாற்காலிக்கருகில்தான் வர வேண்டும். என்ன சாப்பிட்டோம் என்பதே தெரியாது! ருசிப்பது எங்கே? இரவு நியூஸ் முடிந்ததும் இன்னொரு 'உஷ்' பெருமூச்சுடன் எழுந்து போய்த் தயாராக விரிக்கப்பட்டுள்ள படுக்கையில் விழுவார். பிறகு காலையில் ''காப்பி'' என்ற குரல் கேட்கும் வரை 'கொர் கொர்' தான்! அப்புறம் ஆபீஸ் கிளம்பும் பரபரப்பு.

குடும்ப வாழ்க்கையின் மிகப் பெரிய எதிரியாக ம. வி. விளங்குகிறது. இல்லற இன்பத்தின் மீது போர் தொடுத்து அழித்து விடுகிறது. மனைவி மக்களிடம் பேசவே ம. வி. அனுமதிப்பதில்லை என்னும் போது வெளியே அழைத்துப் போவதாவது ஒன்றாவது? அப்படியே நண்பர்கள் வீட்டுக்குப் போனாலும் அவர்களும் ம. வி. பார்த்துக் கொண்டிருப்பார்கள். நாமும் அவர்களுடன் சேர்ந்து சிறிதுநேரம் ம. வி. நம்மை ஆட் கொள்ள அனுமதித்துவிட்டுத் திரும்ப வேண்டியதுதான். குடும்பப் பாசம், நட்பு முதலிய உணர்வுகள் படிப்படியாக அழிந்து வருகின்றன. மனைவி நமக்காக அலங்கரித் துக் கொண்டிருக்கிறாளா? குழந்தைகள் வீட்டுப் பாடம் செய்தனவா? என்று பார்ப் பதோ, கேட்பதோ இல்லை. தோட்டத்தில் மனைவி அரும்பாடு பட்டு வளர்த்த மல்லிகை அரும்பு விட்டிருக்கிறதா, தெரியாது! பௌர் ணமியன்று நிலாச் சாப்பாடு வைத்துக் கொள்ளலாமா — முடியாது! அஸ்தமன சூரியனை ரசிப்பது, நட்சத்திரங்களை நோக்கிக் கண்சிமிட்டுவது, கடல் அலைகள் காலைக் கிச்சுகிச்சு மூட்ட நிற்பது, குழந்தைகளுடன் கொஞ்சி விளையாடுவது எல்லாம் மறந்தே போயிற்று. இந்த லட்சணத்தில் நல்ல நூல் களைப் படிப்பது எங்கே?

ம. வி. நிகழ்ச்சிகளின் தரம், அவற்றின் விளைவுகள் என்பது முற்றிலும் வேறு விஷ யம். அதுபற்றிப் பிறகு ஒரு சமயம் யோசிக்க லாம். ஆனால் அடிப்படையான விஷயம் நமது மனோதிடத்துக்கு ம. வி. ஒரு சவாலாக அமைகிறது என்பதுதான். கையை நீட்டி குமிழினை இடப்புறமாகத் திருப்புவது வெகு இலகுவான செயல். ஆனால் அதைச் செய்ய நம்மால் முடிவதில்லையே? நிகழ்ச்சி பிடிக்க வில்லை என்றால் கூடப் பார்க்கிறோமே, ஏன்? சினிமா பிடிக்கவில்லை என்றாலும் 'காசு கொடுத்தாகி விட்டது, பார்த்துத் தொலைப் போம்' என்று எண்ணலாம். அந்தச் சமாதானம் கூட ம. வி. விஷயத்தில் செல்லு படியாகாதே! உண்மை என்னவென்றால் மது அல்லது கஞ்சா போல ம. வி. யும் ஒரு போதைப் பொருளாகி, பலரை அடிமைப் படுத்தி வருகிறது.

காலை எழுந்ததும் கடிகாரத்துக்கு அடிமை; காரியாலயத்தில் வேலைச் சுமைக் கும் மேலதிகாரிக்கும் அடிமை; வீடு திரும்பி யதும் ம. வி.க்கு அடிமை; இரவு தூக்கத்துக்கு அடிமை! 24 மணி நேரமும் அடிமைவாழ்க்கை தான்!

— ஜீவன்



டைரக்டர்: உங்க கதையும் வசனமும் மகா மட்டம்!

கதாசிரியர்: அதுக்காக கதை விசனம் கந்தசாமின்னு டைட்டில்ல போட் டுடறதா?

— க. ராஜாஜி



டாக்டர்: வயிற்று வலின்னு சொல்றே, கழுத்தை எதுக்குத் தடவறே?

நோயாளி: மனைவிகிட்டே வயிற்று வலின்னு சொன்னேன். அவ, 'உங்களுக்கு ஏதாவது ஒண்ணு இருந்துகிட்டே இருக்கும்'னு சொல்லி கழுத்திலே ஒரு இடி இடிச் சிட்டா டாக்டர்!

— கல்பாக்கம் ராஜு



''தெருவிலே போகிற அழகான பெண்களை, 'மம்மி' என்று நான் அழைத்தால் சந்தோஷப்படுகிற அப்பாவுக்கு, அழகான ஆண்களை 'டாடி' என்று நான் கூப்பிட்டால் மட்டும் கோபம் வருகிறதே, அது ஏன்?''

# புதிய பம்பாய்; புதிய தமிழ்ச் சங்கம்; பழைய பிரச்னை!

* மக்கள் தொகைப் பெருக்கத்தால் ஏற்படும் விளைவுகளைக் கருத்தில் கொண்டு, தாணே வளைகுடாவிற்கு அப்பால் வளர்ந்து வரும் புறநகர்ப் பகுதிதான் புதிய பம்பாய்.

* 3 கிலோ மீட்டர் நீளமுள்ள, இரண்டு கோடி ரூபாய் செலவில் கட்டப்பட்டுள்ள பாலம் ஒன்று புதிய பம்பாயையும், 'பழைய' பம்பாயையும் இணைக்கிறது. புதிய பம்பாய் சரியான முறையில் வளர்ந்தால் அதில் இருபது லட்சம் பேர்கள் வசிக்கலாமாம்.

* இந்தப் புதிய இடத்திற்கு ரயில் போக்குவரத்து ஏற்படாததனால் பஸ்களை நம்பித்தான் மக்கள் இங்கிருந்து வேறிடங்களுக்குச் செல்கிறார்கள்.

* புதிய பம்பாய் வழியாகச் செல்லும் ரயில் பாதை அமைப்பதற்காக் மத்திய அரசு நூறு கோடி ரூபாய் அளிக்கும் என்று ராஜீவ் காந்தி வாக்களித்திருக்கிறார்.

* புதிய பம்பாயில் சுமார் நானூறு தமிழ்க் குடும்பங்கள் வாழ்கின்றன.

* ஒருசிலதமிழன்பர்களின் முயற்சியினால் 1977 ஆம் ஆண்டு புதிய பம்பாய்த் தமிழ்ச் சங்கம் உருவாகியது. சங்க நிர்வாகிகள் குறைந்த விலைக்கு, பஸ் ஸ்டாண்டிற்கு அருகில் ஓர் இடத்தையும் வாங்கி விட்டனர். இடம் வாங்கிய மூன்று வருடத்திற்குள் கட்டட வேலையைத் துவங்க வேண்டும் என்பது விதி. ஆனால் நிதி வசதியில்லாததால், இருக்கிற இடமும் போய்விடக் கூடாதே என்ற பயத்தில், சின்னதாக ஓர் அலுவலகத்தை மட்டும் அமைத்திருக்கிறார்கள்.

* ஏறத்தாழ அதே சமயத்தில் துவக்கப்பட்ட வங்காள, கன்னட, ஆந்திர சங்கங்கள் கட்டடங்கள் அமைப்பதில் முழு மூச்சுடன் ஈடுபட்டிருக்கின்றன.

* நமது தமிழர்கள், பண வசதியில்லாமல் தமிழக அரசிடம் பல வேண்டுகோள்கள் விடுத்தும், இதுவரைக்கும் உதவியொன்றும் கிடைக்கவில்லை. எடுத்த பணியை வெற்றிகரமாக முடிக்க இயலாமல் கலங்கும் தமிழர்களுக்கு, தமிழக அரசும், பம்பாய் வாழ் தமிழன்பர்களும்தான் உதவ வேண்டும்.

— செம்பூரான்




பம்பாயின் பிரதானப் பகுதியான வொர்லியில் அண்ணா தி. மு. க. கொடி பறக்கிறது. இங்கே தமிழர்கள் வாழும் பகுதிக்கு அண்ணா நகர் என்று தமிழிலேயே போர்டு மாட்டப்பட்டுள்ளது.

# அதிகமாக உளறும் வளவளவாதி யார்?



* அக்கறை



* புது காஸ்ட்யூம்

* கே. பி. கணேசன், சென்னை — 78.

? 'மக்கள் மகிழ்கிறார்களோ இல்லையோ, பல தினசரிகளுக்குச் சாதனை விளம்பரங்கள் 2 — 3 பக்க அளவில் கிடைக்கின்றனவே' என்று எழுதியிருக்கிறீரே? அதே விளம்பரம் கல்கிக்குக் கிடைத்தால் பிரசுரிக்காமல் இருந்து விடுவீரா?

! விளம்பரம் பிரசுரிப்பது என்பது வேறு; சாதனைகளை விமர்சிப்பது என்பது வேறு. சாதனை விளம்பரங்களைப் பெற்றுப் பிரசுரித்துள்ள ஹிந்து, எக்ஸ்பிரஸ் நாளிதழ்கள் கூட தமிழக அரசின் சாதனைகள் திருப்திகரமாக இல்லை என்று எழுதியுள்ளன — அழுத்தம் திருத்தமாக.

* பி. எல். பரமசிவம், மதுரை — 1.

? டி. வி. யில் தீபக் பூனை பேசியதைக் கேட்டீரா?

! 'அப்பா, அம்மாவை எப்படிக் கூப்பிடுவா?' என்றதும் ''டீ மங்களம்!'' என்று சொன்னது டாப்! பாவம், அந்தப் பூனை செத்துப் போய் விட்டதாமே!

* தே. செல்வராஜ், கொப்பம்பட்டி.*

? லஞ்சம் என்பதற்கு மாற்றுப் பெயர்கள்?

! பள்ளிக்கூடங்களில் கட்டட நிதி, டொனேஷன்; கல்லூரிகளில் காப்பிடேஷன் ஃபீ; அரசு பொதுத்துறை நிறுவனங்களில் ஸ்பீட் மணி; தேர்தல்களில் அன்பளிப்பு; இலக்கிய பூர்வமாகக் கையூட்டு; கீழ்மட்ட ஊழியரிடையே நம்மளை கவனிச்சுக்க நயினா அல்லது வெட்டுங்க, தள்ளுங்க; பத்திரிகை உலகில் கவர்.

* இரா. சுவாமிநாதன், சீர்காழி.

? சமீபத்தில் உங்களுக்கு ஆத்திரமூட்டிய சம்பவம்?

! பாட்னா மருத்துவமனையில் உயிர் காக்க வேண்டிய டாக்டர்கள் குருதி குடிக்கும் டிராகுலாக்களை விடப் பயங்கரமான அரக்கர்களாக மாறியதுதான். ஆபரேஷனைப் பாதியில் விட்டு விட்டுப் போனதும், முகத்திலிருந்து பிராண வாயுக் குழாயையும், கரத்திலிருந்து ரத்தம் செல்லும் குழாயையும் நீக்கியதும் மன்னிக்கவே முடியாத கொலை பாதகச் செயல்கள். என்னதான் அவர்களுக்குக் குறைகள் இருந்தாலும் டாக்டர்களின் வேலை நிறுத்தம் என்றாலும் இப்படி நோயாளிகள் உயிருடன் விளையாடுவதும் அவர்களின் வேதனைகளை அதிகரிக்கச் செய்வதும் அதி பயங்கரம். நமது கல்விக்கூடங்களில் பாடத் திட்டத்தில் உள்ள குறைபாடுகளை இச்சம்பவம் எடுத்துக் காட்டி, கவனிப்பை வேண்டி ஓர் அவசர அழைப்பை விடுக்கிறது. டாக்டர் படிப்பில் மனிதாபிமானம் மறைந்து அது முழுக்க முழுக்க வியாபாரமாகி விட்டதையும் உணர்த்துகிறது.

* ஜி. நீலா, மன்னார்குடி.

? வாள் என்பது ஞானத்தின் சின்னம் என்று குன்றக்குடி அடிகளார் கூறியுள்ளாரே?

! கூர்மதி என்று கூறுவதுண்டு. ஞான வேல் என்றும் கேள்விப்பட்டிருப்பீர்கள். ஆங்கிலத்தில் கூட Razor sharp brain என்று சொல்வார்கள்.

* கனீல் ரகுமான், பொள்ளாச்சி.

? நடிகை நதியா உடை விஷயத்தில் அதிக அக்கறை காட்டுவது ஏன்?

! எல்லாரும் அனுராதா, டிஸ்கோ சாந்தி போல ஆடை விஷயத்தில் அக்கறை காட்டாமல் இருக்க முடியுமா?

* சுமாலி, மேலப்பாலையூர்.

? சன்னியாசி உடை உடுத்த என். டி. ஆர். இப்போது விவேகானந்தர் ஆடை அணிந்துள்ளாரே?

! சினிமாவில் புதிய புதிய காரக்டர் ரோல்களில் நடித்த பழக்கத்தில் இப்படி காஸ்ட்யூம் மாறுகிறாரோ என்னவோ! சர்க்கஸ் கோமாளி உடையில் தோன்றாமலிருந்தால் சரி!



* ஆயுத அரசியல்



* சிந்து சிரிப்பு



* வளவள வாதி



* ஞானத்தின் சின்னம்

## நீங்கள் கேட்டவை — தராசு

* சரவணன், தஞ்சை.

? பஞ்சாபில் உள்ள ஹிந்துக்களுக்குத் தங்களைப் பயங்கரவாதிகளான சீக்கியரிட மிருந்து தற்காத்துக் கொள்ள ஆயுதம் வழங்க வேண்டும் என்று வாஜ்பாய் கூறி இருப்பது பற்றி...?

! இங்கே எம். ஜி. ஆரானாலும் சரி, அங்கே வாஜ்பாய் ஆனாலும் சரி, ஆயுதம் தாங்கு மாறு "அறிவுரை" கூறுவது ஆரோக்கிய மானது அல்ல.

* கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.

? இலங்கைப் பிரச்னை தீராததால் ராஜீவ் இரவு முழுவதும் சில தினங்கள் தூங்குவ தில்லை என்று வி. பி. சிங் கூறியுள்ளாரே?

! நம்ப முடியவில்லை. இன்று தென் ஆப்பி ரிக்காவின் நிறவெறிக் கொள்கையை எதிர்த்து காமன்வெல்த் விளையாட்டுக் களில் இந்தியா பங்கேற்காது என்று அறிவிக் கும் ராஜீவ், அப்பாவித் தமிழர்கள் ஈழத்தில் படுகொலை செய்யப்பட்டு வருகின்ற போது கிரிக்கெட் ஆட இந்திய அணி இலங்கை சென்றதை அன்று தடுக்கவில்லையே!

* ஆர். ஜி. சிவக்குமார், பழனி.

? ரேவதி, ராதா — யார் சிரிப்பு அழகு?

! இவ்விரண்டில்ஒன்றுஎன்றால்நான்தேர்ந் தெடுப்பது குயில். ஆனாலும் சிந்து சிந்துகிற சிரிப்புக்குத்தான் முதல் வோட்டு.

* எம். சிவகுமார், குடியாத்தம்.

? ஐ. ஏ. எஸ். தேர்வில் தமிழ்நாட்டில் மூன்று பேர் மட்டுமே தேறியுள்ளது எதைக் காட்டுகிறது?

! பத்தாண்டுப் பொற்காலத்தில் நடந்த அனந்த கோடி சாதனைகளில் இதுவும் ஒன்று. வேறென்ன?

* ரவி, தேனி.

? மேற்கு வங்க முன்னாள் காங்கிரஸ் எம். எல். ஏ. மகாதேவ் முகர்ஜி பிச்சை எடுத்துச் சாப்பிடுகிறாராமே?

! மேற்கு வங்கத்தில் கம்யூனிஸ்ட் கட்சி தொடர்ந்து ஆட்சியில் இருந்து வருவதால் இவருக்குப் பணம் பண்ண வாய்ப்பில் லாமல் போயிற்று அல்லது மெய்யாலுமே நேர்மையானராய் இருந்து வந்திருக்கிறாரா? காரணம் பின்னதாக இருந்தால் கையெடுத் துக் கும்பிடுகிறேன் — இந்த அபூர்வப் பிற வியை!

* வி. பாலன், கொடைக்கானல்.

? அதிகமாகஉளறிபொதுமக்களைக்கோபத் துக்கு உள்ளாக்கும் வளவள வாதி யார் யார்?

! குண்டு ராவை மிஞ்ச அந்த விஷயத்தில் எந்த அரசியல்வாதியாலும் முடியாது. அஞ்சையாவைக் கோமாளி என்று வர்ணித்த இவர்தான் பாரதத்தின் தலை சிறந்த பஃபூன் பட்டத்தைப் பெறக் கூடி யவர். காங்கிரஸிலிருந்து தாம் வெளியேற் றப்பட்டதை எதிர்த்து நீதிமன்றம் போவா ராம்! அதுதான் போகட்டும் என்றால் ராஜீவ் கட்சித் தலைவராக இருப்பது சட்ட விரோத மாம். ஒரு "சர்வதேச அணி" பிரதமரைக் கைக்குள் போட்டுக் கொண்டு நாட்டை ஆள்கிறதாம்! உளறலுக்கு ஒரு வரம்பே இல்லாமல் போய்விட்டது போங்கள்!

* ரூ. 10 பரிசு பெறுபவர்:

கே. செல்வராஜ்,
கொப்பம்பட்டி அஞ்சல்,
துறையூர் வட்டம், திருச்சி மா.வ.,
— 621 012.

# வேலை கிடைக்க ஒரு வழி!



















Printed by V. Murali and Published by V. Vaidyanathan on behalf of Messrs Bharathan Publications Private Limited, at the Bharathan Press, Race Course Road, Guindy, Madras-600 032. (Phone: 431543).

Assistant Editor: P. S. Mani.

Editor: K. Rajendran.

# வென்றிடும் தரம்.
# ஈடுநிற்கமுடியாத
# விலைநயத்திலே!

| | 500g | 1kg | 500g Refill |
|---|---|---|---|
| Nutramul | 17·08 | 33·01 | — |
| Maltova | 22·80 | 43·75 | 20·95 |
| Boost | 22·33 | — | 21·92 |
| Bournvita | 22·81 | 43·76 | 20·95 |

இதன் வகையிலுள்ள இதர ரகங்களோடு ஒப்பிட்டுப் பாருங்கள் நியூட்ரமுல் விலைகளை. அனைத்தையும் விட மிக மிகத் தாழ்வு.
இதன் தரம் பிறவற்றை விட எப்படி மிக உயர்வாக இருக்கிறதோ அதேபோலத்தான்.




**கேட்டீர்களோ என்னவோ, இதோ இன்னுமொரு காரணம் 'நியூட்ரமுல் வஸ்தாத்'தாக விளங்க.**

**நியூட்ரமுல்**

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka



